# வானத்தை தொட்டவன்

ஆசிரியர்

என்.சி.மோகன்தாஸ்

மூலங்கள் பெற்றது

*GNU* அன்வர் *- gnukick@gmail.com*

அட்டைப்படம் - மனோஜ்

*socrates1857@gmail.com*

மின்னூலாக்கம் - தனசேகர்

*tkdhanasekar@gmail.com*

மின்னூல் வெளியீடு *: [http://www.freetamilebooks.com](http://www.freetamilebooks.com)*

# பொருளடக்கம்

## *1. பசு*

*ஒன்பது மணிக்குப் பள்ளிக்கூடத்திலிருந்து மணி சப்தம் கேட்கவே. வெறும் கட்டிலில் படுத்திருந்த தாத்தா மெல்லத் தலையைத் தூக்கி... 'ஏய்... பாலு! " ஏய்... பாலு! மொத மணி அடிச்சிட்டான் போலிருக்கே... போகலியா நீ..?" என்று எழ முயன்றார்.*

*அது நைந்த கட்டில். கயிறுகள் ஆங்கங்கே முடிச்சுப் போடப்பட்டு ஊஞ்சல் போல் தொங்கிற்று. மூங்கிலின் விரிசலில் மூட்டைகளின் குடியிருப்பு!*

*அவர் இடுப்பைப் பிடித்துக் கொண்டு எழுந்து. என்னவோ அதையே அசுர சாதனை செய்து விட்டது போல களைப்பில் மூச்சு வாங்கி. "பாலு! அங்கே என்ன பண்ணிட்டிருக்கே?" என்றார் தொழுவம் பக்கம் திரும்பி.*

*"பசுவுக்கு தவிடு! " நான்காம் கிளாஸ் பாலு சொல்லிவிட்டுத் தொட்டியில் தவிடு கொட்டி முழங்கைவரை உள்ளே செலுத்திக் கலக்கினான்.*

*"ம். தின்னு! "*

*பாலு கை கழுவிக் கொண்டு திரும்பிப் பார்க்க, பசு தவிடு தின்னாமலே நின்றிருந்தது.*

*"ஏய்... தின்னு! " என்று அதன் வாயைத் தொட்டியில் அழுத்தினான். அது திமிறிற்று. தலையை உதறிற்று.*

*"அம்மா" என்று குரல் கம்ம, அலறிற்று. அப்படி அலறும்போது அதன்அடி வயிறு எக்கிற்று. வாலைத் தூக்கி, சடசடசென மூத்திரம் போயிற்று. அந்த அலறல் சாதாரணமானதில்லை. அதில் ஏதோ ஒரு வித்தியாசமிருந்தது.*

*தெருவில் மாடுகள் மேய்ச்சலுக்கு மணியாட்டிக் கொண்டு போய்க் கொண்டிருக்க. பசு மறுபடியும் "அம்மா... ! "*

*"ஏய்... உனக்கு என்னாயிற்று? ஏன் இப்படி கத்துகிறாய்?" என்று அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டு கேட்டான். அதன் உடலெல்லாம் சுடுகிற மாதிரி இருந்தது. கண்களில் ஒரு விதப் பரிதவிப்பு.*

*உடம்பு சரியில்லையோ!*

*"பாலு! ரெண்டாம் மணி அடிக்கப் போறான். நீ இன்னும் போகலியா...?"*

*"தாத்தா! அம்மாவுக்குக் காய்ச்சல் போலிருக்கு. டாக்டர்ட்ட சொல்லி மருந்து வாங்கி வரட்டா.."*

*"அதெல்லாம் ஒண்ணுமில்லை. நீ கிளம்பு! "*

*"தவிடு திங்கல. வைக்கோல் தொடலை. மேய்ச்சலுக்கு இன்னைக்கு அனுப்ப வேணாம்! "*

*அப்போது பசு. "அம்மா" என விகற்பமாய்க் கத்த. "பார்த்தியா தாத்தா.. இப்படித்தான் நாலைஞ்சு நாளாய் கத்திகிட்டிருக்கு! என்னென்னே தெரியலை."*

*“அமாவாசை வருதில்லே.. அப்படித்தான் கத்தும! நீ கிளம்பு! “*

*“அமாவாசைக்கும் பசு கத்தறதுக்கும் என்ன தாத்தா சம்மந்தம்...? எனக்கு புரியலே.“*

*“உனக்குப் புரியாது. நீ புறப்படு! “*

*“அம்மாவைத் தனியா விட்டுட்டுப் போக எனக்கு மனசே இல்லை தாத்தா! இது கத்தறதைப் பார்த்தா எனக்கு அழுகை அழுகையாய் வருது! “*

*“எல்லாம் நான் பார்த்துக்கறேன். பள்ளிக்கூடம் விட்டு வரும் போது பாரு... இவ கத்தாமல் சந்தோஷமாயிருப்பாள். சாந்தமாயிருவா“*

*பாலுவிற்கு வகுப்பில் கவனம் செல்லவில்லை. பசுவின் அந்த ஓலமே காதில் ரீங்கரித்துக் கொண்டிருந்தது.*

*டீச்சர். தாயின் பெருமை பற்றி பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.*

*“இந்த உலகத்தில் தாய்க்கு இணையாக ஒப்பிட வேறு எதுவுமே இல்லை ஒரு தாய் என்பவள் மெழுகுவர்த்தி போன்றவல். தன்னை உருக்கி குடும்பத்திற்கு வெளிச்சமேற்றிக் கொண்டிருப்பவள். கணவன். குழந்தை என்று வேணிப் பாதுகாப்பவள். ‘ஏய் பாலு! அங்கே தலைகுனிஞ்சுகிட்டு என்ன பண்ணுகிறாயாம். தூங்குகிறாயா...?“*

*அவன் நிமிர. “என்னாச்சு உனக்கு... ஏன் அழுகிறாய்?“*

*“எனக்கு அம்மா நினைப்பு எடுக்குது டீச்சர்! நான் அனாதை! “*

*“சேச்சே! இப்படிவா! “ என்று அவனை அரவணைத்துக் கொண்டு, “இந்த உலகில் யாருமே அனாதை இல்லை. உனக்குத்தான் தாத்தா இருககாரே! “*

*“அன்பு செலுத்த ஆளில்லை டீச்சர்.“*

*“ஏண்டா அப்படி நினைக்கிறாய். உங்க வீட்டில் பசு இருக்கிறது. அதைவிட வேறு யாரால் அன்பு செலுத்திவிட முடியும்? அதுவும் உன் தாய் போலத் தான்! தாயைப் போலவே பசுவும் பிறருக்காக வாழ்கிற ஜீவன்தான்! அதை நீ நேசி. அதை உன் தாயாக நினைத்து சமாதானப்படு. என்ன தெரிஞ்சுதா? அதற்கு எந்தத் துன்பமும் வராமல் பார்த்துக்கொள்! “*

*டீச்சரின் வார்த்தைகள் அவனது மனதைத் தைத்தன. ‘சே! அம்மா பசுவுக்கு உடல் நிலை சரியில்லாத போது அவளை, கவனிக்காமல் நான் இங்க உட்கார்ந்திருக்கிறேனே. நான் மடையன்! புதிதியில்லாதவன்! அம்மா உயிருடன் இருந்திருந்தால் இப்படி அலட்சியமாட்ய இருப்பாளா...? உடன் வீட்டுக்குப் போகணும். பசுவை டாக்டரிடம்...‘*

*அப்போது இன்ர்வெல் பெல்!*

*பிள்ளைகள் இரைந்து கொண்டு புளியமரத்தை நனைக்க ஓட, அவன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான். சீக்கிரம்...சீக்கிரம்!*

*மூச்சிறைக்க நடந்து தொழுவத்துக கதவைத் திறந்தவனுக்கு ஏமாற்றம். அங்கே பசுவைக் காணவில்லை!*

*‘எங்கே போயிற்று? மேய்ச்சலுக்கு ஓட்டிப் போயிருப்பார்களோ? இந்தக் கடுமையான வெயிலில் அது எப்படி நடந்து போகும்! அவனுக்குத் தாத்தாவின் மேல் கோபம் கோபமாய் வந்தது. வயசாகிவிட்டதே தவிர பெரிசுக்குப் புத்தியில்லை. எத்தனை தரம் எடுத்துச சொன்னேன். நான் பார்த்துக கொள்கிறேன் என்று இப்போது.....‘*

*“தாத்தா.... ! என்று அலறினான்.*

*தோட்டத்தில் கவமுள்ளை அடுப்பிற்கு வேண்டி சின்னச் சின்னதாய் வெட்டிக் கொண்டிருந்தவர். “என்னடா.. பள்ளிக்கூடம் அதுக்குள்ளே விட்டிருச்சா...?“ என்றார்.*

*“இல்லை. இன்டர்வெல். பசு எங்கே?“*

*“வெளியே ஓட்டிப் போயிருக்காங்க.“*

*“எதுக்கு?“*

*“அதெல்லாம் உனக்கு ஏன்? நீ பாட்டிற்கு உன் ஜோலியைப் போய் பார்! “*

*“....இல்லை எதுக்குன்னு தெரிஞ்சாகணும். சொல்லு தாத்தா. எதுக்காக ஒட்டிப் போனாங்க?“*

*“காளைக்கு“*

*“அப்படின்னா?“*

*“பசு சினைபடத் தான்“*

*“எதுக்கு சினைபடனும்?“*

*“இவன் பெரிய கலெக்டர்! கேள்வி மேல் கேள்வியாய் கேட்கிறான்! மணியடிச்சுட்டான். போடா – ஸ்கூலை பார்த்து. பல்லு பேந்துரும்! ‘*

*“எங்கே ஒட்டிப் போனாங்கன்னாவது சொல்லு தாத்தா! “*

*“புளியந்தோப்பு. போதுமா ஆளை விடு! “*

*பாலு உடனே புளியந்தோப்பை நோக்கி ஓட ஆரம்பித்தான்.*

*புளியங்தோப்பிள் ஆட்கள் வேப்பங்குச்சியால் பல் தேய்த்துக் கொண்டு பரவலாய் நின்றிருந்தனர். வெற்று மாப்பு: எண்ணெய் வழியும் முகம், ஒவ்வொருவரும் தங்கள் கையில் ஒரு பசுவைப் பிடித்திருந்தனர். பெரிய புளிய மரத்தின் வேரில் காளை ஒன்று மொழுக் மொழுக் சதையுடன் கட்டப்பட்டிருந்தது. அதன் உடல் முழுக்க சதைதொங்கிற்று.*

*அதற்கு வாட்டமான கொம்புகள்! காரியக்காரன் மூக்கணாங்க கயிற்றுடன் தாம்புக் கயிறு மாதிரி மொத்தமான கதம்ப கயிற்றைச் சேர்த்துக கட்டி தன் கையில் பிடித்திருந்தான்.*

*“காரியக்காரரே... பார்த்தால் சின்னக் காளையாய்த் தெரியறதே! பசு பலப்படுமா..?“*

*“பலப்படுமாவா? இளங்காளை! முரட்டுக்காளை! “ என்று தட்டிக் கொடுத்தான்.*

*“நிச்சயம் தப்பாது! பசுவுக்குக் கப்புன்னு பிடிச்சுக்கும்! “ என்று அவன் தன் மீசையைத் தடவிவிட்டுக் கொண்டான். அவன் அந்த காளையைவிட துடிப்பாயிருந்தான்.*

*“என்னடா ராஜா... நீ தயார் தானே!“ என்று அதன் அடிவயிற்றுக்குக் கீழ் தட்ட, அது ஜிவ்வென உடலை முறுக்கிற்று. திமிறிக் கொண்டு நின்று தலையை உதறிற்று. ரோஷம்!*

*“ம். ஒவ்வொன்னா வரட்டும்! என்ன யோசனை....? டாக்டர் ஊசி போட்டுப பலம் பிடிக்காமல் போனாலும் போகலாம். என் ராஜாவிடம் தப்பவே தப்பாது! கொண்டு வாங்கய்யா பசுவை!“*

*பாலு வியர்த்து விறுவிறுத்து புளியந்தோப்பை அடைந்தபோது ஏறக்குறைய ஊர்ப் பசுவெல்லாம் போய்விட்டிருந்தது. அவனது பசு மட்டும்தான் பாக்கி.*

*முண்டாசு கட்டின பக்கத்து வீட்டுக்காரர் பசுவை “தா... தா... அப்படிப் போய் நில்லு“ என்று காளைக்கு முன்னால் நிறுத்தினார். பசு மிரட்சியுடன் நிற்க. “இப்படி திரும்புன்னா...“ என்று அதைப் பிடித்துத் திருப்பினார்.*

*“காரியக்காரரே... ம்! ஆகட்டும்!“*

*“ராஜா!“ என்று அவன் காளையின் உடலை நீவிவிட-*

*அது பிளிறிக் கொண்டு முன்னேறிற்று. பசுவின் வாலை ஒதுக்கி முகர்ந்து பார்த்தது. பசு மிரண்டு மூத்திரம் போக, அதை ருசித்து பற்களை பலிப்புகளை காட்டிற்று.*

*“டேய்! என்ன பண்ணச் சொன்னால், நீ என்ன பண்ணிகிட்டிருக்காய்!“ காரியக்காரன் தன் சட்டையால் விசிற அது செயல்பட ஆரம்பித்தது.*

*அந்தப் பாரம் தாங்காமலோ என்னவோ பசு துள்ளி, “ம்மா!“ என்று அலறிற்று. அது அசையாமல் பக்கத்து வீட்டுப பெரியவர் அழுத்தி பிடித்திருந்தார். இரண்டு பக்கமும் பலகை கட்டி அதனைக் கட்டியிருந்தார்கள்.*

*பசு அலறவும், பாலு அங்கு போய்ச் சேரவும் சரியாயிருந்தது. அங்கே என்ன நடக்கிறதென்று அவனுக்கு எதுவும் விளங்கவில்லை. ‘ஏன் என் தாயை இப்படிக் கட்டிப் போட்டிருககிறார்கள்? காளை என்ன செய்கிறது?‘ அவனுக்குப் பசுவை நினைக்க நினைக்கப் பாவமாயிருநதது.*

*“அதுக்கே நான்கைந்து நாட்களாய் உடம்பு சரியில்லை. டாக்டரிடம் ஓட்டிப் போகாமல்... இது என்ன கொடுமை!“*

*பாலு பக்கத்துவீட்டு நபரின் கையைப் பற்றிக் கொண்டு, “மாமா வேணாம்! வேணாம் விட்டிருங்க!“ என்று கெஞ்சினான்.*

*“ஏய்... ! போடா தள்ளி! இவன் வேற நேரங்கெட்ட நேரத்தில்!“*

*“இல்லை. நான் விட மாட்டேன்! இது என் தாய்! என் தாயை அலங்கோலப்படுத்த நான் சம்மதிக்கமாட்டேன்!‘*

*அதற்குள் அந்தக் காளைக்கு மூடவுட் ஆகீயிருக்கவேண்டும் மூச்சிறைத்துக கொண்டு பின் வாங்கிற்று.*

*“சை! இவனைப் பிடிச்ச தூர ஏறிங்க!“ என்று காரியஸ்தன் கடுப்படித்தான். “காளையை ஒரு வழியாய் தயார் பண்ணும்போது...நாசம்!“*

*“ஏய்...பொடியா! மரியாதையாய்ப் போயிரு!“ என்று அவனைப் பிடித்துத் தள்ள. பாலு சிராய்த்துக கொண்டு விழுந்தான். அதற்குள் ஆட்கள் அவனது கையில் துண்டு கட்டி லாடம் அடிக்கும் மாடு போல அமர்த்தி பிடித்துக கொள்ள காளை திருமபத் தயாராயிற்று.*

*அன்று இரவு.*

*பாலுவிற்குத் தூக்கமில்லை. கண்களை மூடினால் அந்தக் காளையின் செயல்தான் நிழலடித்தது. ‘பாவிகள்! எல்லோரும் சேர்ந்து என் தாயை...‘*

*அவனால் அந்தக் காட்சியை ஜீரணிக்க முடியவில்லை. ‘சினைப்படணுமாம். அப்போதுதான் அது கன்று போடுமாம்! பால் தருமாம்! என்ன பிதற்றல் இது!‘*

*‘அது பசு இல்லை – என் தாய்!‘*

*‘தாயைக் கட்டிப் போட்டு... அவலம்! அநாகரிகம்! அநியாயம்! கூடாது அவர்களைச் சும்மா விட்டுவைக்கக் கூடாது! என்ன செய்யலாம்? அவர்களை வெட்டிப் பொலி போட வேண்டும். என்னால் முடியுமா? அவர்களின் முன்னால் நான் எம்மாத்திரம்?‘*

*சட்டென எழுந்தான்.*

*பரணிலிருந்து தேங்காய் வெட்டும கொடுவாள் எடுத்தான். என்னால் அவர்களைத்தான் எதுவும் செய்ய முடியாது. ஆனால்....*

*பாலு கொடுவாளுடன் புளியந்தோப்பை நோக்கி ஓட ஆரம்பித்தான்.*

*புளியங்தோப்பில் அப்போது அமைதி. மர இலைகளுக்கிடையே ஊடுருவி ஒளி நீலம் பூத்திருந்தது.*

*அந்தக் காளை இன்னமும் அதே மரத்தடியில் கட்டப்பட்டு, தரையில் கபத்தை நீட்டிப் படுத்திருந்தது. அதற்கு அலுப்பாயிருக்க வேண்டும். என்னதான் தின்று கொழுத்திருநதாலும் ஒரே நாளில் எத்தனை முறைதான் அதனால் செயல்பட முடியுமாம்!.*

*எழுக்கூட முடியாமல் அது அடித்துப் போட்ட மாதிரி கிடக்க –*

*‘காளை இருந்தால் தானே ஆட்கள் ஏவுவார்கள்...‘என்று பாலு அதை நெருங்கினான்.*

*பசு நான்கு நாட்களாய் ஏன் கத்திற்று. காத்தா எதற்காக அதைக் காளையிடம் அனுப்பினார். காளையை அவர்கள் ஏன் ஏவினார்கள் என்பதை அறியாமல். அறிய விரும்பாமல் தன் தாயை எல்லோரும் சேர்ந்து துன்புறுத்துகிறார்கள் என்கி ஆவேசத்துடன் அந்தப் பொடியன் கொடுவாளை அதன் கழுத்திற்கு நேராய் ஓங்கினான். விபரீதம் அறியாக காளை அப்போதும் மெய் மறந்து தூங்கிக் கொண்டிருந்தது.*

## *2. நல்ல கணவன்*

*கடிகாரம் இனிமையாய் மணி எட்டு என்று அறிவிக்கவே. பாலன், "சசி! என்னோட துணிமணிகள் ரெடியா?" என்று பதற்றமாய்க் கேட்டான்.*

*"ரெடிங்க!" சசி கலைந்த கேசத்துடனும், வேர்வையுடனும் ''ஏர்பேக்" ஒன்றைத் தூக்க முடியாமல் தூக்கி வந்து வைத்தாள், "நாலுசெட் டிரஸ் இருக்கு. ஷேவிங் பாக்ஸிலிருநது, பேஸ்ட் வரை எடுத்து வெச்சிருக்கேன்." சாப்பிட வாங்க," என்றாள்.*

*சாப்பிடும்போது, "ஏங்க வெள்ளிக்கிழமை வந்துடுவீங்கல்ல...?" என்று சுசி கேட்டாள்.*

*"வெள்ளிக்கிழமை என்ன விசேஷம்..?"*

*"மறந்துட்டிங்களா..? பிசினஸ் மூடுல உங்களுக்கு உலகமே மறந்து போகும்!"*

*"வளர்த்தாமல் விஷயத்தைச் சொல்!"*

*"ஆனந்தோட பிறந்த நாள்!"*

*"ஓ! மறந்தே போச்சு. வெள்ளிக்கிழமை வந்திட முயற்சி பண்றேன்.. !"*

*"முயற்சி பண்றதென்ன? கட்டாயம் வந்திடணும்!"*

*"வேலூர் வேலை முடிஞ்சிட்டால் வந்திடலாம்!"*

*"முடிஞ்சாகணும்!" என்றாள் சசி.*

*"விவரம் புரியாமப் பேசாதே சசி. இன்னொருத்தனை நம்பி லட்சம் லட்சமாய் பணத்தைப் போட்டிருக்கேன். அவன் என்னடான்னா திடீரென்று இடறுறான். செட்டில் பண்ணாம, பாதியிலே வந்திட முடீயுமா...?"*

*"ஆமா, உங்களுக்கு பிசினஸ்தான் முக்கியம். நாங்களெல்லாம் அந்நியங்க! பிசினசுக்கு ஒதுக்கறதிலே பத்திலே ஒரு பங்கு நேரமாவது குடும்பத்துக்கும் ஒதுக்குங்க. இல்லேன்னா, மகனுக்கு அப்பாவோட மூஞ்சியே மறந்துபோகும்!'*

*சசி சொல்லிவிட்டு விசுக்கென ஆனந்த் படுத்திருந்த அறைக்குள் நுழைந்தாள். அவனைத் தட்டி "ஏய்," எழுந்திரு" என்றாள்.*

*"ஏம்மா! இன்னைக்கு லீவ் தானே?"*

*"அப்பா ஊருக்குப் புறப்பட்டுக்கிட்டிருக்கார். உன்னைப் பார்க்கணும்னார்!"*

*"என்னையா, ஆச்சர்யமாயிருக்கே! பொய் சொல்லாதம்மா!" என்று அசுவாரஸ்யமாய் எழுந்தான் ஆனந்த்.*

*"உன் பர்த்டேக்கு என்ன வேணும்னு அப்பாகிட்டே சொல்லு வாங்கி வருவார்!"*

*"ஹூம்... எங்கே? ஸிம்பிளா மறந்துட்டேம்பார்"*

*"இல்லேடா! இந்தத் தடவை கட்டாயம் வாங்கி வருவார்!"*

*ஆறுதலாய்க் கூறினாள் தாய்.*

*பாலன் டிரைஸ் பண்ணிக் கொண்டு பெட்டியை எடுகக, ஆனந்த் ஓடி வந்து ''அப்பா... !'' என்று கட்டிக் கொண்டான். ''என்னோட பர்த்டேக்கு என்ன பிரசன்ட் பண்ணப் போகிறாய்...?''*

*''என்ன வேணும்?''*

*''உன் கையால எது கொடுத்தாலும் ஓ.கே!''*

*''அதுதான். என்ன வேணும்னு கேட்டேன்!''*

*''வந்து... கிரிக்கெட் பேட்!''*

*''ப்பூ... ! இவ்வுளவு தானா..? ஓ.கே!''*

*வேலூரில் பாலனக்கு வேலை சரியாயிருந்தது. காலையில் அறையிலிருந்து கிளம்பினால் ராத்திரி எத்தனை மணிக்குத் திரும்புவான் என்பது அவனுக்கே தெரியாது. மீட்டிங்க, இன்ஸ்பெக்ஷன், விவாதம், வக்கீல், கேஸ் என ஒரே டென்ஷன் தான்!*

*வியாழக்கிழமைதான் கொஞ்சம் ஓய்வு கிடைத்தது. மாலையில் நிம்மதியாய்க் குளிக்கும்போதுதான். ஆனந்தின் பிறந்த நாள் ஞாபகத்திற்கு வந்தது.*

*மனம் சசியை சிலாகிக்க ஆரம்பித்தது. அவள் நல்லவள்தான். நன்றாகப் படித்தவள்தான். ஆனால் இங்கிதம் தெரியாமல் சென்டிமென்ட்ஸ் பார்ப்பதுதான் அவனுக்கு எரிச்சல்!*

*''யாருக்காகக் கஷ்டப்டுகிறேன்? யாருககாகச் சம்பாதிக்கிறேன்? பெண்டாட்டி பிள்ளைங்க நன்றாக இருக்க வேண்டும் என்றுதானே? அதை ஏன் புரிந்து செகாள்ள மறுக்கிறாள் சசி...? லட்சக்கணக்கில் பணம் சீரழிந்து கொண்டிருக்கும் டென்ஷனில் மகனின் பர்த்டேதான் அவளுக்கு முக்கியமாய்ப்படுகிறது. பர்த்டேக்கு நான் உடனிருக்க வேண்டும் என்பது என்ன அவசியம்? என் சார்பில் ரிச்சாக பிரசன்ட் பண்ணி கோயிலுக்குப் போய் வரக் கூடாதா?'' என்று தவித்தது மனம்.*

*போனவருடம் அப்படித்தான் அவர்களுடைய வெட்டிங்டேயின் போது அவன் வெளியூரில் மாட்டிக்கொண்டான்.*

*வீட்டிற்கு வரமுடியவில்லை. அவள் கோபித்துக கொண்டு பிறந்தவீடு போய் விட்டாள்.*

*வானம் மப்பும் மந்தாரத்திலிருந்து திரும்புவதற்கு இரண்டு வாரமயிற்று.*

*இம்முறையாவது நல்ல கணவனாய் நடந்துக கொள்ள வேண்டும் என்று ஊருக்குக் கிளம்பினான். காட்பாடி ஸ்டேஷன் போகும் வழியில் கிரிக்கெட் மட்டை செட்டாய் வாங்கிக் கொண்டான்.*

*வேலூரிலிருந்து ஊருக்குத் திரும்பும் போது வீதிகள் வெறிச்சோடி கிடந்தன. விசாரித்த போது பந்த் என்றார்கள். பஸ் டிரைவருக்கும், போலீசுக்கும் தகறாராம். அதனால் வாகனங்கள் வழியை மறித்துக கொண்டு நின்றன. துப்பாக்கிச் சூடு வேறு.*

*பாலனுக்குச் சங்கடமாயிருந்தது. மகனின் ஆசையைப் பூர்த்தி பண்ணிவிட வேண்டும் என்று ஆர்வத்துடன் வந்தால்...சே!*

*நீண்ட க்யூவில் நின்று வீட்டிற்கு 'போன்' பண்ணினான். "நான் எப்படியும் வந்து விடுவேன்' என்று மனைவியிடம் உறுதிப்படுத்தி விட்டு ஆட்டோ ஒன்றை கெஞ்சிக் கூத்தாடி ரூபாய் இருநூறு தருவதாகச் சொல்லி ஆட்டோவில் ஏற, எங்கிருந்தோ கற்கள் வந்து மண்டையைத் தாக்க, அவன் ரத்தத்துடன் மயங்கி விழுந்தான்.*

*அடுத்த மூன்றாவது மணியில் விஷயம் தெரிந்து, சசி கதறிக் கொண்டு ஆனந்துடன் ஆஸ்பத்திரிக்கு ஓடி வந்தாள்.*

*படுக்கையில் கட்டுடன் கிடந்த கணவனைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை முட்டிற்று.*

*"உங்களுக்கு ஆபத்து ஒண்ணுமில்லையே?..." என்று கேட்டு நெற்றியில் முத்தம் பதித்தாள்.*

*"எல்லாம் என்னால்தானே?... நான் செய்த நிர்ப்பந்தத்தால்தானே நீங்கள் ஊரிலிருந்து அவசரமாய் வந்தீர்கள்?"*

*"அதெல்லாம் ஒண்ணுமில்லை சசி!" என்று பாலன் ஆறுதல் கூற செல்ல மகன், ஆனந்த், "எனக்குக் கிரிக்கெட் மட்டை வாங்கி வந்தியாப்பா?" என்று ஆர்வத்துடன் கேட்டான்.*

*"மட்டை கேட்கிற நேரமாடா இது?" சசி பளாரென அந்தப் பிஞ்சு முகத்திலே அறைந்தாள். "அப்பா உயிர் பிழைத்ததே தெய்வாதீனம். உனக்குக் கிரிக்கெட் மட்டைதான் இப்போ முக்கியமாய்ப் போயிற்று" – விம்மினாள் அவள்.*

*"அவனை ஏன் அடிக்கிறாய்... சசி?.. ஆனந்த்! இங்கே வாப்பா!"*

*கட்டிலுக்கடியிலிருந்த மட்டையை எடுத்து ஆனந்திடம் நீட்டின போது. பாலனுக்கு மகனின் பிறந்த நாள் ஆசையை நிறைவேற்றிவிட்ட பூரிப்பு இரட்டிப்பாய்ப் பொங்கியது!*

## *3. உணர்வுகள்*

*"ஏய்... ! இந்தச் சனியனை விரட்டப் போறாயா இல்லையா நீ...“ களைப்பில் கண்ணயர்ந்திருந்த முத்து, குரல் கேட்டுத் திடுககிட்டு எழுந்தான். கண்களைத் துடைத்துக் கொண்டு, “என்னங்கம்மா!“*

*“என்னன்னா கேட்கிறாய்! இந்த பிசாசு பண்ணி வெச்சிருக்கிற கூத்தைப் பார்“ என்று முதலாளியம்மாள் தோட்டத்தைக் காட்டினாள். அவள் பிசாசென்றது மணியை – அதாவது அவனுடைய நாய்குட்டியை.*

*மணி அங்கே செடிகொடிகளைக் கடித்துக குதறிக் கொண்டிருந்தது. பூக்களை துவம்சம் பண்ணியிருந்தது.*

*“ஏய்.. ராஜாமணி!“*

*அவன் ஓட. அது மண்ணைப் பிறாண்டிவிட்டு தாவிற்று. கொஞ்சம் போய் குதித்துத் திரும்பிப் பார்த்தது. வாலை ஆட்டிக் கீச்சு குரலில் முனகிற்று.*

*“ஏய்! நில்லு.. நில்லு! என் கோபத்தைக் கிளப்பாதே“ என்றதும் – முதுகைச் சுருட்டிக் கொண்டு சரணம் என்று தரையில் கவிழ்ந்தது.*

*அவனுடைய காலை மோந்து நக்கிற்று. வாலை ஆட்டிக்கொண்டு மேலே தாவ. ஓங்கி அறை கொடுத்தான்.*

*மணி சுருண்டு கொண்டு போய் பலகீனமாய் விழுந்தது. உடன் கண்களிலிருந்து நீரும் பரிதாபமும் கசிய ஆரம்பித்தது. ஓடிப் போய் அதன் காதைப்பிடித்து இழுத்து வந்து ஷெட்டிலிருந்த சங்கிலியில் கட்டினான்.*

*மெல்லிய குரலில் மணி கெஞ்ச, “பட்டினியாய்க் கிட, அப்போதான் உனக்குப் புத்தி வரும்!“*

*“வள்.. வள்.. !“*

*“அதெல்லாம் முடியாது. உனக்கு எத்தனை வாட்டி சொல்லியிருக்கேன்! முதலாளியம்மா எத்தனை உசிராய் பூச்செடிகளை வளக்கிறாங்க.. உனக்கென்ன வேலை அங்கே?“*

*“மன்னிச்சுக்கோ!“*

*“முடியாது!“ என்று வேலையைக் கவனிக்கச் சென்றான்.*

*அவனுக்கு பதின்மூன்று வயது.*

*சின்ன வயதிலிருந்தே முத்துவிற்கு நாய் என்றால் உயிர். வீட்டில் வறுமை. தாயும் தகப்பனும் கூலிக்குப் போய் கால் வயிறு அரைவயிறுக் கஞ்சி ஊற்றினால் அதிலும் பாதியைத் தெரு நாய்களுக்கு விதரனம் பண்ணி விடுவான்.*

*பள்ளிக்கூடத்திலும கூட அப்படித்தான். சாப்பாட்டு மணியடித்தால் போதும். அங்கே நாய் படையே திரண்டு விடும் - சத்துணவிற்கு! நாய்களின் தொல்லை தாங்காமல் கடைசியில் ஸ்கூலிலிருந்து அவனுக்குக் கல்தா கொடுக்க வேண்டியதாயிற்று.*

*அவன் ஒன்றும் படிப்பில் அத்தனை சமத்தோ கெட்டியோ இல்லை. ஏஙறகனவே வகுப்பிற்கு இரண்டு வருடம் என்றுதான் ஒப்பேற்றிக் கொண்டிருந்தான். பாடத்தை நினைத்தாலே மனது கசந்தது. மூளையில் பதிவேனாயென்றிருந்தது.*

*வாத்தியாரின் அடிகள் படிப்பின் மேல் விரோதத்தையே கிளப்பின. ''ஏன் படிக்க வேண்டும்? படித்து என்ன கலைக்டராகவாப் போகிறோம்? எலிமென்ட்ரியையே தாண்டினால் பெரிது'' என்று நினைக்க வைத்தது.*

*இந்த உலகம் பெரிது. வானம் பரந்து விரிந்திருக்கிறது. கவலையில்லாமல் காற்று கிடைக்கிறது. விளையாடலாம். ஓடியாடலாம். கூலி வேலைக்குப் போனாலாவது நான்கு காசு கிடைகும். கடலை மிட்டாய் வாங்கித் தின்னலாம். பீடி புகைக்கலாம், சினிமாப் போகலாம்.*

*அதையெல்லாம் விட்டு விட்டு வகுப்பில் ஏன் அடைந்து கிடக்க வேண்டும்? ஸ்கூலே ஒரு நரகம். உபாத்தியாயர்களெல்லாம் உபத்திரவர்கள். அவர்களுக்குப் பசங்களின் அவஸ்தை புரியாது. புரிவதில்லை. படிப்பில் வெறுப்பும் சலிப்பும் வருவதிற்குப் பெருமபாலும அவர்கள்தான் காரணம்.*

*முத்து ஸ்கூலை துவேஷிக்க, தாய் கோபமுற்றாள், அவனுடன் இரண்டு நாட்களுக்குப் பேசவில்லை. ''நாங்கதான் படிப்பில்லாம கஷ்டப்படறோம்னா உனக்கும் ஏண்டா தலையெழுத்து...?''*

*''என்னால படிக்க முடியலைம்மா!''*

*''ஏன்..''*

*அவன் அதற்குப் பதில் சொல்லவில்லை. ''அக்ரஹார குட்டிச்சுவரில் நாலு நாய்க்குட்டி இருக்கும்மா'' என்றான்! எல்லாமே ஆண். நக்லியூண்டாக அழகாய் கரணை கரணையா இருக்கும்மா''*

*''உன் நோக்கம் தான் என்னடா..?''*

*''அதுல ரெண்டு குட்டியை எடுத்து வளர்ப்போம்மா''*

*''ஆமா! இப்படி நாய் நாய்ன்னு நாயா அலைஞ்சிட்டுரு! உருப்பட்டிரலாம்!''*

*''அம்மா! பத்து ரூபா காசு கொடு!''*

*''எதுக்கு?''*

*''நாய்க்குச் சங்கிலி வாங்கணும். பெல்ட்!''*

*தாய் ஓங்கி அறைந்தாள். ''நான்பாட்டிற்கு மாடாட்டம் கத்திகிட்டிருக்கேன். உன்னோட எதிர்காலத்துககாக கவலைபட்டுகிட்டிருக்கேன். நீ எபன்னடான்னா... மனசுல என்னதான்டா நினைச்சுகிட்டிருக்கே..?*

*‘‘எனக்கு நாய்க் குட்டி வேணும்‘‘*

*‘‘அப்போ நாங்கள் வேணாம்? உனக்கு நாங்கள் வேணாம்னா எனக்கும் நீ வேண்டாம்! எங்க முகத்திலேயே விழிக்காதே!‘‘*

*‘‘அம்மா நான் போயிருவேன்!‘‘*

*‘‘எங்காவது போய் ஒழி! அப்போதான் புத்தி வரும். கஷ்டபட்டு குண்டி காய்ஞ்சால்தான் எங்களோட வார்தை புரியும்.*

*அன்றே வீட்டை விட்டு வெளியேறி விட்டான். அக்ரஹாரத்திற்குப் போய் தேடினதில் இந்த ராஜாமணி மட்டும்தான் கண்கூடச் சரியாய் திறக்காமல் கிடந்தது. தாய் நாய் அசந்த நேரத்தில் தூக்கிக் கொண்டு டவுனிற்கு வந்துவிட்டான்.*

*ஒரு மாதம் வேலை தேடிக் கடைசியில் இங்கே கிடைத்தது. முத்து, ராஜாமணியைச் சங்கியில் கட்டி காலைரயிலும் மாலையிலும் வாக் போவான். அதனுடன் விளையாடுவாட்ன, அச்சுவெல்லாம், பிஸ்கெட்டெல்லாம் வாங்கி தருவான்.*

*அவன் எந்த அளவிற்கு அதனுடன் கொஞ்சுகின்றானோ அந்த அளவிற்கு முதலாளியம்மா ராஜாமணியை வெறுத்து வந்தாள். அவளுக்கு நாய் என்றாலே அலர்ஜி.*

*பத்து வருடம் முன்பு அவருடைய கணவரை வெறிநாய் ஒன்று கடித்து நாற்பது நாட்கள் குலைத்துக் குலைத்து இறந்து போனாராம். அதிலிருந்து நாய் என்று கேட்டாலே எரிந்து விழுவாள்.*

*முத்து கெஞ்சிக் குலாவ, காலில் விபந்து ராஜாமணியையும் தன் கூட வைத்துக் கொள்ளச் சம்மதம் பெற்றிருந்தான்.*

*அப்படியிருக்கும்போது இப்படியெல்லாம் நடந்துக் கொண்டால் என்ன செய்வதாம்!*

*இன்றென்றில்லை, அந்தம்மாள் தூங்கும்போது ராஜாமணி சும்மா இருப்பதில்லை. ஓணானையோ, வெட்டிக்கிளியையோ துரத்திக் கொண்டு குலைக்கும். அது அவர்கள் தூக்கத்தைக் கெடுக்கும்.*

*உடனே ஒரு போர் மூளம்.*

*நாய் என்றால் குரைக்கதான் செய்யும். அதன் வாயைக் கட்டிப் போடவா முடியும்? மனிதர்களைத்தான் சட்டம் என்றும். பணபலத்தைகக் காட்டியும் அடக்கி ஒடுக்கி மிரட்டி வைத்திருக்கிறோம். நாய்களுக்கு கூட சுதந்திரம் கொடுக்காவிட்டால் எப்படியாம்!*

*அந்தச் சுதந்திரம் நாய்க்கு நாய் வேறுபடும்.*

*ஏழை – பணக்காரர் வித்தியாசம் மனிதர்களிடம் மட்டுமில்லை நாய்களிடமும் நிறையவே இருக்கின்றது.*

*தெரு நாய்க்கு உண்ண உணவில்லை. உறங்க இடமில்லை. ஆகாயம்தான் கூரை. மழையில் நனைந்து வெயிலில் காயவேண்டும். எங்கு வேண்டுமானாலும் போகலாம்.*

*ஆனால் கவனிப்பாரில்லை. எச்சிலைக்கு அடித்துக கொள்ள வேண்டும். சோறு கிடைத்தால்தான் உண்டு. இல்லாவிட்டால் நரகலை தேடிப் போக வேண்டும். சொறி,*

*சிரங்கு என கஷ்டப்பட்டு கார்ப்பரேஷன்காரர்களுக்குப் பயந்து ஓடி ஒளிந்து கடைசியில் வெறிபிடித்து... பரிதாபமாய் முடிய வேண்டும்.*

*பணக்கார நாய்களுக்கு அந்தப் பிரச்னையில்லை. பதவிசு. பரமசுகம், கார் பங்களா! மொசைக்கில் உறங்களலாம். சுதந்திரம் இல்லாவிட்டால் கூட வேளாவேளைக்கு சாப்பாடு! மட்டன் பிரியாணி.*

*முதலாளியம்மாள் ராஜாமணியை மன்னிக்கத் தயாராயில்லை. கரிச்சுக் கொட்டிக் கொண்டேயிருந்தாள்.*

*"இந்தச் செடிகள் எத்தனை விலையுயர்ந்தது தெரியுமா? அநியாயமாய் இப்படி நாசம் பண்ணி விட்டதே" என்று திட்ட ஆரம்பித்தாள்.*

*முத்துவிற்கு எரிச்சலாய் வந்தது. 'ராஜாமணி தெரிந்தா செய்தது? ஏதோவிளையாட்டு ஜீவன்! வாயில்லாத பிராணி!*

*மனிதர்கள் உயிரில்லாத செடிகளையும் பூக்களையும் மதிக்கிறார்கள். ஆனால் உயிருள்ள பிராணிகளை மதிக்கத் தெரியவில்லை. செடிகள் எதற்கு? அழகுக்காகத்தானே! வீட்டில் கொஞ்சம் அழகு குறைந்தால் தான் என்னவாம்! உயிருள்ள நாயைக் காட்டிலும் செடியா பெரிசு? இங்கே உயிருக்கு விலையில்லை.*

*'பிராணிகளைக் காப்போம், வதைகளைத் தடுப்போம்' என சுவருக்கு சுவர் எபதி வைத்திருக்கிறார்களே... அதற்கெல்லாம் என்ன அர்த்தம்? எல்லமே ஏட்டுச சுரைக்காய் தானா..?*

*ராஜாமணி அத்தோடு திருந்திவிடும் என்று தான் முதது நினைத்தான். ஆனால் அது திருந்துவதாகவே தெரியவில்லை. மறுபடி மறுபடி பூச்செடிகளை மிதித்து துவட்டவே செய்தது. வீட்டில் ஓடிப் போய் ஆசிங்கம் பண்ணி வைத்தது. முதலாளியம்மால் கடைசியில் "இந்தச் சனியன் இங்கே இருக்கவே கூடாது!" என்று உத்தரவு பிறப்பித்துவிட அவனுக்கு வேறு வழி தெரியவில்லை.*

*ராஜாமணி அழைத்து போய் ஊரின் ஒதுக்கில் குடிசை ஒன்றில் கட்டிப் போட வேண்டியதாயிற்று. தினம் காலையிலும மாலையிலும் சோறு எடுத்துப் போய் அதற்கு போட்டுவிட்டு, அதனுடன் வாக் போய்விட்டு முத்து திரும்புவான்.*

*அவன் ராஜாமணிக்கு வேண்டித் தேர்ந்தெடுத்த இடம் சரியில்லையோ இல்லை நேரம் சரியில்லையோ தெரியவில்லை – டவுனில் கட்சி மாநாடு நடத்த வேண்டி மந்திரி அங்கு வந்து காம்ப் அடித்திருந்தார்.*

*அவரின் ரெஸ்ட் ஹவுஸ் அந்தக் குடிசைக்கு மிகச் சமீபத்தில்தான் இருந்தது. ஊரில் நிதி வசூல் செய்து (சுரண்டி) மாநாட்டைச் சிறப்பிக்க வேண்டிய பொறுப்பு அவர் தலையில்.*

*அதற்கு வேண்டி ராத்திரி பகலாய் அலைந்துவிட்டு கிடைக்கிற சொற்ப நேரத்தில் தூங்காமல் என்று வந்தால் –*

*அருகிலேயே ஆட்டுமந்தை! அங்கே எப்போதும் ஆடுகளின் அணிவகுப்பு நடக்கும். ஆடுகள் விலை பேசப்பட்டு அங்கேயே அப்போதே கசாப்பு செய்யப்படும்.*

*விற்பனை போக எஞ்சிய எலும்புத் துண்டுகளும், மாமிசமும் குப்பையாய் தூக்கி ஏறியப்பட அங்கே தெரு நாய்கள் எப்போதும் உரிமைப் போர் தொடுத்துக் கொண்டிருக்கும்.*

*அவற்றின் குரைப்பும் இரைச்சலும் மந்திரியைக் கோபப்பட வைத்தன. தூங்கமுடியாத ஆவேசம் நாய்களின் மேல் திரும்பிற்று. உடனே அவர் பி.ஏவை அழைத்து "இங்கே ஏன் இரைச்சல்..?" என்றார்.*

*"பக்கத்துல கசாப்புச் சந்தை இருக்கு சார். அங்கே நாய்கள்!"*

*"கசாப்பு சந்தை! நாய்கள்! சை! மனுசனைத் தூங்கவிடாத பொறுக்கிகள்!" என்று எரிந்து விழுந்தார்.*

*"உடனே கார்ப்பரேஷனுக்கு போன் பண்ணி லைசென்சில்லாத நாய்களையெல்லாம் பிடிச்சு அப்புறப்படுத்தச் சொல்லு! நியூசென்ஸ்!"*

*"சரிங்கய்ய. இப்பவே சொல்லிர்றேன்!"*

*பி.ஏ உடனே கார்பரேஷனுக்கு உத்தரவிட, கார்ப்பரேஷன் வேன்கள் டவுன் முழுக்கப் புயலாய்ப் பறக்க ஆரம்பித்தன.*

*அன்று மாலை வழக்கம்போல் –*

*வீட்டு வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு, முதலாளியம்மாள் தனக்கு வேண்டி கொடுத்த சாப்பாட்டையும் எடுத்துக் கொண்டு முத்து குடிசையை நோக்கி நடந்து கொண்டிருந்தான்.*

*அன்று சம்பள தினம். பாக்கெட்டில் சுளையாய் நூறு ரூபாய் இருந்தது. ராஜாமணி பாவம்! நாள் முழுக்கக் கட்டி கிடக்கிறது. பகலில் பட்டினியாய் கிடக்கிறது. சம்பள தினத்தில் மட்டுமாவது அதற்கு மட்டன் வாங்கிப் போடுவோம் என்று முனியாண்டிவிலாசில் நுழைந்தான்.*

*மட்டனும், சிக்கன் பிரியாணியும் வாங்கிக்கொண்டு வெளியே வந்தான். தென்றல் காற்று ரம்மியமாய் அடிக்க. அதில் பிரியாணி மணத்தது. விசிலடித்துக கொண்டு, "ராஜாமணி!" என்று செல்லமாய் அழைத்தப்படி குடிசைக்குள் நுழைந்தவனுக்கு அதிர்ச்சி.*

*அங்கே ராஜாமணியைக் காணவில்லை. வெறும் சங்கிலிதான் கட்டபட்டது அப்படியே கிடந்தது.*

*"ராஜாமணி.. ராஜாமணி!" என்று சுற்றுமுற்றும் கூவிப் பார்த்தான். தேடிப்பார்த்தான் தென்படவில்லை. "ராஜாமணி, ராஜாமணி...என்னைவிட்டு போயிட்டியா நீ.. ! எப்படி உன்னால் போக முடிந்தது..? என் மேலே கோபமா? கட்டி போட்டுட்டேன்னு கோவிச்சுகிட்டுதான் போயிட்டியா நீ.." ராஜாமணி நீயில்லாம நான் எப்படி இருப்பேன்? உனக்கு வேண்டித்தானே வீட்ட விட்டே வந்தேன்? என் படிப்பையும் விட்டேன்! என் சொகுசையும் விட்டுக் கொடுத்து உனக்கு உனக்கென்று உனக்காகவே வாழ்கின்றேனே... !" என்று சங்கிலியை அவிழ்த்தான்.*

*ரோடோரத்தின் புதரில் கார்பரேஷன்காரர்களால் அடிபட்டு மூளை சிதறி ராஜாமணி இறந்து கிடக்க.*

*முத்து அதைக் கவனிக்காமல் ‘‘ராஜாமணி! ராஜாமணி!‘‘ என்று புலம்பிக் கொண்டு சங்கிலியை பிடித்தபடி நடக்க ஆரம்பித்தாள்.*

## *4. சேவனம்*

*"இந்த முறை நீங்க ஊருக்கு வரும் போது ஒரு முடிவு பண்ணியாகணும். இல்லேன்னா... இல்லேன்னா எங்களை நீங்க மறந்துர வேண்டியதுதான். ஆமா செல்லிபுட்டேன். நானும் பிள்ளைகளும் மருந்துகுடிச்சுச் செத்துப் போயிருவோம்!"*

*விமலா சொல்லிவிட்டுப் போனைச் சட்டென வைத்துவிட, நான் அப்படியே பிரமைபிடித்து அமர்ந்திருந்தேன். வரவர போனைப் பார்த்தாலே அலர்ஜி, வெறுப்பு. கடல் கடந்து வந்து. குடும்பத்தை பிரிந்து, சந்தோஷத்தை இழந்து வேலை பார்க்கிறோம். வெயில், குளிரைப் பொருட்படுத்தாமல் சம்பாதித்து அனுப்புகிறோம்.*

*பெற்றோர்கள், மனைவி, பிள்ளைகள் நன்றாக இருக்க வேண்டும் என்று புதுவீ'டு, டெலிபோன் மற்றும் சகல வசதிகளும் செய்துக் கொடுத்தாலும் நிம்மதியில்லை. அவர்களிடம் திருப்தியுமில்லை.*

*குவைத்தில் காய்ந்து போய் கிடக்கிறேன், நாலு வார்த்தை அன்பாய் – ஆதரவாய்ப் பேசுவோம் என்று நினைக்கிறாளா?*

*எப்போதும் புகார், புகைச்சல்! பெற்றோர்கள் மேல் குற்றம் - குறை! போன் பண்ணும் போதெல்லாம் "விசா எடுத்தாச்சா.. எப்போ எங்களை அங்கே அழைக்கப் போறீங்க..?" என்கிற பல்லவி புலம்பல்.*

*எனக்கு வெறுப்பாய் வந்தது. குடும்பத்தை விட்டுவிட்டு நான் மட்டும் இங்கே என்ன சந்தோஷமாகவா இருக்கிறேன்? நான் கஷ்டப்பட்டாலும் அவர்கள் நன்றாக இருக்க வேண்டும் என்று வயிற்றைக் கட்டி வாயைக் கட்டிச் சேமிக்கிறேன்.*

*குடும்பத்தை இங்கு அழைத்தால் சேமிப்புக் கரையும் என்பது ஒருபுறம் இருந்தாலும, வயதான அப்பா-அம்மாவைப் பார்த்துக கொள்ள ஆள் இல்லாமல் போய்விடுமே என்கிற கவலை அழுத்திற்று.*

*விமலா அதை ஏன் புரிந்து கொள்ளமாட்டேனென்கிறாள்! கடைசிகாலத்தில் எங்களை விட்டால் அவர்களுக்கு வேறு யார் இருக்கிறார்களாம்!*

*அடுத்த மாதம் விடுமுறை.*

*மனைவி கெடுவைத்துவிட்டாள். பொடா! இனி தவர்க்க முடியும் என்று தோன்றவில்லை. விசா எடுத்தேன். சின்னதாய் வீடு. பிள்ளைகளுக்கு இந்தியப் பள்ளிகளில் அட்மிஷன்.*

*ஊருக்கப் போகிறோம் என்றால் – ஆறுமாதம் முன்பிருந்தே சந்தோஷம் பிறந்துவிடும். உறவு நட்புகளெல்லாம் பார்த்துப பார்த்து பொருட்கள் வாங்கிச் சேகரித்து எப்போதுமே அதிகபடி லக்கெஜ் வந்துவிடும். அவற்றை ஊரில் கொடுத்து – அவர்களின் முகமலர்ச்சியைப் பார்க்கும்போது பாலைவனத்தில் படும் கஷ்டமெல்லாம் மறந்துப் போகும்.*

*“எதுக்கு அனாவசியமாய்... இதெல்லாம்?“ என்று பொய்யாய்க் கடிந்து கொண்டு நெக்லஸை விமலா போட்டு ‘இது நல்லாருக்கா? என்று அழகு காட்டுவது ஒரு சுகம். பிள்ளைகளும் “இது எங்கப்பா வாங்கி வந்த டிரஸ், ஷு, கம்மல், வளையல் என்று ஊர் முழுக்க வலம் வருவது பெருமையாயிருக்கும்.*

*விடுமுறை நெருங்க நெருங்க புல்லரிப்பு, தூக்கம் வராது. மிதப்பு!*

*ஏர்போர்ட்டில் போய் இறங்கினதும் வாசல் தெளித்துக கொண்டு அவர்களின் ஏக்க முகத்தைப் பார்த்ததுமே உடலில் ஜிவ். மனைவியை பொது இடத்தில் முடியாது என்பதால் பிள்ளைகளை வாரி அணைத்துப் கட்டிக்கொண்டு முத்தம் கொடுத்து..*

*அதெல்லாம் ஒரு அனுபவம்.*

*இப்போது அந்த மாதிரி எதுவுமே தோன்றவில்லை. ஊருக்குப் போக வேண்டும்மா என்றிருந்தது. போய் இறங்கியவுடனேயே – ஏன் வந்தோம் என்று நினைக்கும்படி சண்டை பிடிக்கப் போகிறாள்.*

*அம்மா ஒரு பக்கம்இ மனைவி மறுபக்கம் வாதிட என்பாடு திண்டாட்டம். நான் யாரைக் கடிந்துக் கொள்ள முடியும்? எந்தப்பக்கம் பேசினாலும பிரச்னை. உலகத்திலிருக்கிற மாமியார் – மருமகள்கள் திருந்தவே மாட்டார்களா..?*

*சொந்த ஊர்.*

*ஏர்போர்ட்டிலிருந்து வீடு போய்ச் சேரும் வரையிலும் காரில் அமைதி அப்பா-அம்மா-மனைவி எல்லோருமஇருந்தும் கூட யாருமவாய் திறக்கவில்லை.*

*வாய் திறக்காதவரை வசதி. ஆனால் எல்லோரும் பெரிய தாக்குதலுக்குத் தயாராகிறார்கள் என்பது மட்டும் புரிந்தது. வீட்டிலும கூட கலகலப்பில்லை.*

*“அப்பா... !“ என்று பிள்ளைகள் ஓடிவந்து பெட்டியை பிடுங்க, “போங்கடி உள்ளே! போய்ப் படிங்க!“ என்று விமலா விரட்டியடித்தாள். அவர்களின் முகம் சுருங்கி ஏமாற்றத்துடன் ஏறிட எனக்கு சங்கடமாயிற்று.*

*“பிள்ளைகளை ஏன் திட்டுகீறாய்.“*

*“ஆமா – பிள்ளைன்னதும் பொத்துகிட்டுவரது! இங்கே நான் என்றால் இளப்பம், என்னை யார் திட்டினாலும – அதுபத்திக் கவலையில்லை.“*

*“ஏய் என்ன இது? வந்ததும் வராததுமாய்?“*

*விமலா வெடுக்கென முகத்தைத் திருப்பிக்கொள்ள, அப்பாவும்! அம்மாவும் அங்கிருந்து வெளிநடப்பு செய்தனர்.*

*கால் பதித்தவுடனேயே நரகம் ஆரம்பம்!*

*ராத்திரி பிள்ளைகளைத் தூங்க வைத்துவீட்டு வேண்டுமென்றே தள்ளி – அதுவும் திரும்பி படுத்துக கொண்ட விமலாவைப்பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். இவள் இப்படித்தான்! எதையாவது சாதிக்க வேண்டும – உசுப்பிவிட வேண்டும என்றால் வேலை நிறுத்தம்! மௌனம்.*

*சில நாட்களில் நல்லதாப் போச்சு என்று நானும் திருப்பிக் கொள்வேன். நான் வருவேன் – அணைப்பேன் – ஆறுதல் சொல்வேன் எனக் காத்திருந்து அது நடக்காமல் போனால் உடன் புசுபுசுவென அழுகை பொங்குவாள்.*

*அப்படியும் பலனில்லையென்றால் எழுந்து ஹாலுககுப் போய் விடுவாள் பாவம் விமலா! எனக்கிருக்கிற ஏக்கமும் – பசியும் பாசமும் இவளுக்கும் இருக்கும்தானே!*

*மெல்ல அரவணைத்து, "ஏய்... எல்லோரும் இப்படி முரண்டு பண்ணினா எப்படி..? இந்த முஞ்சியைப் பார்க்கவ நான் வந்தேன்..ம்..?"*

*"விசா எடுத்தாச்சா?"*

*"இப்போ என்ன அவசரம்?"*

*"ஆமாம். எனக்கு அவசரம்தான். முடியலை. நானும் மனுஷிதானே – மெஷின் இல்லையே! எனக்கும் ஆசாபாசங்கள் – உணர்வுகள் இருக்கு."*

*"யாரு இல்லேன்னாங்களாம்!"*

*"என்னனவோ கஷ்டப்படறேன் – கஷ்டப்படறேன்னு வசம் பேசறீங்களே, என் கஷ்டம் உங்களுக்.குத் தெரியுமா? இங்கே எது செஞ்சாலும் குத்தம். விடியறகாலை நாலரைக்கு எழுந்தால் தண்ணீர் பிடித்து, வீடு, வாசல் தெளித்து வெந்நீர் வச்சு பிள்ளைகளை எழுபிபி படிக்கவச்சு குளிக்க வச்சு டிபன் செஞ்ச கொடுத்து ஒய்வில்லாம மதியம் – இரவு வரை ஒழிவில்லை. மாய்ஞ்சு மாய்ஞ்சு கவனிச்சுக்கிட்டாக்கூட உங்க அம்மாவுக்கும் அப்பாவுக்கும் திருப்தி கிடையாது. குத்தம் குறை! இடித்தல்! சபித்தல்! புலம்பல்!"*

*"சும்மா பொத்தாம் பொதுவில் சொன்னா எப்படி... என்ன பிரச்சனைன்னு தெரிஞ்சா தானே அவங்களைக் கண்டிக்க முடியும்?"*

*"ஒரு ஆயிரம் சொல்லலாம். குத்தம் சொல்றது குத்திக்காட்டறது என் நோக்கமில்லை. ஆனாலும் கூட சகிச்சுக்கிறதுக்கும் ஒரு எல்லையிருக்கு. கட்டில்ல படுததிருக்கும் அப்பா – எழுந்து பாத்ரூம் போகக்கூடாது...? அப்படியே வாசல்லேயே மூத்திரம் போறார். இது மாதிரி எத்தனையோ!"*

*"போகட்டும விடுடி! பெரியவர்தானே! வயசானவங்களுக்குச் செய்கிற வேசனம் பாக்கியம்டி. என்னை பார்த்து பார்த்து வளத்தவர். படிக்க வச்சு ஆளாக்கினவர்!"*

*"அதுக்காகத்தான் இத்தனை நாள் பொறுத்துக்கிட்டேன். வேலைக்கிடையிலே டிபன் ரெடி பண்ண அஞ்சு நிமிஷம் லேட்டாச்சுன்னா அம்மா உடனே கோவிச்சுக்கிட்டு தெருவுக்குப் போயிடறாங்க. மருமக சோறு போடலே – சாப்பாடு போடுன்னு எதிர்த்த வீட்டுக்குப் போய் புகார் பண்றாங்க நம்மைப்பத்திடித அவங்க என்ன நினைப்பாங்க? இதெல்லாம் எனக்குத் தேவையா?"*

*"ஒண்டியா அல்லாடறாளேன்னு ஒத்தாசை பண்ணாட்டியும் பரவாயில்லை – புரளி பேசாமாவது இருக்கலாமில்லே?"*

*விமலாவின் வார்த்தைகளில் இருந்த நியாயம் எனக்குப் பிரிந்தது. அவளது உழைப்பை – ஆதமார்த்தத்தை துரும்பாகிப் போன அவளது சரிரமே சாட்சி சொல்லிற்று. என்ன செய்வது எப்படி இந்த பிரச்னையைத் தீர்த்து வைப்பதென்று எனக்கு புரியவில்லை.*

*மறுநாள் அப்பா- அம்மா வாய் திறப்பார்கள் என்று பார்த்தேன். ஏமாற்றம். இறுக்கமாகவே அமர்ந்திருந்தனர். பதிலுககு மருமகள் மேல் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தால் விளக்கமளிக்கலாம். ம்கூம்.*

*'ஏன் இப்படி நடந்துக்கிறீங்க – என்று கேட்கத் துணிச்சல் இல்லை. முன்பொருமுறை கேட்ட போது கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு போய்விட்டார்கள்.*

*ஒரு வாரம் அவஸ்தை. உறுத்தல். பயம். வெறும் வாயை மெல்லும தெருவாசிகளுக்கு நல்ல அவல் கிடைத்தது. செந்தில் மாறிட்டான்- பெண்டாட்டி பேச்சைக் கேட்டுகிட்டு பெத்தவங்கைளை விரட்டிட்டான் – அரபு நாட்டுக்குப் போய் சம்பாதிச்சு என்ன பிரயோஜனம் – வயசானவங்களின் சாபம் சும்மாவிடுமா – என்று காதுபடவே பேசினார்கள்.*

*இன்னொரு முறை அதுமாதிரி ஆகிவிடக்கூடாது. என்ன செய்யலாம்?*

*வெளியே பிரச்சனை என்றால் குடும்பத்தினரிடம் பகிர்ந்து கொண்டு ஆறுதல் பெறலாம். குடும்பப் பிரச்சனைகளை எகேப் போய்ச் சொல்ல?*

*ஆத்மார்த்த நண்பர்கள் தான் இதற்கு மருந்து.*

*ஆற்றாங்கரையில் அவர்களைச் சந்தித்த போது. "செந்தில்! பேசாம குடும்பத்தை உங்ககூட அழைச்சு போயிருடா!" என்றனர்.*

*"அப்புறம் அப்பா – அம்மாவை யார் பாத்துக்கிறதாம்?"*

*"அந்தக் கவலை அவங்களுக்கு இருக்கணும். மருமகளை கொடுமை பண்ணும் போது தெரியணும். வயசாச்சுங்கிறதுக்காக பரிதாபப்பட முடியாத அளவுக்கு பெரிசுங்களோட டார்ச்சர் தாங்கலேப்பா. உன் மனைவி பாவம். இதுல அவங்களைக் குறை சொல்ல எதுவுமேயில்லை. ஒண்னு அவங்களை நீ கொண்டுப் போகணும். அல்லது வேலையை விட்டுடடு நீ இங்கே 'வந்திரணும். அப்போதான் பெரிசுங்க அடங்கும்!"*

*"அது நடக்காதுரா. இங்குள்ள வேலையையும் விட்டுட்டு அங்கே போயிருக்கேன். நல்ல உத்யோகம். நல்ல சம்பளம், அதில்லாம் இங்கே வந்து என்ன பண்றதாம்! பிள்ளைகளின் படிப்பு இருக்கு. வீட்டுக்கடன் பாக்கி இருக்கு."*

*"ஏய்.. செந்தில்! நீ சொல்றதெல்லாம் சரிதான். ஒத்துக்கிறேன். பணம் வாழ்க்கைக்கு முக்கியம்தான். ஆனால் அதுவே வாழ்க்கையாகிடக்கூடாது பணம்தான் பிராதானம்னா எதுக்கு கல்யாணம் பண்ணிக்கணும்? வயசு போச்சுன்னா திரும்ப வராதுடா. இப்போ எல்லாமே வேகமாத் தெரியும்."*

*"ஒரு காலகட்டத்துல பணம் இருககும். ஆனால் அனுபவிக்க யாரும் இருக்க மாட்டாங்க. அப்போ ரொம்ப பீல் பண்ணுவாய் பார். வேறு யாருக்காக இல்லேன்னாலும பிள்ளைகளுக்காகவாவது நீ அழைச்சுக்கணும். இந்த வயசுல அதுங்க அப்பா – அம்மாவோட வாழணும் வளரணும்டா."*

*நண்பனின் வார்த்தைகளில் இருந்த நிஜம் என்னைத் தாக்கிற்று. பெரியவர்களின் நலத்தைப் பார்த்தால் குழந்தைகள் வெம்பிப் போவர்.*

*அப்போது காலையில் பள்ளிக்குப் போகும்போது மகள், "இன்னைக்கு எங்களை ஸ்கூல்ல விடறீங்களாப்பா?" என்று கேட்டது ஞாபகத்திற்கு வந்தது.*

*"நான் எதுக்கு – அதான் பஸ் இருக்கே!"*

*"ஒரு நாளைக்குப்பா.. ப்ளீஸ்.."*

*"இல்லை. எனக்கு வேலையிருக்கு. போங்க!"*

*"அப்போ ஸ்கூல் விட்டு அழைக்க வரீங்களா.. ப்ளீஸ்ப்பா.. மத்த பிள்ளைங்களுக்கெல்லாம் அவங்க அப்பா – அம்மா அழைக்க வராங்க!"*

*அது இப்போது ஞாபகத்துக்கு வர – பள்ளிக்குச் சென்றான். மணியடித்ததும் புற்றீசலாய்ப் பிள்ளைகள் ஓடிவந்தன. என்னை பார்த்ததும் பிள்ளைகளுக்கு மகிழ்ச்சி. நம்பிக்கையில்லை.*

*"ரொம்ப தாங்ஸ்ப்ப்!" என்று ஓடிவந்து கட்டிக்கொண்டன.*

*"எதுக்கும்மா?"*

*"அழைக்க வந்ததுக்கு. இத்தனை நாட்களாக – நமக்கு யாருமில்லை – அனாதை என்கிற எண்ணமிருந்தது. இப்போ அது போயே போச்சு!"*

*"வா – ஆட்டோ பிடிப்போம்!"*

*"வேணாம்ப்பா. நடந்து போலாம். பேசிக்கிட்டே போகலாம்" என்று ஆளுக்கொரு பக்கம் அவர்கள் பிடித்துக் கொண்டனர். வழியில் கடை தென்பட. "ஏதாச்சும் வேணுமா?" என்றேன்.*

*எனக்குள்ளும் மகிழ்ச்சி. உற்சாகம். "என்னவேணும் சொல்லுங்க. சாக்லெட்.? ஐஸ்க்ரீம்..?"*

*"அது கஷ்டம்டா. நான் சம்பாதிச்சாத்தானே – நீங்க ஸ்கூல் பஸ்ல போக முடியும்! பெரிய வீடு! நல்ல டிரஸ் நகைகள்!"*

*"பெரிய வீடு – நகைகள் எதுவுமே வேணாம்ப்பா. எங்களையும் அழைச்சுக் போயிருங்கப்பா!" பிள்ளைகள் கெஞ்சவே என் மனதும் கரைந்து போயிற்று.*

*வீட்டு வந்ததும் – இனியும் கேட்காமல் இருந்தால் தப்பாகி விடும என்று தோன்றவே. நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு. "அப்பா! இது உங்களுக்கே நல்லாருக்கா!" என்று ஆவேசப்பட்டேன்! உங்களுக்காகத்தானே – நான் குடும்பத்தைப் பிரிச்சு – அங்கே மெஸ்ஸில் சாப்பிட்டு கஷ்டப்படறேன்.. அதை ஏன் நீங்க புரிஞ்சுக்க மாட்டேன்கிளீங்க!"*

*"வேணாண்டா. எங்களுக்காக யாரும் எந்தத் தியாகமும பண்ண வேணாம். குடுமபத்தைப் பிரிஞ்சி இருக்க வேணாம். குடும்பத்தை எப்போ வேணாலும நீ அழைச்சுப் போகலாம்!"*

*"அப்புறம் நீங்க...?"*

*“எங்களைப் பத்தி என்ன கவலை...? ஊர் உலகத்துல எத்தனையோ முதியோர் இல்லங்கள்!“*

*“இது நியாயமாப்பா...?*

*“வீண் பழி போடறதுக்கு – அன்பு – பாசமில்லாம கரிச்சு கொட்டறதுக்கு அது எவ்வளவோ மேல்!“*

*இரண்டு மாதங்களுக்குப் பிறது—*

*குடும்பத்தைக் குவைத்தில் செட்டில் பண்ணியிருந்தேன். சின்ன பிளாட் என்றாலும எல்லா வசதிகளும் இங்கு உண்டு. மனைவி – பிள்ளைகளுக்கு சந்தோம்.*

*அன்று டூட்டி முடிந்து வீடு திரும்பும் போது – மகள் ஓடிவந்து.. “அப்பா! இங்கே வந்து பாருங்க --தாத்தா!“ என்று அலறினாள். குதூகலித்தாள்.*

*“எங்கேடா.. எங்கே..?*

*“இதோ டிவியில்..“*

*அப்போது டிவியில் ‘முதியோர் இல்லத்தில் ஒரு பார்வை‘ என்கிற நிகழ்ச்சி காட்டிக் கொண்டிருந்தார்கள். அதில் பேட்டியாளல் “உங்களுக்கு யாருமில்லையா... ஏன் இங்கே வந்தீங்க!“ என்று கேட்க – “அப்பா எனக்கு எல்லோரும் இருக்காங்க. அன்பான மகன். அனுசரனையான மருமக. தங்கமானப் பேத்திகள்“ என்று உருகினார்.*

*“அப்புறம் ஏன் இங்கே? அவர்கள் கவனிக்கலியா..?“*

*“நல்லாப் பார்த்துகிட்டாங்க. நாங்க வாழ்ந்து முடிச்சவங்க. எங்களைச் சொல்லி – மகன் குடும்பத்தை பிரிஞ்சு – வாழ்வை அனுபவிக்காம ஒதுக்கறான். எத்தனை சொல்லியும் கேட்கலை. அதனால – மருமகளைக் கொடுமை பண்றமாதிரி நடித்து – எங்க மேல வெறுப்பு வர வச்சு – அவன் - அவளை அழைசசுக்கவச்சோம். இப்போ அவங்களும் சந்தோஷமாயிருக்காங்க. நாங்களும் இங்கே பத்திரம்!“*

*அவர் சொல்லிவிட்டுத் தன் கண்களைத் துடைக்க, எங்களின் கண்களும் நனைந்து போயின.*

## *5. வியாபாரிகள்*

*அசோக் – ஈவினிங் டீக்குப்பிறகு. தொழிற்சாலையின் ஒதுக்கில் பாதுகாப்பாய் அமைக்கப்பட்டிருந்த 'ஸ்மோக்கிங்க பூத்' திற்குப் போய்விட்டு. லேபரட்டரிக்குத் திரும்பினபோதுதான் அந்த அசம்பாவிதம் நடந்தது.*

*குடுவைக்குள் கொதித்து ஆவியாகிக் கொண்டிருந்த அமிலம் பட்டென்று கண்ணாடியை உடைக்க. என்னவோ ஏதோ வென்று திருமபுவதற்குள் அது அவனது முகத்தில் தெறித்தது.*

*"ஐயோ!" என்று கண்களைக் பொத்திக் கொண்டு அலறினான். கண்கள் திகுதிகுவென எரிந்தன. பிசைந்தன, அரித்தன.*

*அலறல் கேட்டு அக்கம் பக்கத்தவர்கள் ஓடிவந்தார்கள்.*

*அவனால் பேசமுடியவில்லை. உடைந்து கிடந்த உபகரணங்களைப் பார்த்ததுமே அவர்களுக்கு விபரம் புரிந்தது. உடன் பதறிக் கொண்டு முதலுதவி அறைக்கு அழைததுச் சென்றனர்.*

*சேஃப்ட்டி மானேஜர், புரொடக்ஷன் மானேஜர், பர்சனல் மானேஜர், ஜி.எம்.. என்று எல்லோருக்கும் தகவல் பறந்தது. அவர்களும், ஜெனரல் ஷிஃப்ட் முடிந்து கிளம்பிக் கொண்டிருந்த தொழிலாளர்களும் அதே வேகத்தில் வந்து குழுமினர்.*

*"என்னாச்சுப்பா...?"*

*"கண்ணில் அமிலம்..."*

*"ஓ... காட்! டிஸ்டில் வாட்டர் எடு! கமான் - க்விக்! கண்களை நன்றாகக் கழுவு!"*

*"பண்ணிகிட்டிருக்கோம் சார்!" – குலோத்துங்கன் பதிலளித்துவிட்டு பக்கெட்டில் தண்ணீர் பிடித்து வந்தான்.*

*"அசோக்! பக்கெட்டிற்குள் முகத்தை அமிழ்த்தி, கண்கள் விரியத் திறந்து பார்!"*

*"முடியலே சார்!"*

*"டிரை பண்ணுப்பா"*

*"முடியலே சார். என்னை விட்டுருங்க!"*

*"சரி. அண்ணாந்து படுத்துக்கோ. நாங்களே கண்களைத் திறந்து" சேஃப்டி ஆபீசர் அவனைப் படுக்க வைத்தா. சலைன் வாட்டரால் அவனது கண்களைச் சுத்தம் பண்ண முயன்றார்.*

*"ஐயோ... வேணாம் சார்! எரிச்சல் தாங்க முடியலே!"*

*"கொஞ்ச நேரம் பல்லைக் கடிச்சுட்டு பொறுத்துக்போப்பா.. சரியாப் போகும்!"*

*போகவில்லை. வலி அதிகமாயிற்று. துடித்துப போனான். அதற்குள் ஆம்புலன்ஸ் பதறிக்கொண்டு வந்தது.*

*"அசோக்... ஏறுப்பா! குலோ! நீயும் துணைக்குப் போய் வா!"*

*"எந்த ஆஸ்பத்திரிக்கு...? ! "யாரோ கேட்டார்கள்." கவர்ன்மென்ட்டிற்கா?"*

*"நோ... நோ! அங்கே போனால் கவனிக்க நாதி இருக்காது. சிட்டியில் பிரைவேட் ஆஸ்பத்திரிக்கே விடுங்க!"*

*ஆம்புலன்ஸ் தலை விளக்கைப் போட்டுக் கொண்டு பறந்தது.*

*சேஃப்டி மானோஜர் பர்சனல் மானேஜரிடம், "ஸம்வாட் ஸீரியஸ்! நீங்க ஆஸ்பத்திரிக்குப் போன் பண்ணிச் சொல்லிடுங்க!"*

*"இதோ... !"*

*போனைஎடுத்த ரிசப்ஷனிஸ்ட் "ஆக்ஸிடெட்ணட் கேஸா...?" என்றாள் அலட்சியத்துடன். நேரத்தில் வீட்டிற்குக் கிளம்ப முடிய வில்லையே என்கிற வெறுப்பு அவளுக்கு. "ஆக்ஸிடெண்ட்டையெல்லாம் ஏன் சார் இங்கே அனுப்பறீங்க..? போலீஸ் கேஸானால் தலை வலி! பேசாம கவர்ன்மென்ட் ஆஸ்பத்திரிக்கு அனுப்பக் கூடாதா...?"*

*"நான் சொல்றதைக் கேளும்மா. விபத்து வெளியே நடக்கலை. இதில் எந்த க்ரைமும் இலை. எதிர்பாராமல் நடந்த அசம்பாவிதம்! உங்க சீஃப்கிட்டே கொடு நான் பேசறேன்."*

*அவள் சீப்பைக் கனெக்ட் பண்ணி, "சார்! ஆக்ஸிடெண்ட் கேஸாம்." என்றாள்.*

*"முடியாதுன்னு சொல்லி அனுப்பிடு. ஏற்கெனவே பாவ புண்ணியம் பார்த்து அட்டெண்ட் பண்ணி கோர்ட்டுககு நாயா அலைஞ்சிட்டுருக்கிறது போதும்!"*

*"பார்ட்டி லைன்ல இருக்கார். நீங்களே பேசுங்க!"*

*"சார்! நான் கம்பெனியோட பர்சனல் மானேஜர் பேசறேன்" என்று விபரம் சொன்னார். "வி வில் செட்டில் யுவர் பில் இம்மீடியட்லி. ப்ளீஸ் டேக் கோ ஆஃப் ஹிம்!"*

*"தென் ஓ.கே. அனுப்பி வைங்க!"*

*அரை மணி நேரத்தில் ஆம்புலன்ஸ் அந்த ஆஸ்பத்திரியை அடைந்தது. வாட்ச்மேன் "என்னாச்சு...?" என்றான் வழியை மறித்துக கொண்டு.*

*"விபத்து!"*

*"விபத்தா.. இருங்க கேட்டுச சொல்றேன்!"*

*"போன் பண்ணியிருக்கு, தள்ளுப்பா!" என்ற குலோத்துங்கன் ரிசப்ஷனுக்கு விரைந்தான். அங்கு அரட்டையில் இருந்த பெண்ணிடம் விபரம் படபடக்க.*

*"ஓ! அந்த கேஸா.. வந்துருசசா...? அந்தரூம்ல கிடத்துங்க!" – சொல்லிவிட்டு அரட்டையிலிருந்து தொடர்ந்தாள்.*

*குலோத்துங்கன் அசோக்கைக் கைத்தாங்கலாகக் கொண்டு போய் பெஞ்சில் கிடத்தினான். அங்கு மாத நாவல் படித்துக கொண்டிருந்த நர்ஸ்.*

*“என்ன விஷயம்...?“ என்றாள்.*

*சொன்னான்.*

*“எனக்கு நாழியாச்சு. வேற நர்ஸ் வருவாங்க. அவங்ககிட்டே சொல்லுங்க!“*

*“ப்ளீஸ் சிஸ்டர்! ப்ளீஸ்..“*

*அவள் ஒரு ப்ளீஸும் பண்ணவில்லை. தன் டம்பப் பையைத் தோளில் போட்டுக் கொண்டு போய்விட்டாள்.*

*அசோக் வேதனையில் துடித்துக கொண்டிருந்தான். “அம்மா...ம்மா“ என்று அரற்றினான். குலோத்தங்கனுக்கு அவனைப் பார்க்கப் பார்க்க மனம் பதறிற்று. கைகளைப் பிசைந்து கொண்டு, “அசோக்! கொஞ்சம் பொறுத்துககோ. இதோ டாக்டர் வந்துட்டிருக்கார்!“ என்று கண்ணில் பட்ட டாக்டரிடம் ஓடினான். பரம் ஒப்பித்தான்.*

*“ஸாரி... எனக்கு வேற கேஸ் இருக்கு. டூட்டி டாக்டர்ட்ட சொல்லுங்க!“*

*“அவரைக் காணோமே!“*

*“தென் வெயிட்! வந்திருவார்.“ அவர் கழண்டு கொண்டார்.*

*அதற்குள் வாச்சைப் பார்த்தபடி நர்ஸ் ஒருத்தி நுழைய “சிஸ்டர்!“ என்ற அவளிடம் ஓடினான்.*

*“கொஞ்சம் பொறுங்க. நான் இன்னும் சார்ஜ்ஜே எடுக்கலே. லாக் புக்கை படிச்சிட்டு...“*

*“பேஷண்ட் துடிக்கிறான்.“*

*“அதுக்காக நாங்க என்ன பண்ண முடியும்...? டாக்டர் வரட்டும்!“*

*“ப்ளீஸ் ஸிஸ்டர்! வலி பொறுக்காம அழறான்.“*

*“அதான் டூட்டி டாக்டர் வரட்டும்னேனில்லே...?“ அவள் எரிந்து விழுந்தாள்.*

*பக்கத்து அறையிலிருந்தே சீனியர் டாக்டர் சப்தம் கேட்டு உள்ளே வந்து, “என்ன இங்கே கலாட்டா...?“ என்றார்.*

*“கலாட்டா இல்லே சார். இவன் கண்ணுல அமிலம் விழுந்து.. டாக்டர் உடனே ஏதாச்சும் செஞ்சாகணும். இல்லென்னா...“*

*“செய்யலாம். செய்வாங்க. டாக்டர் வரட்டும்!“*

*“ஸார்... நீங்க!“*

*“ஐ ஆம் லிட்டில் பிட் பிஸி! தவிர, எனக்கு அப்பாற்பட்ட கேஸ் இது! தொடக்கூடாது!“*

*“டாக்டர்! மனிதாபிமான அடிப்படையிலே...“*

*“மனிதாபிமானமா... ஹாஹ்ஹா. நால்லாச் சொன்னீங்க! மனிதாபிமானம் பார்த்தால் நாங்க உயிரைவிட வேண்டியதுதான்! சம்பளம் ரெய்ஸ் பண்ணி மூணு வருஷமாச்சு. பிரமோஷன் இல்லை. ஆனா, இருபத்து நாலு மணி நேரமும் உழைக்கணும். கேட்டால்,*

இஷ்டமானால் இரு – இல்லாட்டி போ! சீனியருக்கு இங்கே மதிப்பில்லை. மரியாதையில்லை.

“உங்களுக்கு ஆயிரம் பிரச்னையிருக்கலாம். அவற்றை எங்க மேலதான் தீர்த்துக்கணுமா...?“ அவனுக்கு எரிச்சலாய் வந்தது. “கவர்ன்மென்ட் ஆஸபத்திரிக்குப் போனால் கவனிப்பு இருக்காதுன்னுதானே இங்கே கொண்டு வந்தோம். இங்கேயும் இப்படியா...?“

“அதுக்காக? நாங்க என்ன பண்ண முடியும்? என் வார்டை மட்டும் தான் நான் பார்க்கணும்னு ஸ்ட்ரிக்ட் ஆர்டர்!“

அசோக், “ஐயோ... எனக்கு முடியலேடாட“ என்று கண்களைப் பிடித்துக் கொண்டு அரற்றினான். தேம்பினான். அவனது கண்கள் வெம்பிப் போயிருந்தன.

“அசோக்.. கசக்காதடா.. கசக்காதே!“

“வலி உயிர் போகுதடா.. மூச்சு முட்டுது. எனட்ககு சுகர் இருக்கு. பி.பி. கம்ப்ளெயிண்ட் இருக்கு. சீக்கிரம் கவனிக்கலேன்னா...“

குலோத்துங்கனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. “இவர்களெல்லாம் டாக்டர்களா இல்லை எமன்களா...?“

அதற்குள் டூட்டி டாக்டரே வந்தார். “என்னாச்சு தம்பி..?“ என்றார் முகம் கழுவியபடி பேச்சில் சிகரெட் வாசம் இருந்தது.

“ஆக்ஸிட் பட்டிருச்சு சார்.“

“ஏன் ஆக்ஸிட் கிட்டே போகணும்?“

“அது வந்து.. சாம்பிள் டெஸ்ட் பண்ணிட்டிருந்தப்பபோ...“

கேர்புல்லா இருக்கிறதில்லையா? அப்புறம் கண்ணுபோச்சு, காது போச்சுன்னு ஓடிவரது“ என்று அவனது கண்களைப் பிடித்து அழுத்திப் பார்க்க, அசோக் “அம்மா“ என்று அலறினான்.

“ஏம்ப்பா கத்தறே..? இப்போ என்ன பண்ணினேன்? சும்மா தொட்டதுக்கே இத்தனை ஆர்ப்பாட்டமா...?“

“வலி தாங்கலே சார்.“

“ஆக்ஸிட் பட்டா வலிக்கத்தான் செய்யும். அதுக்கு யார் என்ன பண்ண முடீயும்? ஸிஸ்டர்! இவருக்கு பைல் போடு!“

“டாக்டர்! ப்ளீஸ்.. டிலே பண்ணாம டிரீட்மெண்டை ஆரம்பிங்க!“

“இருப்பா! அவசரப்பட்டா முடீயுமா? பார்மாலிடிஸெல்லாம் இருக்கில்லே! சரியா ரிஜிஸ்டர் பண்ணாம கைவச்சு, நாளைக்கு ஏதாவது ஓண்ணு ஆச்சுன்னா யார் பதில் சொறது?“

*அந்த நர்ஸ் சாவகாசமாய் வெளியே போய் பதினைந்து நிமிடம் கழித்து பைலுடன் வந்து "உங்க பெயரென்ன... ஊரேன்ன.. அப்பா பெரேன்ன. வயசென்ன..." என்று வெறுப்பேற்றினாள்.*

*"கையெழுத்துப போடுங்க!"*

*"ஏன் சிஸ்டர்? இப்போ இதுவா முக்கியம். பேஷண்ட்? துவண்டு போய்க் கிடக்கிறான். இந்த நேரத்துல..."*

*"மிஸ்டர்! என்ன டோன் உயருது.. எந்த நேரத்துல எதைச் செய்யனும்னு எங்களுக்குத் தெரியும். நீங்க முதல்ல வெளியே போங்க!"*

*"அதுகில்லை சிஸ்டர். சிகிச்சை..."*

*"சிகிச்சை! நாங்க பண்ணமுடியாது. அதுக்கு ஐ ஸ்பெஷலிஸ்ட் வரணும். !"*

*"எப்போ வருவார்...?"*

*"போன் பண்ணியிருக்கு, வந்திருவார். அதுக்குள்ளே பார்மாலிடீஸை முடிக்க அனுமதியுங்க. முதலில் ரிஜிஸ்ட்ரேஷன் பீஸ் கட்டிட்டு வாங்க! வேஷண்டை வார்டுக்கு கொண்டு போகணும்!"*

*அவர்கள் பீஸிலேயே குறியாயிருந்தனர்.*

*குலோத்துஙகன் ஓடிப்போய் பீஸ் கட்டிவிட்டு வந்தபோது, அவர்களது பார்மாலிடீஸெல்லாம் முடிந்திருந்தது. அசோக்கின் மூச்சும்.*

## *6. ஏழை வயிறு*

*"இதுக்கு நீ சம்மதிச்சுதான்ய்யா ஆகணும்!" மூன்று மாத கர்ப்பத்திற்கு பங்கம் வராதவாறு ஒருக்களித்து அமர்ந்திருந்த பார்வதி கெஞ்சினாள்.*

*"அதெல்லாம் முடியாது. சினிமாப் பைத்யம் பிடித்து அலையாதே!" மெய்யன் சாப்பிட்டு ஏப்பம் விட்டபடி கைகழுவினான். வேட்டியை உதறி கட்டிக்கொண்டு பாய்விரித்தான்.*

*"எனக்கு ஆசையாய் இருக்கய்யா. நான் என்ன நகை நட்டு வேணும், பட்டு புடவை வேணும்னா கேட்கிறேன்? நம்ம கருமபுச் சாறு வண்டியை படம் பிடிக்கிறேங்கிறாங்க. புடிச்சால் என்ன குறைஞ்சு போகுமாம்!" என்று அவனுடைய கால்களை அமுக்கி விட்டாள்.*

*"அவங்க சும்மாவா கேட்கிறாங்க...? இருநூறு ரூபா வாடகை! நூறு ரூபா அட்வான்சாவே தந்துட்டாங்க, சரின்னு சொல்லுய்யா. வர வெள்ளிக்கிழமை ஒருநாள்தானே! சூட்டிங்கு பார்க்கணும்னு எனக்கும் ரொம்ப நாளாய் ஆசைய்ய. நடிகைகளையெல்லாம் நேரில் பார்க்கலாம்!"*

*"விவரம் புரியாம பேசாதடி! நம்ம ஏவாரம் போவும். அண்ணைக்கு கோயில்ல திருவிழா இருக்கு. செமத்தியா ஜூஸ் ஓடும்!"*

*"ஓடட்டும்யா. யார் வேணாண்ணாங்க. ஏவாரம் பாட்டுக்கு ஏவாரம்! அவங்க பாட்டுக்கு ஒரு பக்கம் படம் புடிக்கட்டும். சூட்டிங்க பார்க்கறதுக்கு சனங்க கூடும. நமக்கு ஏவாரம் கூடுமே!"*

*அவன் யோசனையுடன் படுத்திருந்தான்.*

*பெண்டாட்டியின் பேச்சை அவனால் தட்டமுடியவில்லை. கர்ப்பமானவள். ஏற்கனவே இரண்டுமுறை உண்டாகி நிலைக்காமல் போயிற்று. இம்முறையாவது குழந்தை பிழைக்க வேண்டும. உருப்படியாய்ப் பிறக்க வேண்டும். அதற்கு என்ன விலை வேண்டுமானாலும் கொடுககத் தயார்!"*

*அதற்கு அவளுடைய ஆசைகளையெல்லாம் நிறைவேற்ற வேண்டும். அவளுடைய மனதில் சஞ்சலங்கள் கூடாது. அது கருவைப் பாதிக்கும். இன்னொரு முறை கரு கலைந்தால் அதை இருவராலுமே தாங்கிக் கொள்ள முடியாது.*

*"என்னய்ய சொல்றே..?"*

*"சரி. உன் இஷ்டம்!"*

*பார்வதிக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. வெள்ளிக்கிழமை எப்போது வரும என்று காத்திருந்தாள். அன்று விடியற்காலையிலேயே எழுந்து ரெடியாகி விட்டாள். கணவனுக்கும் வாடகை துணி வாங்கி பளபளவென உடுத்திப் பூரித்துப் போனாள்.*

*அவர்கள் கிளம்புவதற்கும் வேன் ஒன்று அவசரமாய் வந்துநிற்பதற்கும் சரியாயிருந்தது. "இன்னுமா ரெடியாகலே..?"*

*“நாங்க ரெடிங்க“*

*“ஏறுங்க வண்டியிலே.“*

*கடைவீதியில் அந்த நேரத்திலேயே ஜனத்திரளாயிருந்தது. கோவிலின் முற்றத்தில் ஆரம்பித்து தெரு முழுக்கத் தோரணங்கள்! நாதஸ்வரம் பந்தல் போட்டு மங்களம் பாடிற்று. ஸ்பீக்கர்களின் சீர்காழி. இரண்டு பக்கமும் இளநீர்க்கடை, பாத்திரக்கடை, துணி, சோப்பு, சீப்பு, கண்ணாடி! அவற்றை பார்க்கப் பார்க்க அவளுக்கு வியப்பாயிற்று. இத்தனை கடைகளுக்கும் இருநூறு வீதம் வாடகை என்றால்... அம்மாடி!“*

*படம் பிடிப்பவர் பெரிய பணக்காரராய்த் தானிருக்க வேண்டும்!“*

*“மளமளன்னு தொழிலைக் கவனிங்க!“*

*“இதோ ஆச்சுங்க. பார்வதி! நீ மிசினைத் துடைச்சு வை. நான் மண்டிக்குப் போய்க் கரும்பு ஏத்தி வரேன்!“*

*சரியென்று உருளையைத் தொட்டுக் கும்பிட்டாள். துணியால் துடைத்துப் பொட்டு வைத்தாள். ஆயில் ஊற்றினாள். ஐஸ் கட்டிகளை ரப்பர் பைக்குள் போட்டு உடைத்து உதிர்த்தாள்.*

*அதற்குள் படபிடிப்பு வேன் வந்து ஜெனரேட்டர் ஓட ஆரம்பித்திருந்தது. காமிராக்கள், டிராலி! ஷேடுகள்! தாடிக்காரர் ஒருவர் கழுத்தில் தொங்கின சாதனத்தை கண்ணில் வைத்து அண்ணாந்து பார்த்தார்.*

*கார்கள் ‘சர்சர்‘ரென வந்து நின்றன. நின்ற கார் ஒன்றிலிருந்து கும்பலாய் சிலர் இறங்கினர். மேக்கப் சாமான்களும், காஸ்ட்யூம்களும் பையன்களால் ஒதுக்கப்பட்டன.*

*கப்பல் மாதிரி கார் ஒன்று வந்து நிற்க, அதிலிருந்து நாயகன் ஜவடாலுடன் இறங்கினார். ஜனங்களுக்கு கையெடுத்துக் கும்பிட்டு விட்டு வையன் தூக்கி வந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.*

*அவருடைய தலைக்கு மேல் குடை விரிந்தது. யாரோ ஒரு பையன் – டைரக்டராக இருக்க வேண்டும். அவரது காலைத் தொட்டு வணங்கனிர். பேப்பரை விரித்து என்னவோ சொல்ல ஆரம்பித்த போது வேறோரு கார்!.*

*அதிலிருநது அன்ன நடையுடனும் ஜொலிக்கும் தாவணியுடனும் ‘அட.. அது நடிகை நர்மதா இல்லை...?‘ பார்வதி அதிசயத்துடன் நின்றிருந்தாள் ‘அடா அடா... என்ன அழகு!‘*

*நர்மாதாவின் தலை கொள்ளாமல் பூ! அவளுடைய தலையலங்காரமும, உதட்டுச சாயமும், கழுத்து நகைகளும் அவளை கவர்ந்திருந்தன.*

*மெய்யன், வண்டியில் கரும்புக் கட்டுகளை இறக்கி பட்டை சீவ ஆரம்பித்தான். “என்ன புள்ளே அங்கே வேடிக்கை..?“*

*“அங்கே பாருய்யா.. அந்தம்மா எத்தனை செகப்பு!“*

*“எல்லாம் மேக்கப்பா இருக்கும். நீ மெஷினை ஸ்டாட்ட் பண்ணு!“*

*கயிற்றை சொண்டி இழுக்க, அவனது மனது ஒரு நிமிடம் பின்னோக்கி ஓட ஆரம்பித்தது.*

*அவனது ஊர் புதுக்கோட்டைப் பக்கம். வறட்சியான கிராமம். மழை வருடத்திற்கு வருடம் ஏமாற்றிக் கொண்டேயிருக்க, வயிற்றுப் பிழைப்பிற்கு வேண்டி மெட்ராஸிற்கு ஓடி வந்திருந்தான்.*

*அந்த நாட்களில் மெஷினெல்லாம் இல்லை. கையால்தான் சுற்றவேண்டும். பெரியவர் ஒருவரிடம் வேலைக்குச் சேர்ந்து வெயிலில் கஷ்டப்படுவான். அவர், கரும்பை மட்டுமில்லை – அவனையும் சேர்த்து பிழிந்தெடுககவே, வாடகைக்கு மெஷின் எடுத்துத் தனியாய் விற்க ஆரம்பித்தான்.*

*படிப்படியாய் முன்னேறி, பாங்க் லோனும், பார்வதியின் நகையும் சேர்ந்து இந்த மெஷினைச் சொந்தமாய் வாங்குகிற வரையாயிற்று.*

*கரும்புச்சாறு வியாபாரம் நிரந்தரமில்லை. ஆறு மாதம் பிழியலாம். குளிர் நாளில் போனியாகாது. அந்தச் சமயத்தில் அவர்கள் ஊருக்கு போய் கூலி வேலை பார்ப்பர். வெயில் ஆரம்பித்ததும் திரும்ப வந்து தொழிலை கவனிப்பர். சம்பாதிப்பதையெல்லாம் கோடையிலேயே பார்த்துக் கொள்ள வேண்டும்.*

*மேய்யன் மெஷினைத் தொட்டு வணங்கிவிட்டு கரும்பை உருளைக்கிடையே செருகின போது புரடக்ஷன் மானேஜ ஓடி வந்து ''எல்லாம் தயாரா..?''*

*''தயாருங்கய்யா.''*

*''நீங்க பாட்டுக்கு ஜோலியைக் கவனிங்க. காமிராவை பார்க்கக்கூடாது யதார்த்தமா இருக்கணும்! கம்பெனிகாரங்களுக்கெல்லாம் ஜுஸ் கொடுங்க மொத்தமா எவ்ளோ ஆச்சுன்னு சொன்னால் சாயந்திரம் கணக்கைத் தீர்த்து விடறேன். என்ன தெரிஞ்சுதா..?''*

*''சர்ங்கய்யா.''*

*''ஹீரோவும் ஹீரோயினும் இங்கே வந்து கரும்புச் சாறு குடிக்கிற மாதி ஷாட்! அப்புறம் வில்லன் வருவார். அவங்களுக்குள்ளே சண்டை நடக்கும்!''*

*''நிஜ சண்டைங்களா..?''*

*''ஏய்... சும்மாரு புள்ள.. !''*

*மானேஜர் அவளின் முந்தானை விலகின இடுப்பை ஒரு மாதிரி பார்த்துவிட்டு பாக்கை வாயில் கொட்டிக் கொண்டு நடந்தார்.*

*படப்பிடிப்பு ஆரம்பித்தது. கிளாப்படிக்கப்பட்டு பாடல் ஒலிக்க, ஹீரோவும் ஹீரோயினும் வாயசைத்துக் கொண்டு தெருவில் ஆடிக்கொண்டே வரவேண்டும். பாடல் ஆரும்பித்து காமிரா ஸ்டார்ட்டாகி, ''ரெடி டேக்'' என டைரக்டர் கத்த, ஹீரோ ஸ்டெப் தவறவிட்டார்.*

*அடுத்த முறை ஹீரோயின்! அப்புறம் காமிராக் கோணம் பிரச்னை. இப்படியே நாலு வரி பாட்டையே நாற்பது நிமிடத்திற்கு நீட்டினர்.*

*பார்வதிக்குச் சலிப்பாய் வந்தது. வெயிலில் நிற்கமுடியவில்லை. தலையைச் சுற்றிற்று. காலையில் சாப்பிடாமல் வந்ததில் பசி வயிற்றை கிள்ளிற்று. கண்களை செருகிக் கொண்டு வந்தது.*

*நேரம் ஆக ஆக கூட்டம் மொய்க்க ஆரும்பித்தது. யார் யார் கம்பெனிக்காரர்கள். யார் வெளியாட்கள் எனத் தெரியவில்லை. ஜுஸ் ரெடியாக ஆக, போனியாயிற்று. கருமபும் கரைந்து சக்கையாயிற்று.*

*ஆனால் பணம் சேரவில்லை. மெய்யன் ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் எழுதிவைக்க ஆரம்பித்தான். அவனுக்கே கை அசந்து போயிற்று. பரவாயில்லை – இன்று நல்ல வருமானம்தான் என மனது சந்தோஷப்பட்டது. தேற்றிக் கொண்டது.*

*பார்வதி வியர்த்து வியர்வையில் குளித்துப போயிருந்தாள். உடல் தளரத் தளர சினிமா ஆசை போயிற்று. சூட்டிங் என்றால் இதுதான்... இப்படியா இழுத்தடிப்பார்கள் என்கிற சலிப்பு வந்தது.*

*அவளுடைய நிலமை அவனைக் கவலை கொள்ளச் செய்தது. “நீ வீட்டுக்கு போ புள்ள. போய் இளைப்பாறு.“*

*“வேணாய்யா. நானும் போயிட்டா நீ தனியாய் என்ன பண்ணுவாய்... எப்படிச் சமாளிப்பாய்...?“*

*“பரவாயில்லை. நான் சமாளிச்சுகிறேன். புள்ளைத்தாய்ச்சி நீ கஷ்டப்படக்கூடாது. இம்முறையாவது குழந்தை நிலைக்கணும். ரிக்ஷா புடிச்சு நீ முதல்ல கிளம்பு!“*

*என்னய்ய அங்கே பேச்சு... தொழிலை கவனி! இங்கே நாலுகிளாஸ் கொடு!“*

*“எனக்கு ரெண்டு!“*

*“இங்கே மூணு!“*

*“இதோ ஆச்சுங்க“ என்று கிளாஸ்களை எடுத்துக கொண்டு பக்கத்து பைப்படிக்கு கழுவப் போனவள் அப்படியே சரிந்து விழ – மெய்யன் பதறிப் போனான்.*

*கரும்புகளைப் போட்டுவிட்டு “பார்வதி“ என்று ஓடி அணைத்துக கொண்டான். “பார்வதி.. உனக்கு என்னாச்சு... சொல்லு புள்ள! என்ன பண்ணுது?“*

*அவள் லேசாய் கண் திறந்து. “எனக்கு ஒண்ணுமில்லைய்யா. சும்மா மயக்கம். அவ்ளோதான்! நீ போய் தொழிலைக் கவனி!“*

*“யோவ்! ஜுஸ் தரமுடீயுமா முடியாதா?“*

*“கூப்பிடறாங்க போய்யா!“*

*“உன்னை இந்த நிலமைல விட்டுட்டு... நான் எப்படி..?“*

*அதற்குள் புரடக்ஷன் மானேஜர் ஆவேசத்துடன் ஓடிவந்து, “ஏய்! இங்கே என்ன பண்றே...? உன்னால அங்கே படப்பிடிப்பு லேட்டாகுது. வா!“*

*“ஐயா.. என் பெண்டாட்டி.... !“*

*“அவளைப் பார்த்தால் ஷாட் என்னாகறது! கழுத்தறுக்காம வா! ஹீரோ வெயிட் பண்றார்.“*

*“ஐயா.. உங்க கால்ல விபந்து கேக்கறேன்.. அவ பிள்ளைத் தாய்ச்சியா..“*

*“ஆமா... பிள்ளை தாய்ச்சி! கை நீட்டி அட்வான்ஸ் வாங்கும் போது அதைபத்தி யோசிக்சிருக்கணும்!“ என்று இழுத்துப் போய் மெஷினிடம் நிறுத்தினார்.*

*அவனுடைய கைகள் கரும்பில் இருந்தாலும் கண்களும் நினைப்பும்! பார்வதியின் மேலேதானிருந்தன. பாவிப் பெண்! சினிமா சூட்டிங்குன்னு அலைஞ்சாள். ஆசைபட்டாள்! ஆனால் அதை பார்க்கக்கூட குடுதது வைக்கலியே... ! சூட்டிங்க பார்க்காட்டியும் போகுது. உடம்பு நோகாமலிந்தாலாவது போதுமே! வெயிலில் கிடக்கிறாளே! கடவுளே... குழந்தை.. !*

*அரைமணி நேரம்தான் அவனால் பொறுக்க முடிந்தது. தரையில் விழுந்து கிடக்கும் பார்வதியைப் பார்க்கப் பார்க்க, “சூட்டிங்காவது கீட்டிங்காவது. எனக்கு பெண்டாட்டிதான் முக்கியம்“ என்று எல்லாவற்றையும் போட்டுவிட்டு ஓட ஆரம்பித்தான்.*

*ரிக்ஷா பிடித்து குடிசைக்குள் கிடத்தி முகத்தில் தண்ணீர் தெளித்து அவள் கண் திறக்கவும்தான் மெய்யனுக்குச் சமாதானமாயிற்று.*

*“இந்தா புள்ளே! கஞ்சி குடி! தெம்பா இருக்கும்.“*

*குடித்ததும அவள் எழுந்து அமர்ந்தாள். தலைசுற்றலெல்லாம் இப்போது குறைந்திருந்தது. கண்கள் தெளிவு பெற்றிருந்தன.*

*“எப்படி புள்ளே இருக்கு..?“*

*“பரவாயில்லைய்யா. வாப் போவோம்.“*

*“எங்கே?“*

*“கரும்பு பிழியத்தான். கைநீட்டி காசு வாங்கிட்டோமே?“*

*“வேணாம். நீ படுத்திரு. நான் போறேன்.“*

*“சரி கிளம்புய்யா. உனக்குச் சோறு ஆக்கி எடுத்து வரேன்!“*

*மெய்யன் தன் மனதைத் தேற்றிக் கொண்டு கடைவீதிக்கு வர, அங்கே கண்ட காட்சி அவனைத் திகிலடையச் செய்தது.*

*அப்போது சண்டை காட்சி எடுத்தார்கள் போலும். ஹீரோவின் டூப் தாவி வில்லன் மேல் பாய்ந்தார். “ஏழைகள் வயிற்றில் அடிக்கும் பாவியே... நீ ஒழிந்து போ“ என்று சொல்லிச் சொல்லி அடிக்க, காமிரா அவர்களை பின் தொடர்ந்தது. கூட்டம் கெக்கலித்தது. ஹீரோயின் விசிலடித்தாள். கூட்டம் கைதட்டிற்று அங்கிருந்த பாத்திரக் கடைகளெல்லாம் நசுங்கின. காய்கள் சொதம்பின. கலர் பவுடர்கள் புகை கிளப்பின. பிளாஸ்டிக் சாமான்கள் தெறித்து விழுந்தன. வில்லன் ஓடிக் கொண்டேயிருந்தான். சைக்கிள் வண்டியைப் பிடித்து தள்ளினான்.*

*பாட்டில்களை உடைத்தான். அப்பயே ஓடி ஓடி... கரும்புச் சாறு மெஷினிடம் வந்தவன் இந்த பக்கமும் அந்த பக்கமும் நகர, ஹீரோ விடவில்லை.*

*காமிராவிற்குப் பின்னாலிருந்து டைரக்டர் சைகைகாட்ட, வில்லன் சட்டென மெஷினை தூக்டக தள்ளி விட மெய்யனுக்கு பக்கென்றாயிற்று. படபிடிப்பிற்கு வேண்டி அவர்கள் முன்பே அதன் போல்ட்டு நட்டுகளைக் கழற்றி வைத்திருக்க வேண்டும்.*

*தள்ளின வேகத்தில் மெஷின் பார்ட் பார்ட்டாய் தரையில் சிதறிற்று. ‘‘ஐயா..‘‘ என்று மெய்யன் அலறிக் கொண்டு சீனுக்குள் நுழைய, இரண்டு முரட்டுகரங்கள் அவனை பிடித்து இழுத்தன.*

*அதற்குள் மெஷினின் இரும்பு ராடுகள் துவசம் செய்யப்பட்டன. வில்லன் அவற்றை அடித்து நொறுக்க, உருளைகள் நசுங்கி ஓடின.*

*‘‘ஐயா... என்னோட மெஷின்!‘‘*

*‘‘அட சும்மாயிருய்யா!‘‘*

*‘‘ஐயோ! வண்டியை உடைக்கிறாங்களே கேட்பாரில்லையா...?‘‘*

*‘‘கொஞ்சம் பொறுத்துக்கய்யா. சீன் இப்போ முடிஞ்சிரும்!‘‘*

*‘‘ஐயோ... என்னை விடுங்க! அது என் உயில்! என் தெய்வம்! பாங்க் லோட் போட்டு வாங்கினதுய்யா. உடைக்காதீங்கய்யா.. உடைக்காதீங்கய்யா! என் வயிற்று பிழைப்பை கெடுக்காதீங்கய்யா..‘‘*

*மெய்யன் ஓடி ஹீரோவிடம் கெஞ்ச ‘‘கட். கட்‘‘*

*‘‘யார்ய்யா இவனை உள்ளே விட்டது? எனக்கு டயமாச்சு! இழுத்துப போங்கய்யா‘‘*

*ஹீரோ கத்தவும் நான்கு தடியர்கள் அவன் மேல் பாய்ந்து குண்டுக் கட்டாய் தூக்கிப் போயினர். அவன் முரண்டுபிடிக்க – ‘‘ஏய்.. என்ன வம்பு பண்ணுகிறாயா... பணம் பத்தாயிரம் வாங்கிட்டு இப்போ தகறார் பண்ணினால் என்ன அர்த்தம்?‘‘*

*‘‘பணமா... பத்தாயிரமா... என்னங்கய்யா சொல்றீங்க..?‘‘*

*‘‘ஏய்... ! ஒண்ணும் தெரியாத மாதிரி நடிக்கிறாயா? புரடக்ஷன் மானேஜர் உன்னிடம் பத்தாயிரம் தரலை?‘‘*

*‘‘இல்லைங்கய்யா‘‘*

*‘‘பொய் சொல்றான். ஃப்ராடு! சினிமாகாரன்தானே – கூப்பாடு போட்டு பணம் புடுங்கலாம்னு திட்டம் போடறான். விடாதீங்க!‘‘ என்று ஆளுக்காள் அவனை அடித்துத துவசம் பண்ண ---*

*ஹீரோ மறுபடியும் ‘‘ஏழைகளோட வயித்துல அடிக்காதே!‘‘ என்று டயலாக் பேசிக்கொண்டு வில்லன் மேல் பாய்ந்து சண்டை போடுவதும் ‘‘காட்சி பிரமாதம்‘‘ என்று டைரக்டர் பாராட்டுவதும் –*

*அடிதாங்காமல் நொந்து போய் குற்றுயிரும் குலையியுருமாய்க் கிடந்த மெய்யனின் காதுகளிலும விழவே செய்தது.*

## *7. அரசாங்கத்துச் சொத்து*

*“எப்போ உண்டியலில் காசு விழுந்ததோ அந்த நிமிஷமே அது அரசாங்கத்திற்குச் சொந்தமாகிவிடுகிறது. அப்புறம் அதிலிருந்து சல்லிக்காசு கேட்க முடியாது!“*

*அறநிலைய அதிகாரி கறாராய்ப் பேசினார். எதிரே – ஊரை விட்டுத் தள்ளியிருந்த முருகன் கோவிலின் உண்டியலில் பணம் எண்ணப்பட்டுக கொண்டிருநதது.*

*பணிவுடன் அமர்ந்திருந்த சங்கர குருக்கள், “நான் என்ன எனக்காகவா கேட்கிறேன்...? கோவில் செலவிற்காகதானே!“ என்றார் கெஞ்சலுடன்.*

*“அப்படி என்னய்யா செலவு?“*

*“பக்தர்கள் இளைப்பார இங்கு மண்டபமில்லை. குடிநீர் வசதியில்லை. வருகிறவர்களெல்லாம் என்மேல் குறைபடுகிறார்கள். அரசாங்கத்திற்கு எழுதிப் போடக் கூடாதா என்கிறார்கள். எத்தனை முறைதான் எழுதுவதாம்!“*

*அதிகாரி அவரது பேச்சைக் கேட்டதாகவே தெரியவில்லை, “எண்ணி முடிச்சாச்சா..?“ என்று அலுவலர்களின் மேல் பாய்ந்தார்.*

*“பக்தர்களின் வசதி போகட்டும சார்! ஆயிரமாயிரமாய் காணிக்கைகள் விழுது. ஆனால் முருகனுக்கே அலங்காரம் பண்ணுவதற்கு ஆபரணங்களில்லை. கோவிலுககுள் ஒரே இருட்டு! புழுக்கம்! மழை பெய்தால் ஒழுகறது!“*

*“மிஸ்டர் சங்கரன்! சொன்னால் உங்களுக்கு விளங்க மாட்டேன் கிறதே! வாரி கொடுக்கறதுக்கு இது என் பணமோ உங்கள் பணமே இல்லை. புரிஞ்சுக்குங்க கவர்மெண்ட் பணம். இதைச் செலவு பண்ணுவதற்கு எனக்கு அதிகாரமில்லை!“.*

*“இருக்கலாம். எல்லாமே பக்தர்கள் காணிக்கையாகப் போட்டது தானே!“*

*“வாஸ்தவம். இல்லேங்களே. நான்தான் முன்பே சொன்னேனே! உண்டியலில் விழுந்த பின்பு கோவிலுககோ, இல்லை, இது முருகனுக்கோ இதில் துளியும் பாத்யதை இல்லை. தெரியாமல்தான் கேட்கிறேன் – இங்கே வருமானம் வருகிறதென்பதிற்காக எல்லாவற்றையும் இங்கேயே செலவு பண்ணிர முடியுமா? அப்புறம் வருமானமில்லாத இடங்களுக்கெல்லாம் சம்பளம் யார் தருவார்கள்? முருகன் தருவானா?“*

*பணம் பெட்டியில் கொட்டப்பட்டு சீல் செய்யப்பட்டது. பத்திரமாய் டாக்ஸியில் ஏற்றப்பட்டது. அதிகாரியும் கௌரவத்துடன் ஏறிக் கிளம்பினார்.*

*“சம்பளம் கொடுககிறார்களாம்! பெரிய சம்பளம்! நான் முழுக்கக் கோவிலைக் கழுவி. பூஜை! சந்தனம் அரைப்பு! பிரசாதம்! எத்தனை பாடுபடுகிறேன்!*

*முருகா.. ! எனக்காகவா பணம் கேட்டேன்? எல்லாம் உனக்காகத்தானே! எனக்கு மட்டும வசதியிருந்தால் நான் ஏன் மற்றவர்களின் கையை எதிர்பார்க்கிறேன்.?“*

*மறுவாரத்தில் –*

*பூஜையெல்லாம் முடித்து ராத்திரி கோவிலை மூடப் போனபோது "அப்பா!" என்று அவரது மகன் அலறிக் கொண்டு ஓடி வந்தான். "அப்பா! லாரி இடிச்சு நம்ம வீட்டு முன்னாடியிருந்த போஸ்ட் கம்பம் விழுந்திருச்சு! ஓடெல்லாம் காலி! கரண்ட் வேறு கட்!"*

*"முருகா! என்னப்பா இது சோதனை...! "பூசாரியிடம் சாவியைக் கொடுத்துவிட்டுச் சங்கரன் ஓடினார்.*

*வீட்டின் முன்பு கும்பல் திரண்டிருந்தது. தெரு முழுக்க இருட்டு. கம்பத்திலிருநது வயர் அறுந்து தொங்கிற்று. சூழ்நதிருந்தவர்கள் தங்களுக்குள் என்னவோ கிசுகிசுத்துக கொண்டனர். உள்ளே அவரது மனைவியும் மகள்களும் கண்களைச் கசக்கிக் கொண்டிருந்தனர்.*

*"வரிசையாய் நாலு கம்பம் சாஞ்சு கிடக்கே! எந்த கபோதி இடிச்சான்?"*

*"டெய்லர் லாரியாம். இடிச்சுட்டுப போயே போயிட்டானாம்!"*

*"நம்பர் பார்த்தீங்களா..?*

*"இல்லை. உடனே பவர் போயிடுத்தே. எப்படிப் பார்க்க முடியும்?"*

*சங்கரன், உடைந்திருந்த ஓடுகளைப் பார்த்தா, விட்டத்தைப் பார்த்தார். "முருகா! குடும்பத்தில் ஏற்கெனவே வறுமை! சொத்தென்று சொல்லிக் கொள்ள இந்த வீடு மட்டுமதான் இருந்தது. இப்போது இதுவும்..."*

*இடிந்துபோய் அமர்ந்தவருக்கு ராத்திரி முழுக்கத் தூக்கமில்லை, மனது பாரமாய் அழுதது.*

*காலையில் தெரு ஜனங்கள் அவரது வீட்டை முறறுகையிட்டு, குருககளே! போஸ்ட் கம்பத்தை சரிப்பண்ணலையா..? என்று கோஷம் போடாத குறை.*

*"நான் எப்படி சரி பண்ணுவேன்? எங்கிட்ட ஏது பணம்?"*

*"பணமில்லைன்னு சும்மாயிருந்தால் எப்படியாம்! உங்க கம்பத்தால் எங்க வீடுகளுக்கும் கூட சப்ளையில்லையே! மின்சார வாரியத்திற்குப் போய் ஆள் அழைசசு வந்து சரி பண்ணுங்க!"*

*மின்சார வாரியத்தில் பியூன் அவரை சந்தோஷத்துடன் வரவேற்றான். வரும்படி கிடைக்கும் என்கிற சந்தோஷம்! என்ஜினியரிடம் அறிமுகப்படுத்த, அவ் ஃபைலை புரட்டிக் கொண்டே, "எல்லாம் கேள்விப்பட்டேன்! என்ன செய்யப் போறீங்க?" என்றார்.*

*"நீங்கதான் சார் பெரிய மனது வைக்கணும். என்னவோ நான்தான் லாரி வைச்சு இடிச்சு தள்ளினதுங்கிறது போல தெரு ஜனங்கள் எம்மேல கோபமா இருக்கா!"*

*"சரி பண்ணிரலாம். ஆனால் செலவு ஜாஸ்தியாகுமே!"*

*"செலவா...?*

*அவர் பியூனை அழைத்து, "நாலு கம்பம், வயர், எலக்ட்ரீஷியன் எல்லாத்துக்கும் எவ்ளோ ஆகும்ப்பா. ஆயிரம்?"*

*"மேலேயே ஆகும் சார்!"*

*“ஆயிரமா..?“ சங்கரன் மிரண்டார்... “அது கவர்மெண்ட் ரோடு கவர்மெண்ட் போஸ்ட் கம்பம்!“*

*என் வீட்டிற்கு முன்னாடி இருக்குங்கிறதைத் தவிர எனக்கும் அதுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை...“*

*“சம்பந்தம் இல்லேன்னா அப்புறம் எதுக்கு வந்தீங்களாம்?“*

*“எல்லாம் என் நேரம்! வயர், கம்பலெம்மாம் வாரியத்துல இல்லையா?“*

*“இருககு. ஆனால் பணமில்லாமல் எப்படித் தரமுடியும்?“*

*“ஐயா! நான் ஏழைய்யா. இது அந்த முருகனுக்கு அடுக்காது!“*

*“அப்போ அந்த முருகனையே அழைச்சு சரி பண்ணிக்குங்க“ என்று கழுத்தைப் பிடித்து தள்ளாத குறையாய் வெளியேற்றினார்.*

*சங்கரன் நொந்து போனார். ஆயிரம்! எங்கே போவது? சாப்பாட்டுக்கே லாட்டரி! பையனின் படிப்பு! மகள்களின் திருமணம்! வயிற்றைக்கட்டி வாயைக் கட்டிப் பிழைப்பு நடத்தும்போது ஆயிரம்!.*

*அரசாங்கம் கம்பமுமம வயரும் இனாமாய்த் தருகிறது. அதை இவர்கள் விற்றுக் காசாக்கப் பார்க்கிறார்கள். அது நியாயமா என்று கேட்டால் அதை கேட்க நீ யார் என்பார்கள். ஆமாம் – நான் யார்! எல்லாம் அரசாங்கத்துப பணம்!*

*அரசாங்கத்து பணம் என்றார் யார் வேண்டுமானாலுமம எவ்வளவு வேண்டுமானாலும் சுருட்டலாம். கேட்பாரில்லை. அது தப்பில்லை பாவமுமில்லை. அங்கீகரிக்கப்பட்ட நியாயம்!*

*நானும் கூட அரசாங்கச் சம்பளம்தான் வாங்குகிறேன். நம் கோவிலுககுக் கூடத்தான் வருமானம் எக்கச்சக்கமர்ய் வருகிறது! இருந்தும்கூட நானும் ஏழை! என் முருகனும் கூட ஏழை. இருவருமே வறுமையில் வாடுகிறோம்.*

*உண்டியல் பணத்தைக் கேட்டால் ‘அது சாமி சொத்தல்ல, அரசாங்கத்து சொத்து‘ என்றிகார்கள்.*

*அரசாங்கத்துச் சொத்து என்று நினைத்ததும் மூளையில் ஒரு மின்னலடித்தது. அரசாங்கத்துச சொத்து! உடன் கண்கள் விரிந்தன அப்போதே ஒரு தீர்மானத்திற்கு வந்தார்.*

*அன்று இரவு. யாருக்கும் தெரியாமல் சங்கரன் கோவிலை நோக்கி நடந்தார். உண்டியல்! “முருகா! என்னை மன்னிச்சிரு“ என்று சுத்தியலால் பூட்டை லொட்!*

*பணத்தைச் சேகரித்துக கொண்டு சாஷ்டங்கமாய் முருகனின் காலில் விழுந்தார். “உன் கிருபையால் வருகிற இந்தப் பணத்தை உன் சொத்தில்லை என்கிறார்கள்.*

*உன் பணத்தை சுருட்டினால்தானே பாவம்? இதுதான் அரசாங்கத்துப பணமாயிற்றே! அரசாங்கம் என்று வரும்போது தான் யார் வேண்டுமானாலுமம கொள்ளையடிக்கலாமே! அடிக்கிறார்களே! இங்கு நான் திருடவில்லையென்றால் வேறு எவனாவது வேறு வழியில் அடிக்கப் போறான். அதற்கு நானே... மன்னித்துவிடு முருகா!“*

*மனதைத் தேற்றிக் கொண்டு சங்கரன் கிளம்பினார்.*

*மூன்றாம் நாள் அவருடைய வீட்டிலும் முருகன்கோவிலிலும் விளக்குகள் ஜெகஜோதியாய் எரிய ஆரம்பித்திருந்தன.*

## *8. தகுதி*

*அலுவலகம் முழுக்க இரைச்சலாயிருந்தது.*

*டேபிளுக்கு டேபிள் எல்லோருக்கும் கும்பலாய் குழுமிப் பேசிக்கொண்டிருக்க, ரேணுகா மட்டும் ஒரு மூலையில் தனியாய் அமர்ந்திருந்தாள்.*

*அவளுக்குப் பார்வை கிடையாது. பிரில் எழுத்தில் முயற்சியுடன் படித்து ஊனமுற்றோர் கோட்டாவில் வேலைக்குச் சேர்ந்திருந்தாள். டூட்டியில் சேர்ந்து இரண்டு நாட்கள்தானாகிறது.*

*இதுவரை எவரையும் பழக்கப்படுத்திக் கொள்ளவில்லை. எல்லோருடனும் சகஜமாய் பேச வேண்டும என விருப்பம்தான். ஆனால் தயக்கம். அவளுக்கு தாழ்வு மனப்பான்மை! தன்னை அலட்சியபடுததி விடுவார்களோ என்கிற அச்சம், கேலி பண்ணுவார்களோ என்கிற குறுகுறுப்பு.*

*“சேச்சே! ஏன்...? ஏன் கேலிபண்ண வேண்டும்? இன்னும் எத்தனை நாட்களுக்குதான் இப்படி ஒதுங்கியே இருப்பது.. போ! போய்ப் போசு, மனது உசுப்பிற்று.*

*ரேணு எழுந்து தடவித் தடவி அடுத்த ஹாலுகருள் பிவேசித்தாள். அவளது வருகை அங்கே அமைதி கிளப்பிற்று. பேச்சும் சிரிப்பும் திடீரென நின்று. “இப்படி உட்காருங்க“ என்று கீதா என்பவள் நாற்காலியை இழுத்துப போட்டாள்.*

*“தாங்ஸ்!“ என்று அமர்ந்து, “ங்கள்ல்லாம் என்ன டாபிக் பேசிக்கொண்டிருந்தீர்கள் என்று நான் தெரிஞ்சுக்கலாமா...?“*

*“ஓ..யெஸ்! அடுத்த வாரம் நம் கம்பெனியோட சில்வர் ஜுப்ளி ஸெலிப்ரேஷன் வருது. அதுல என்னென்ன ப்ரேகிராம் கொடுக்கலாம் என்பது பற்றின டிஸ்கஷன்!“*

*“சஜஷன் நானும் கொடுக்கலாமா.. தப்பாக எடுத்துக கொள்ள மாட்டீர்களே...?“*

*“நோ... நோ! யு ஆ வெல்கம்!“*

*அவளுக்கு சந்தோஷமாயிருந்தது. பொதுவாகவே அவளுக்கு மியூசிக், டான்ஸ் போன்றவற்றில் விருப்பம் அதிகம். பாழய்ப் போன பார்வையால் அவளால் அவற்றை வெளிப்படுத்த முடியாமல் போயிற்று.*

*படிக்கும் போதும், வீட்டிலிருக்கிற போதும் தனி அறைக்குள் பாடுவாள், ஆடுவாள், ஆனால் மேடையில் பாடத் தயக்கம். ‘போடி குருடி நீ கெட்ட கேட்டிற்குப் பாட்டு ஒண்ணுதான் குறையா? என்று சின்ன வயிதில் அம்மாவே திட்டியிருக்கிறாள்.*

*அந்த வார்த்தைகள் அவளைச் சுடும். குத்தி ரணபடுத்தும். தனிமையில் போய் அழுது தீர்ப்பாள். அப்போதெல்லாம் அவளுக்குத் தன் மேலேயே வெறுப்பு வரும். சபை மேல் கோபம் எழும்.*

*“என்னை ஏன் கண்ணில்லாமல் படைத்தாய்...? நான் என்ன பாவம் செய்தேன்...? மற்றவர்களெல்லாம் ஆடிப்பாடுகிறார்கள். சினிமா பார்க்கிறார்கள். அனுபவக்கிறார்கள்.*

*எனக்கு மட்டும் எனக்கும் மட்டும் ஏன் இந்த நிலமை?“ நினைத்து நினைத்து வெம்புவாள். அந்த வெம்பல் அவளுக்குள் ஒருவிதத் தாழ்வு மனப்பான்மையை ஏற்படுத்தியிருந்தது.*

*மேடை ஏறினால் மற்றவர்கள் கேலி பேசுவார்களோ, இளப்பமாய்ச் சிரிப்பார்களோ என்று ஒதுங்கிக் கொண்டேயிருந்தாள்.*

*கண் குருடு என்றால் என்ன? எனக்கும் வாயிருக்கிறது. பேச முடிகிறது. மனசிருக்கிறது. கற்பனையில் மிதக்க முடிகிறது. அப்புறம் நான் மட்டும் எந்த விதத்தில் குறைவு என்கிற வீம்பு அவ்வப்போது எழும்.*

*குருடு என்பதற்காக பிறத்தியார் அனுதாபம் தெரிவிப்பதோ, சலுகை தர முன்வருவதோ அவள் விரும்புவதில்லை.*

*காம்படிஷன்களுக்கு ஒவ்வொருவரும் போட்டி போட்டுக் கொண்டு வயர் கொடுக்க, ரேணு, “நானும் பாடலாமா...?“ என்றாள்.*

*“ஓய் நாட்!“*

*அவளுடைய பெயரும லிஸ்டில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.*

*கணபதி என்கிற ஊழியன் “என் பெயரை விட்டுட்டீங்களே... !“ என்று குறுக்கே தலையை நீட்டினான்.*

*“உங்கள் பெயர் தான் ஃபர்ஸ்ட்!“*

*ஃபர்ஸட் ப்ரைஸூம் எனக்குதான்!“ என்று சிரித்தான் அவன். அவன் இயல்பிலேயே தற்பெருமைக்காரன். வேண்டாததிற்கெல்லாம் தம்பட்டம் அடித்துக கொள்வான். நான்.. நான் என் எல்லாவற்றிலும மூக்கை நீட்டுவான்.*

*மறுவாரம்.*

*விழா பொன்மாலைப் பொழுதில் கலகலப்பாய் ஆரும்பித்திருந்தது. சம்பிரதாயப் பேச்சுக்களுக்குப் பிறகு நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாய் தொடர்ந்தன.*

*முதலில் ஃபான்ஸி டிரஸ்! ஊழியர்களின் குழந்தைகள் தத்துபபித்தென்று வேஷம் போட்டுக கொண்டுவந்து தத்தி தத்தி நடந்தன. டயலாக் மறந்து விழித்தன. கூட்டத்தினரின் சிரிப்புக்குப் பயந்து அழுதன. அடுத்து மிமிக்ஸ்! காலம் காலமாய் ஆல் இந்திய ரேடியோவையும் டி.வியையும், ரயில்வே ஸ்டேஷன், ஏரோபிளேனையும் இமிடேன் செய்யும் சம்பாஷனைகள்! வடை.பாபி...காபி! சாயே ச்சாயே! அரசியல் வாதிகளின் குரல்களின் கிண்டல்கள்! எம்.ஜி.ஆர், சிவாஜி! ரஜினி - கமல்!*

*பாட்டுப போட்டி அறிவிக்கப்பட்டபின் கரகோஷம் ஹால் கூரையைப் பிளந்தது. முதல் பெயரே கணபதி.*

*அவன், “ஹாய்!“ என்று டி சர்ட்டுடன் மேடையில் தோன்றி கையாட்டினான். பெண்களின் பக்கம் பிரத்யோக... ஹாய்!*

*“நான் நன்றாகப் பாடுவேன். என் பாட்டை நீங்கள் கேட்டேயாக வேண்டும். ஏன்னா ப்ரைஸ் வாங்கப் போகிற பாட்டாயிற்றே!“ என்று காலரை தூக்கி விட்டுக் கொண்டான்.*

*“அறுக்காம பாடித் தொலை!“*

*“என் பாட்டில் அவ்ளோ ஆர்வமா.. நன்றி. உங்களின் பொறுமையை நான் சோதிக்க விரும்பவில்லை!“ என்று கனைத்துக கொண்டு, ‘பூந்தளிர் பூந்தளிர்‘ என்று ஆரம்பிக்கக் கூட்டம் கைதட்ட ஆரம்பித்தது. அவனுக்கு மகிழ்சி புடிபடவில்லை.*

*அவன் பாடி முடித்து இருக்கைக்கு போகிறவரை ஓதே அட்டகாசம் தான். அவனுக்கு இனம்புரியத சந்தோணம். பெருமிதம். ஆனால் அந்தப் பெருமிதம் பாடலில் இல்லை. அது ரொம்ப சுமார் ரகம்.*

*அவனுக்குப் பிறகு கிளாசிக் சாங்க். அதற்கு வேறு மாதிரி கைதட்டு! அடுதது வாதாபி கணபதே! பிறகு ஹிந்தி, மலையாளம், ஆங்கிலம் எனத் தேனிசை மழை!.*

*அவர்கள் பாடப் பாட ரேணுவிற்குக் காய்ச்சல் காண்கிற மாதிரி இருந்தது. எப்போது தன் பெயரை அழைப்பார்களோ என்கிற பயம். வழக்கமான தயக்கம். நம்மால் பாட முடியுமா.. இவர்களோடு ஒப்பிடுகையில் நம் குரல் எம்மாத்திரம்! அவளுக்கு, ஏன் பெயர் கொடுத்தோம் என்றாயிற்று.*

*பேசாமல் பின் வாங்கிவிடுவோமா என்று நினைத்த போது அவளது பெயரை அழைத்தார்கள். ரேணு பிரமையுடன் எழுந்தாள். செலுத்தப்பட்டது போல நடந்தாள்.*

*தோழிகள் இருவர் அவளை மேடைக்கு நடத்திச் சென்றனர். மைக்கை அட்ஜஸ்ட் செய்து கையில் தர, அவளுக்கு வியர்த்தது. துடைத்துக கொண்டு “பார்த்த ஞாபகம் இல்லையோ..“ என்று ஆரம்பித்தாள். குரல் சரி பண்ணிற்று. அது கீச் கீச்சென்று வெளிப்பட, கூட்டத்தில் அமைதி. எந்தவிதச் சலசலப்பும் இல்லை.*

*எப்போட முடிப்போம் என்றிருந்தது ரேணுவிற்கு.*

*சீட்டுககுத் திரும்பினதும் தன் மேல் அவளுக்கே வெறுப்பாய் வந்தது. “சே! நான் பெயரே கொடுத்திருக்கக் கூடாது! பெயர் சுசீலா என்று நினைப்பு!“*

*அவளுக்குப் பிறகு இன்னும் நான்கைந்து பேர் பாடினர்.*

*முடிவில் பிரைஸ் அனவுன்ஸ்மென்ட்! கணபதி பெருமிதத்துடன் எழுந்து நின்றான்.*

*முதல் பரிசு கிளாசிக் பாடின பெண்ணிற்கு. அடுத்த பரிசு வாதாபிகணபதே! மூன்றாம் பரிசு ரேகாவிற்கு. அவளுக்கு அதை நம்பவே முடியவில்லை. ‘எனக்கு போய் பரிசா..? அத்தனை நன்றாகவா நான் பாடினேன்..?‘*

*அதே சமயம் கணபதி கடும கோபத்திலிருந்தான். தனக்குப் பரிசில்லை என்றறறிந்ததும் அவனது முகம் வெளிறிற்று. ஆவேசமாய் மேடைக்குப் போய் “இதை நான் ஏற்கமாட்டேன்! நடுவர்கள் முறை தவறிவிட்டார்கள்“ என்று கத்தினான்.*

*கூட்டம் “டவுன் டவுன்!“ என்று அவனை பார்த்துக கத்திற்று. அது அவனது ஆவேசத்தை அதிகப்படுத்தவே செய்தது.*

*“முடியாது! என்னங்கடா இது அநியாயம்! நல்லா பாடினவனுக்கு பரிசில்லை! எந்த ஊர் நியாயம் இது..? பரிசு வாங்கணும்னா குருடாவோ செவிடாவோ பிறந்திருக்கணும் போலிருக்கு!“*

*ரேணுகாவிற்கு சுருக்கென்றிருந்தது.*

*ராத்திரி ஹாஸ்டலுக்கு வந்ததும் ரேணு படுக்கையில் விழுந்து விம்ம ஆரம்பித்தாள். கீதா அவள்முகத்தை நிமிர்த்தி, "ஏன் அழுகிறாய்.. அந்தக் கணபத் அப்ப பேசினான் என்றா..?"*

*"இல்லை"*

*"அப்புறம்..?"*

*"இந்தப் பரிசு எனக்கு கொடுத்திருக்கக்கூடாது. நான் நன்றாகப் பாடவில்லை!"*

*"சீச்சீ. அப்படின்னு யார் சொன்னது. நீ நன்றாகெத்தான் பாடினாய்!"*

*"இல்லை. எனக்கு தெரியும். நான் பாடவில்லை. கழுதை மாதிரி கத்தினேன். இந்தக் பரிசு என் பாட்டிற்காகத் தரப்படவில்லை. என் குருடிற்காக அந்த அனுதாபத்தாலதான் எனக்குப் பிரைஸ் கொடுத்தாங்க. யாருககோ கிடைக்க வேண்டிய பரிசு, தகுதியே இல்லாத எனக்குத் தரப்பட்டிருக்கிறது என்னால் இதை ஏற்க முடியாது!"*

*ரேணு தழுதழுக்க ---*

*கீதா பிரமை பிடித்து நின்றாள். நல்ல நிலையில் இருப்பவர்கள் கூடச் கொஞ்சங்கூடத் தகுதியேயில்லாமல் பட்டத்திற்கும் பதவிக்கும் நாய் மாதிரி அடித்துக கொள்ளும் இந்தக் காலத்தில் இப்படியும் ஒருத்தியா..?*

*அவளை எப்படித் தேற்றுவது எனத் தெரியாமல் கீதா தவிப்புடன் நின்றிருந்தாள்.*

## *9. இங்கே பொய்கள் இலவசம்*

*"இந்த நிலமையில் நீ போய்த்தான் ஆகணுமாய்யா..?"*

*பார்வதி பரிவுடன் சந்திரனிடம் கேட்டாள். அவன் உடல் தளர்ந்து போய் கட்டிலில் படுத்திருந்தான். அவனுடைய கண்களெல்லாம் ஆழததில் இருந்தன. உடல் அனலாய்க் கொதித்தது. நெற்றியில் அமிர்தாஞ்சன் மணத்தது.*

*அவன் தட்டுத தடுமாரி எழு, பிடித்து அமர வைத்தாள். அவிழ்ந்த முடியை உதறிக் கொண்டை போட்டுக கொண்டு, "இந்தா மாத்திரை!" என்று நீட்டினாள்.*

*அவன் விழுங்கினதும், "பேசாம படுத்து ரெஸ்ட் எடுய்யா!"*

*"வாணாண்டி, நான் எப்படியாவது போயேயாக வேண்டும். இண்ணைக்கு பார்வையிட மந்திரி வரார். அவர் வர்றதுக்கு முன்னாடி பில்டிங்குல்ல பெயிண்டிங்கும் வரவேற்பு வாசகங்களும் எழுதி முடிச்சாகணும். என் சட்டையை எடு!"*

*"உடம்புல இத்தனை அவஸ்தையை வச்சுகிட்டு நீ எப்படிய்யா..?"*

*"படுத்துக் கிடந்தாதான் அவஸ்தை. வெளியே காத்தாட கிளம்பினா எல்லாம் சரியாப் போகும்" என்று அவள் நீட்டின சட்டையை மாட்டிக் கொண்டான். தலை சீவின போது கண்களில் சிவப்பு தெரிந்தது, எரிந்தது, அப்படியே மல்லாக்க விழுந்து கிடந்தால் தேவலாம் போலிருந்தது.*

*என்ன செய்ய முடியும்..? வேறு வழியே இல்லை. போய்த்தான் தீர வேண்டும். அவன் ஒரு பெயிண்டர்,. கட்டிடங்களுக்கு பெயிண்டர் கூட ஆட்களை வைத்து அடித்துக் கொள்ளலாம். ஆனால் வரவேற்பு வாசாகங்களுக்கு இவன் தான் வேண்டும.*

*கலை நயத்துடனும், கவர்ச்சியுடனும் எழுத வேறு நபர் இல்லை, இண்ணைக்கு மதியத்துக்குள்ளே முடித்து கொடுத்திடணும் என்று மேஸ்திரிகறாராய்ச் சொல்லியிருந்தார்.*

*"நான் வேணுமானா போய் உடம்புக்கு முடியலேன்னு சொல்லிரட்டா...?*

*"வேண்டாம். தப்பா நினைப்பாங்க. அது சரியில்லை. அதை முடிச்சுக்க கொடுக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் எனக்கிருக்கு."*

*"பொறுப்பையும் கடமையையும் பார்த்தா முடியுமா... சுவரை வச்சுதான் சித்திரம்...?"*

*"பரவாயில்லை. இண்ணைக்கு மட்டும்தானே... அதையும் கூட நாலு மணி நேரத்துலு முடடிச்சுரலாம்!"*

*சந்திரன் பெயருக்கு இரண்டு இட்லி சாப்பிட்டு கிளம்பினான். "என்னய்யா இது வாங்கிட்டு வந்த இட்லி அப்படியே இருககு – ரெண்டு சாப்பிட்டு எப்படிய்யா வேலை செய்வே..? !அவன் டிபன் பாக்ஸை எடுத்து. "இரு பார்சல் பண்ணித்தரேன்" என்றாள்.*

*''வேணாண்டி. வாயெல்ல்ம் ஓரே கசப்பாயிருக்கு. சாப்பிடப் பிடிக்கலை'' என்று செருப்பு மாட்டினான். சைக்கிளைத் தூக்கி வெளியே நிறுத்தினான்.*

*''மேஸ்திரி திட்டுவார்ன்னு பார்க்காம லீவ் கேட்டுப்பார்ய்யா...''*

*''சரி''*

*''லீவ் தரலேன்னாலும், முடியலேன்னா வந்திருய்யா..''*

*அவன் பதில் சொல்லாமல் சைக்கிளில் ஏறி மிதிக்க ஆரம்பித்தான். நான்கு மதியிலேயே மூச்சு வாங்கிற்று. கால்கள் குடைந்தன. உடல் அசந்து கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்தது.*

*மந்திரிக்கு வேண்டி ரோடு போட்டுக கொண்டிருந்தார்கள். மந்திரி வருவதற்க ஐந்து நிமிடம் வரை ரோடு தீவிரமாய் போடப்படும். அவர் வந்து போய்விட்டால் எல்லமே கிடப்பில்.*

*அலங்காரங்கள் கலர் கலராய் வரவேற்றன. கொடிகளும், ஜிகினி பேப்பர்களும் காற்றில் ஆடினதைப் பார்ப்பதற்கு அவனுக்கு பிரமிப்பாயிருந்தது. எத்தனை சித்து வேலைகள்!*

*மேஸ்திரி அவனைக் கேட்டிலேயே மறித்து, ''ஏம்ப்பா இத்தனை லேட்டு..?'' என்று விரட்டினார். அந்த காலையிலேயே அவருடைய சட்டையும் வியர்த்திருந்தது.*

*''ஐயா.. உடம்பு சரியில்லை'' என்று சைக்கிளை விட்டு இறங்கினான்.*

*''உடம்புக்கு என்ன... (கேடு)?''*

*''ஜுரம்''*

*''சரி .. சரி, வளர்த்தாம சைக்கிளை நிறுத்திட்டு வா. அங்கே பெயிண்டிங்கெல்லாம் ஆசசு. உன் வேலை தான் பாக்கி!''*

*''ஐயா! எனக்கு உடம்பு முடியலேய்யா. மேலே ஏறி எழுத முடியும்னு தோணலோ!''*

*''என்னப்பா காலை வாரரே..? முடியாதுன்னு கடைசி நேரத்துல சொன்னா எப்படி. இனிமே போய் யாரைக் கொண்டு வரமுடியும்..? உனக்கு ஜுரம் வரதுக்கு நல்ல நேரம் பார்த்தது பார்! எல்லாம் என் தலையெழுத்து! மசமசன்னு நிக்காம போய் ஆக வேண்டியதைப் பாரு!''*

*''ஐயா! இப்போ என்னால முடியும்னு தோணலே. தலையைச் சுத்துது. நாளைக்கு எழுதறேனே!''*

*''நாளைக்கா..? நாளைக்கு எதுக்கு? மந்திரி போன பிறப்பாடு எதுக்கு மயிரு.'' என்று அவர் தான் கற்ற கெட்ட வார்த்தைகளை எடுத்து விட்டார். ''போ போய் வேலையை முடி!'' சொல்லிவிட்டு மேஸ்திரி காணாமல் போனார்.*

*சந்திரன் பில்டிங்கிடம் போனான். அங்கே சாரம் கட்டியிருந்தார்கள். பெயிண்டிங் வேலையெல்லாம் அநேகமாய் முடீந்திருந்தது. இவன் மந்திரிக்கு வாழ்த்துய்யா எழுத வேண்டியதுதான் பாக்கி!.*

*பெயிண்ட், ஸ்கேல், பென்சில், பிரஷுடன் சாரத்தின் மேல் ஏறினான். அவனுக்கு களைப்பாயிருந்தது. வெயில் கண்களைக் கூசியது. சட்டைப் பையிலிருந்து வாழ்த்துப்பாவை எடுத்துப் படித்துப் பார்த்தான்.*

*சாரத்தில் நிற்கவே சிரமப்பட்டான். கால்கள் பலமிழந்து நடுங்கின ஸ்கேல் வைத்துக் கோடு போடு எழுத ஆரம்பித்தான்.*

*"ஆச்சா" என்று மேஸ்திரி அரைமணி நேரத்திலேயே ஓடிவந்தார்.*

*"இன்னும் இல்லைங்க"*

*"எவ்ளோ நேரம் பிடிக்கும்..?*

*"ஒருமணி நேரம்..."*

*"என் பிராணனை வாங்க்ம சீக்கிரம் முடிப்பா. பாஸ் பார்வையிடறதுக்கு வரப்போறார். எல்லாம் என் தலையெழுத்து, கஸ்மாலங்கள்!"*

*மேஸ்திரி அவன் பேரில் ரொம்பவும் சலித்துக கொண்டு வேறு இடத்திற்கு ஓடினார். சந்திரன் தம்கட்டிக் கொண்டு எழுத ஆரம்பித்தான். அவனுக்குக் கண்கள் சோர்ந்து போய் வந்தன.*

*ஒரு வழியாய்ச் சமாளித்துக கொண்டு எழுதி முடிந்த போது இரண்டு கார்கள் சர்சர்ரென வந்து நின்றன.*

*ஒரு காரிலிருந்து பாஸ் இறங்கி அங்கிருந்தே பில்டிங்கின் வியூவைப் பார்வையிட்டார். அதிகாரிகளை அழைத்து என்னவோ சொல்லிவிட்டு, அந்த பில்டிங்கை நோக்கி வந்தார்.*

*மேஸ்திரி ஓடிவந்து, "ஏய் சந்திரா.. முடீச்சுட்டாயா... ! சீக்கிரம் இறங்கு! சாரத்தை அவிழ்த்து மாற்றணும்!".*

*அவன் அவசரமாய் பெயிண்ட்டை எடுத்துக் கொண்டு இறங்க முயல, பலகீனத்தில் ஒரு நொடி கால் தவறிவிட, பெயிண்ட் டப்பா ஆடிக்கொண்டு கீழே கவிழ்ந்தது."*

*அந்த நேரம் பார்த்து எம்.டி அங்கே வர, பெயிண்ட் அவரது சட்டையில் ஊற்றி... "வாட்டீஸ் திஸ்?" என்று கத்தினார். அவருடைய கோபம் மூக்கைத் தொட்டது.*

*"கன்ட்ரி புரூட்ஸ்! இடியட்ஸ்!" என்று அவர் தன் செகரட்டரியைத் திட்டி விட்டுச் சட்டென காருக்குள் நுழைந்து புழுதி கிளம்பினார்.*

*செகரட்டரி மேஸ்திரியிடம் "என்னய்யா இது...? இது தான் பெயிண்ட் அடிக்கிற லட்சணமா..?"*

*அவர் கையை பிசைய, "அவனை அழைச்சுகிட்டு ரூமுக்கு வா!"*

*செகரட்டரி போனதும் மேஸ்திரி ஆவேசத்துடன் சந்திரனின் பக்கம் திரும்பினார். அவன் தட்டுததடுமாறி இறங்கி வர, பளாரென அறைந்தார்.*

*அவனுக்குக் கன்னம் கடுகடுத்தது. செவிகள் குப்பென அடைத்துக் கொண்டன. சந்திரன் அப்படியே செயலிழந்து நின்றான்.*

*“ஏய் எருமை மாடு! உனக்கென்ன கண்ணா அவிஞ்சு போச்சு..? பார்த்து இறங்கறதுக்கு என்ன கேடு..?“*

*அவன் “ஐயா..“ என்க, “மூச்... ! ரூமுக்கு வா, உன்னை பேசிக்கிறேன்!“*

*அறைக்குள் முதலாளி இன்னமும் கோபத்திலிருந்தார்.*

*அவருடைய சட்டை மாறியிருந்தது. கோட் போட்டுக கொண்டு கௌரவத்துடன் அமர்ந்திருந்தார்.*

*அவர்கள் உள்ளே நுழைந்ததுமே.. “ஏன்ய்ய.. உனக்கெல்லாம் பொறுப்பு இருக்கா.. மதியம் மந்திரி வந்தாக் கூட இப்படிதான் அவர் மேல பெயிண்டை ஊத்துவாயா...?“*

*சந்திரன் வாயைத் திறக்க, அவனைத் தடுத்து, “சொல்லுய்யா? என் மேல பெயிண்டை ஊத்தற அளவுக்கு நான் இங்கே யாருக்கு என்ன கெடுதல் பண்ணினேன். டெல்மி!“*

*“ஐயா! என்னை மன்னிச்சிருங்கய்யா, நான் வேணுமின்னே பண்ணலை!“*

*“அப்புறம்...?*

*“எனக்கு உடம்பு சரியில்லைய்யா..“*

*“உடம்பு சரியில்லென்னா என்னத்துக்கு வேலைக்கு வரே.. பேசாம வீட்டிலேயே முடக்கிக்க வேண்டியது தானே!“ செகரட்டரி முந்திக் கொண்டு பதிலளித்தான்.*

*“நான் அப்பவே சொன்னேன் சார்! வேணாம். வேறு ஆள் பார்த்துகிறேன். நீ போய் ரெஸ்ட் எடுன்னு சொன்னால் கேட்டால்தானே..? பிடிவாதமா மேலே ஏறிப் போனான்.“*

*மேஸ்திரி கூசாமல் பொய் சொன்னார். சொல்லிட்டு சந்திரனைப் பார்க்க திராணியில்லாமல் தலையைத் திருப்பிக் கொண்டார்.*

*“இந்த மாதிரி பொறுப்பில்லாத பசங்களை வெச்சுகிட்டு என்ன பண்றது. பேசாம சீட்டுக் கிழிசசு அனுப்பிடு!“ முதலாளி சும்மா இருக்க, செகரட்டரியே கட்டளையிட்டான்.*

*சந்திரனுக்குச் சம்மட்டியால் அடித்தது போலிருந்தது. “பொறுப்பையும் கடமையையும் பார்த்தா முடியுமா.. சுவரை வச்சுதானே சித்திரம்...?“ காலையில் பெண்டாட்டி சொன்னது ஞாபகத்திற்கு வர. பதில் பேசாமல் வெளியேறினான்.*

*வெளியே கட்டிடத்தில் அவன் சற்றுமுன் எழுதின, “ஏழையின் பங்காளனே, உழைப்பாளியின் உறுதுணையே வருக!“ என்று வாசகங்கள் அவனைப் பார்த்து சிரித்தன.*

## *10. பரவசம்*

*என்னதான் கார் பங்களா என வசதியிருந்தாலும பெரிய படிப்பு இருந்தாலும் விமானத்தில் பயணிக்காத வரை ஏர்போர்ட் என்பது பிரமாண்டமான மிரட்டும் வஸ்துதான்!*

*சென்னை பன்னாட்டு விமான தள வாசலில் கசகசப்பு! யாரையோ வரவேற்க, தொண்டர்-குண்டர் படைகள்! வெளிநாட்டு வேலை விடுப்பில் வரும் நபர்களை எதிர்பார்பபுடன் வரவேற்க நின்றிருந்தவர்களில் தர்ஷணாவும் அடக்கம்.*

*அவளுக்கு அங்கே எல்லாமே விநோதமாய்த் தெரிந்தது. இத்னியூண்டாகத் தெரியும் விமானத்தில் எப்படி இத்தனை பேர் பயணிக்க முடிகிறது?*

*வெளியே கார்களின் அணிவகுப்பு ஹாரன்! போட்டார்கள்! டிராலி உரசல்! பயணிகளை 'சுனாமி'க் கொண்டு போகும் போட்டியில் டாக்ஸிகள்! கண்ணாடிக் கதவைத் திறக்கும்போது கசிந்துவரும் அறிவிப்புக்கள் வியர்ப்வு!*

*தர்ஷணாவுக்கு இவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து கண்கள் பூத்துக் கொண்டிருந்தன. மகேஷ் அவளுக்கு நிச்சயிக்கப் பட்ட வரன்.*

*அவர் இப்போ எப்படியிருப்பார்? தாடி வச்சிருப்பாரா? சென்ற வருடம் பெண் பார்க்க வந்த போது திருடா – திருடி என லேசாய்ப் பார்த்துக் கொண்டது இன்னமும நெஞ்சில் இருக்கிறது. அப்புறம் குவைத்திலிருந்து போன் எவ்வளவோ பேசியாயிற்று. ஆனாலும் கூடசலிக்கவில்லை. இன்னும்.... இன்னும் கொஞ்சம் என்கிற ஏக்கம். செல்போன் வாங்கி அனுப்பி. "இது எப்பவும் உன் கைல இருக்கணும். ராத்திரி – பகல்-பத்ரூம்-காலேஜ்ன்னு கண்ட கண்ட நேரத்துல கூப்பிடுவேன். கூப்பிட்டான்.*

*அவளுக்கு சுகமாயிருந்தது. கல்யாண தேதி குறித்த பின்பு மகா அவஸ்தை. தூக்கமுமசாப்பாடு கசந்தது. முகத்தில் பருக்கள் கொப்பளித்தன. எதிலும நாட்டமில்லை. அணுக்கள் சிறை! தனிமையில் கனவுதான் உணவு.*

*விமானங்கள், காதைப் பதம் பார்த்து ஜிவ்வென ஏறின. இறங்கின அருகில் பெற்றோர் இருநதாலும் கூட வேண்டா வெறுப்பைக் காட்டுவதுபோல வாட்ச்சைப் பார்த்தாள்.*

*எங்கே என்னவன்! மன்னவன்! அப்பா பொறுமையிழந்து கொஞ்சம் தள்ளி நின்றிருந்த இளைஞனை பிடித்து "வேணு தம்பி! மாப்பிள்ளை வர்றது ஏர் இந்தியான்னுதானே சொன்னாய்? வந்துருச்சு போலிருக்கே. அறிவிப்பு காட்டுது!" என்று அவசரப்பட்டார்.*

*"இல்லை சார். அது சிங்கப்பூர்! கவைத் விமானம். அரை மணி நேரம் லேட்டாம்! விசாரிச்சுட்டேன்!"*

*"பாவிங்க. இங்கே உட்கார நாற்காலி தாராளமாப் போடக்கூடாது?"*

*"நிக்க கஷ்டமாயிருந்தா – எல்லோரும் கார்ல போய் உட்காருங்க சார்! மகேஷ் வந்ததும் நான் அழைசசுட்டு வர்றேன்!"*

“பரவாயில்லை இவ்ளோ நேரம் நின்னாச்சு. குடிக்க கொஞ்சம் தண்ணி கிடைகுமா?“

வேணு ஓடிப்போய் தண்ணீருடன் சமுசா, கட்லெட், கூல்டிரிங்க்ஸ் எல்லாம் கொண்டுவந்து நீட்டினான். தர்ஷணா உனக்கு ஐஸ்க்ரீம் வேணுமா?

“எதுக்குப்பா உனக்கு சிரமம்?“ என்று வாங்கிக் கொண்டார்கள்.

“சிரமமா எனக்கா?“ என்று சிரித்தான்.

“உங்களைச் சரிய கவனிக்கலேன்னா அப்புறம் மகேஷ் அந்நியனாகி என்னைக் கொன்னு போட்டிருவான்.“

அப்பாவுக்கு அவன் பேரில் பரிவும் பாசமும தோன்றிற்று நண்பன் என்றால் இப்படித்தானிருக்கணும். மாப்பிள்ளைக்குச் சரியானவன் வாய்த்திருக்கிறான்.

தர்ஷணாவின் மனது அவனுக்கு நன்றி சொல்லிற்று. இவன் மட்டும நிர்ப்பந்திக்கவில்லையென்றால், நான் இங்கே வந்திருக்க முடியுமா? நிச்சயித்தப் வெண், வெளியே வரக்கூடாது, ஊர் தப்பாய் பேசும்‘ என்று பெற்றோர் மறுக்க இவன் விடவில்லை.

வாஸ்தவத்தில் பெற்றோர் கூட ஏர்போர்ட்டுக்கு வருவதாயில்லை வேணுதான் போன் பண்ணி “நீங்க அவசியம் வரணும்“ என்றான்.

“கல்யாணத்துக்கு முந்தி நாங்க வந்தா நல்லாருக்குமா?“

“அட என்ன இது கேள்வி? மகேஷ் வீட்டுலு அவனோட அக்கா வந்தா தான் உண்டு அம்மாவுக்கு உடம்பு முடியலே. அப்பா இல்லை. நீங்க வந்தா உறவு பலப்படும். ஏன் இப்படி வித்தியாசமாய் யோசிக்கீறிங்க? அவர் உங்களோட மாப்பிள்ளை அவனுக்கு நீங்க மாமனார் மட்டுமில்லை அப்பா ஸ்தானமும் தான். ஏர் போர்ட்லருந்து மாப்பிள்ளை அவங்க ஊருக்குப் போவாரா. இல்லை எங்க வீட்டுக்கு? போற வழிதானே உங்க வீட்டுல ஒரு வாய் காபி சாப்பிட்டு அப்புறம் அவங்க ஊருக்குப் போறோம் நீங்க உங்க கார்ல வந்துடுங்க. எல்லோருக்கும் பத்துமா?“

“பத்தலேன்னா நான் டாக்ஸி எடுத்துக்கறேன்“ என்று அவர்களை வரவழைத்தற்காக தர்ஷணாவிற்கும் அவன் பேரில் கரிசனம் மனதுக்குள் ஆசையிருந்தாலும் நானாக ஏர்போர்ட் வரேன் என்று கேட்க முடியுமா? பெண்ணாயிற்றே! எல்லாவற்றையும் அடக்கி அடக்கி ஆளணும்.“

“சீக்கிரம் வாடா மாப்பிள்ளே.“

“தர்ஷணா உனக்காக ஏசி வாங்கி வரேன். டி.வி.டி தாலி, நகைகள், டிரஸ்கள்ன்னு அடுக்கினாயே எனக்கு அதெல்லாம் வேணாம். நீ மட்டும் போதும சீக்கிரம் வா.“

வேணு காண்டீன் பக்கமிருந்து “வண்டி வந்திருச்சு லேண்டாயிருச்சு“ என்று கூவிக்கொண்டு ஓடிவந்தான். எல்லோரும் உஷாரானார்கள். தளர்வு நீங்கினார்கள் சுறுசுறுப்பு. வழிமேல் விரி தர்ஷாவுணாக்குக் கிளர்ச்சியாயிற்று. மறுபடியும் கசகசப்பு, வெயில் அப்போது மட்டும் உறைக்கவில்லை. எங்கே அவன்? தலையைச் சரி பண்ணிக்கொண்டாள்.

*வண்டி தள்ளிக்கொண்ட கண்களால் தேடிக்கொண்டு வெளியே அதோ மகேஷ்.*

*'மகேஷ் 'கமான் கமான்' என்று அவளுக்குக் கத்த வேண்டும் போலிருந்தது.*

*மகேஷ் தர்ஷணாவைப் பார்த்துப் புன்னகைக்க உடன் பதிலிட்டாள். அவனும் அதை வாங்கி நெஞ்சில் செருகிக் கொண்டான்.*

*அவள் மேல் கவர்ச்சி! உந்துதல்! அந்தப் பொழுதின் சுகத்திற்காகவும் பரவசத்திற்காகவும் அவளது மனது மீண்டும் வேணுவிற்கு நன்றி சொல்லிற்று.*

*வேணு ஓடிப்போய் மகேஷிற்கு கை கொடுத்து லக்கேஜ் டிராலியை வாங்கிக் கொண்டான்.*

*''மாப்பிள்ளை பயணமெல்லாம் சுகமா?''*

*''ஓ'' என்று தர்ஷணாவுக்கு பதிலளித்தான். அம்புவிட்டான்.*

*மன்மத அம்பு. அவள் சிலிர்த்தாள்.*

*''விமானம் லேட் போல'' ஏதாவது போசணும் என்று பேசினார்.*

*''ஆமாம் இது சகஜம்'' என்று அவளை சைடில் வெட்டினான்.*

*''பேசிட்டிருங்க. நான் போய் வண்டி எடுததுவரேன்'' என்று வேணு ஓடி வண்டிணயைக் கொண்டு வந்து லக்கேஜை ஏற்றினான்.*

*''வேணு தம்பி நீங்களும் எங்க வ்ண்டியிலயே வரலாமே''*

*''வேணாம் சார். நீங்க ஃப்ரீயா உட்கார்ந்து வாங்க கல்யாண நேரம் மாப்பிள்ளைகிட்டே நிறையப் பேச வேண்டியிருக்கும். லக்கேஜ் கூட யாராவது வணுமில்லே.''*

*எல்லா சந்தர்ப்பத்திலும் மகேஷின் அருகில் தான் இருக்கும்படி வேணு செயல்படுவதில் தர்ஷணாவுக்கு மகிழ்ச்சியாயிற்று. கதகதப்புடன் வண்டி கிளம்பிற்று தர்ஷணா – மகேஷ் இருவருக்குள்ளும் பரவசம்.*

*பயண அலுப்பு இருந்தாலும தூக்கம் கண்களை துளைத்தாலும் கூட பின்சீட்டில் இருந்த தர்ஷணா மகேஷிற்குத் தெம்பு தந்தாள். அவளது மலர்ந்த முகம்! மல்லிகை வாசகம்! கிளுகிளுப்பு! கண்ணாடி வழி அவளை சைட்! என்னவள்.*

*''அப்புறம் ஏன் அலைச்சல்? இருந்தாலும் இந்த் திருடடு சைட்டில் உள்ள சுகமே தனி.''*

*மாப்பிள்ளை எவ்ளோ நாள் லீவு? என்று ஆரம்பித்து கல்யாண மண்டபம் பத்திரிகை ஏற்பாடுகள் பற்றி அப்பா விளக்கினார். ''எங்க தரப்புல எல்லோருக்கும் அழைப்பு கொடுத்துட்டோம் மாப்பிள்ளை இனி உங்க நண்பர்கள்தான் பாக்கி. ஆங்! நண்பர்கள்ன்னதும் தான் ஞாபகம் வருது இந்த வேணு எங்களுக்கு ரொம்ப ஒத்தாசையாயிருந்தார்.''*

*''எந்த வேணும்?'' என்று ஒப்புக்குக் கேட்டு தர்ஷணாவைத் தரிசித்தான்.*

*''அதான் உங்க நண்பர் அவர் இல்லேன்னா ஏர்போர்ட்ல வெறுத்துப் போயிருக்கும். என்னென்வோ வாங்கிக் கொடுத்து நல்லா பார்த்துககிட்டார். இபோ கூடப்பாருங்க... என்ன ஒரு பொறுப்பு, தன்னந்தனியாவே லக்கேஜை ஏத்திக்கிட்டு பின்னாடி வரார்.*

*வீடு வந்திருந்தது. தர்ஷணாவைத் தின்றுகொண்டே மகேஷ் இறங்கினான். தர்ஷணா! மாப்பிள்ளே நீங்க எல்லோரும் உள்ளே போய் முகம் கழுவிட்டு டிபன் பண்ணுங்க. நான் லக்கேஜை இறக்கிட்டு வர்றேன். அவர்களை அனுப்பிவிட்டு அப்பா லக்கேஜ் வரும் வண்டிக்காக வாசலில் காத்திருந்தார். அது வரவில்லை வராது. எப்படி வரும?*

*ஜகஜ்ஜால கில்லாடியான வேணு இவர்களின் திருமணம் குடுமப விசேஷம் அறிந்து திட்டம் போட்டு நண்பனாக நுழைந்து தர்ஷணாவின் வீட்டிலும் அவளும் ஏர்போர்ட்டுக்கு வந்தால்தான் மகேஷின் கவனம் திரும்பும், மயங்கும் என்று வரவழைத்து நாடகமாடி லக்கேஜை தன் கஸ்டடியில் ஏற்றி அழகாய் ஏமாற்றி காணாமல்போன அந்த நண்பன் என்ன மடையனா திருமபி வர?*

## *11. அன்பிருந்தால்*

*வீட்டிற்குள் நுழையும் போதே கல்பனா உர்ரென்றிருந்தாள். என் பேகை வாங்கிக் கொள்ளவில்லை. மல்லிகைப்பூ இருக்கிறதா, ஸ்வீட் இருக்கிறதா என்று பார்க்கவில்லை.*

*சட்டையை பாதி கழட்டினதுமே பிடுங்கிக் கொண்டு போய் ஹாங்கரில் மாட்டவில்லை. முகம் கழுவி வந்ததும் டவல் எடுதது நீட்டவில்லை. பேனை போட்டுக கொண்டு அமர்ந்ததும் கண் முன் காபி மணக்கவில்லை.*

*இந்த வரவேற்பெல்லாம் கல்யாணமான மூன்றாம் மாதமே ஓடிப்போயிற்று. அலுவலகத்திலிருந்து வரும் கணவனை உபசரிக்க வேண்டாம் – முகத்தில் அட்லீஸ்ட் புன்னகையாவது காட்டக் கூடாதா...?*

*மாட்டாள். அத்தனை பிடிவாதம்! வைராக்கயம்! சந்தோஷம் வந்துவிட்டால் ஒட்டிக்கொள்வாள் சின்ன குழந்தைமாதரி முதுகில் (மெத்தென) கட்டிக்கொண்டு உப்புமூட்டை!*

*இன்று என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. தானாக வெளியே வரட்டும என்று நானும் கண்டு கொள்ளவில்லை. வார இதழை எடுத்துக் கொண்டு ஈஸிசேரில் சரிந்தேன்.*

*கண்கள் பத்திரிகையிலிருந்தாலும் கவனம் அவள் பக்கமேயிருந்தது. என்ன ஏதேன்று கேட்பேன். கேட்கவேண்டும் என்று அவள் எதிர்பார்த்திருக்க வேண்டும்.*

*பெண்களுக்கு இப்படி ஒரு வீம்பு! எப்படியிருந்தாலும் கொட்டியும் குமுறியும் தீர்க்கதான் போகிறார்கள். அதை தானகவே கொட்டிவிட்டால் என்ன குறைந்துப் போகுமாம்?*

*ஆழம் பார்ப்பார்கள். அகலம் பார்ப்பார்கள். நீட்டி முழக்கி, பெருமுச்சு விடுவார்கள். முகம் கருப்பார்கள், பாத்திரம் உருட்டுவார்கள். அவற்றிற்கெல்லாம் மிசியவில்லை யென்றால் படுக்கையில் விழுந்து புசுபுசுவென அழுகை!*

*உடனே பாவப்பட்ட புருஷன்காரன் ஓடிப்போய் அணைத்துக் கெர்ண்டு கண்ணீரைத் துடைத்து ‘என்ன விஷயம்‘ என்று கேட்க வேண்டும்.*

*‘என்னைத் தொடாதீங்க!‘*

*‘எங்கிட்ட பேசாதீங்க!‘*

*இதெல்லாம் சகஜம் இப்படிச் சொன்னால் ‘என்னை தொட்டுக் கொண்டேயிரு‘ என அர்த்தம். என்னுடன் பேசிக்கொண்டேயிரு! இது ஒரு பாசாங்க. இந்த பாசாங்க எனக்கு பிடிப்பதில்லை. பார்த்துப் பார்த்துப புளித்துப் போயிற்று. வேண்டாததிற்கெல்லாம் கோபம்! ஊடல்! சந்தேகம்! புகைச்சல்! அப்புறம் தர்க்கம், விவாதம்.*

*கடைசியில் ‘என்பேரில் உங்களுக்கு அன்பேயில்லை, அக்கரையேயில்லை‘ எனப் புலம்பல்.*

*வர வர வீட்டிற்குள் நுழையவே பயம், பிடிப்பதில்லை. பற்றிக் கொண்டு வருகிறது. பொறுத்துப் பார்த்து காபி கிடைக்காமல் போகவே சட்டையை மாட்டிட்க கொண்டு கிளம்பினவனை குறுக்கே வந்து மறித்து, “நில்லுங்கள்!“ என்று கத்தினாள்.*

*“வழியை விடுடி!“*

*“எனக்கு பதில் சொல்லிவிட்டுப போங்கள்!“*

*“நீ இன்னும் கேள்வியே கேட்கவில்லை“ என்று சிரிக்க முயன்றேன்.*

*“இந்த மழுப்பலெல்லாம் வேண்டாம். எனக்கு உண்மை தெரிந்தாக வேண்டும். சேலத்திற்கு நீங்கள் அடிக்கடி போவதேன்? யாரையோ பார்க்கதானே?“*

*“ஆமாம்“*

*“யாரை... யாரைன்னேன்.“*

*“எங்கள் பிராஞ்ச் ஆஸை.“*

*“பிராஞ்ச் ஆபிஸில் யாரைன்னு தான் கேட்டேன்.“*

*“யாரைன்னு கேட்டால். வந்து எல்லோரையும் தான்.“*

*“எல்லோரையும் என்றால் அதாவது பிராஞ்ச் மானேஜர், அக்கவுண்டன்ட், காஷியர், ஸ்டேனே...“*

*“அதாவது ஸ்டேனே பாரதி.“*

*“ஐ! உனக்கெப்படி அவ பேரைத் தெரியும்?“ என்று கன்னத்தை கிள்ளப் போக தட்டிவிட்டாள். தட்டிவிட்டதை சாக்காய் வைத்து கையை அவளது மா..... சரி அதுவா இப்போது முக்கியம்? உனக்கெப்படி அவளைத் தெரியும்?“*

*“அதுதான் ஊர் முழுக்க பேசுதே!“*

*“என்னன்னு?“*

*“உங்களுக்கும் அவளுக்குமிடையே லவ்வாம்“*

*“லல்வா.“ என்று சிரித்தேன்.*

*“லவ்லி ஜோக்.“*

*“ஜோக்கில்லை நிஜம்“ என்று முகம் சிவந்தாள் கண்களில் கடுகடுப்பு. இதே பெண்டாட்டி சந்தோஷமாய் பேசும் போது எத்தனை ஜொலிக்கிறாள்? அந்த சமயத்தில் தேவதை! மகாலட்சமி!*

*ஆனால் இப்போதே பிடாரி! அம்மாடியோவ்! எப்படியாவது இங்கிருந்து தப்பித்தாக வேண்டும்.*

*“அவளுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு?“*

*“வேறு என்ன – நான் ஆபீஸர். அவள் ஸ்டேனோ அவ்ளோதான்!“*

*“அவ்ளோதானா? அதுக்குமேல் எதுவுமேயில்லையா...?“ என்று வாசலிலேயே அழ ஆரம்பித்து விட்டாள்.*

*அவளுடைய குணம் எனக்குத் தெரியும். இத்தனை வயசாகிவிட்டாலும் மனைவி என்கிற அந்தஸ்திற்கு வந்துவிட்டாலும் கூட கல்பனா இன்னமும் ஒரு குழந்தை! வெகுளி! யாராவது எதையாவது சொன்னால் உடனே அதை உண்மையென நம்பிவிடுவாள். இப்போதும் யாரோ என்னத்தையே விதைத்திருக்கிறர்கள். அதை தெளிவுபடுத்திவிட்டால் புயல் ஓய்ந்து விடும்!*

*கதவை மூடிவிட்டு ‘‘சீ ஏன் இப்படியெல்லாம் சந்தேகப்படுகிறாய்...?“*

*“எனக்குத் தெரியும். நான் அதிகம் படிக்காதவள். சுமாரான அழுகுதான். கிராமத்து கட்டை!“*

*“கிராமத்து பொண்ணாய் வேணும்னுதானே கட்டிக்கிட்டேன்!“*

*“அன்னைக்கு ஏதோ ஒரு வேகத்துல சரி. இப்போ நான் அலுத்துப் போயிட்டேன். வேண்டாதவளாயிட்டேன்!“*

*“சீச்சீ அசடே! ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்? பெண்டாட்டியாவது அலுப்பதாவது. வேண்டாம்னு தோணுவதாவது.? உனக்கு நான் துரோகம் செய்வேனா...“ என்று அவளது கழுத்தை நெஞ்சோடு கட்டிக்கொண்டு இடுப்பில் ஒரு கிள்ளு கிள்ளவும் அந்த சந்தேகம் அப்போதைக்கு ஓடிப்போயிற்று.*

*மறுநாள் தூங்கும்போகும் போது கல்பனா முகத்தோடு முகம் உரசி “ஏங்க எனக்கு நீங்க துரோகம் செய்யமாட்டீங்கதானே...?“ என்று ஆரம்பித்தாள்.*

*“உனக்கு ஏன் அடிக்கடி சந்தேகம் வருது?“*

*“எனக்கு எல்லாம் தெரியும்.“*

*“என்னத் தெரியும்?“*

*“உங்க ஜாதகத்தைப் பார்த்தேன். அதில் இருககு.“*

*“என்ன இருக்கு?“*

*“உங்களுக்கு ரெண்டு பெண்டாட்டின்னு ஜோஸ்யம்... !“*

*“என்ன ஜோஸ்யம் கிளியா, தேவாங்கா இல்லை குரங்கு, புலி, எலின்னு!“*

*“அதெல்லாமில்லை எங்க குருக்களே சொன்னார். உங்களுக்கு ரெண்டு தாரமாம். அதனால் புருஷனை ஜாக்கிரதையாய் பார்த்துக்கோம்மான்னு.“*

*“அவர் கிடக்கார். என்னை நீ பரிபூரணமாய் நம்பலாம்.“*

*“நம்பரேன். ஆனாலும் எங்க குருக்கள் பொய் சொல்ல மாட்டார். அவர் சொன்னால் அப்படியே பலிக்கும்!“*

*“அதுக்காக...? என்னை இப்போ என்னப் பண்ணச் சொல்கிறாய்? அவர் வாக்கை பொய்யாக்கணுமா இல்லை உண்மையாக்கணுமா என்கிறாயா....ம்?“*

*“ஷ்...ஷி மெல்ல பேசுங்க! ஏன் இப்படி கத்தறிங்க...?“*

*கத்தாமல் அப்புறம் என்ன பண்றதாம்....“ என்று மேலும் கத்த ஆரம்பிக்க கப்பென வாயை பொத்திப் (தன் வாயால்) அடக்கினாள்.*

*ஒரு வாரத்திற்கு பிறகு-*

*திரும்ப சீதோஷ்ணம் மாறிற்றுத் திரும்பவும் புயல்!*

*செல்ஃபப்பை சுந்தம் பண்ணுகிறேன் என்று கிளம்பிளவளின் கண்ணில் ‘அந்த‘ பெண்ணின் படம் பட்டிருக்க வேண்டும்.*

*வீட்டிற்குள் நுழைந்த மாத்திரத்திலேயே கதவைப் பட்டென்று சாத்திவிட்டு “அன்னைக்கென்னவோ பெரிசாய் கத்தினீர்களே...? இது யாரு....?“ என்று படத்தை காட்டினாள்.*

*நான் பதில் சொல்லவில்லை. வாய் திறக்காமல் டிரஸ் மாற்றினேன். பதில் கிடைக்காமல் போகவே கல்பனாவின் பதற்றம் அதிகமாகியிருக்க வேண்டும்.*

*“நான் கேட்கிறேனில்லை இதுயாரு...? இவளுக்கும் உங்களுக்கும் என்ன உறவு? எல்லாம் நான் பயந்தபடியே நடந்து போச்சு! அந்த குருக்கள் சொன்னது போலவே“*

*ஆமாம் கல்பனா என்னை மன்னிச்சிரு. உங்கள் குருக்கள் சொன்னது நிஜம்தான்!“*

*“அப்போ இவ ரெண்டாந்தாரமா...“ என்று வானம் பொழிய ஆரம்பித்தது.*

*“இல்லை.“*

*“அப்புறம்?“*

*“ரெண்டாந்தாரம் - நீதான்!“*

*அந்த வார்தைகளை கேட்டதும் அவள் ஆடிப்போனாள். என்னச் சொல்றீங்க... நீங்க சொல்றது நிஜமா...?“ என்று என் தோளைப் பிடித்து உலுக்கினாள். ஐயோ.... ! நான் மோசம் போயிட்டேனே... ! யாரிவள்? எப்போ இவளை கட்டினீர்கள்?“*

*“பாம்பேயில் வேலை பார்த்த போது!“*

*“இவதான் சேலம் பாரதியா...“*

*“இல்லை நான் சொல்வதை பதற்றப்படாமல் கேள். பாம்பேயில் இருந்தபோது நானும் இவளும் உயிருக்குயிராய் நேசித்தோம். கோவிலில் வைத்துத் திருட்டுத்தனமாய் திருமணமும் செய்து கொண்டோம். ஆனால் அவளுடைய பெற்றோர்கள் அதை ஏற்கவில்லை.“*

*“இவ இப்போ எங்கேயிருக்கிறாள்?“*

*நான் சோகத்துடன் முகட்டுவளையைக் காட்னேன். “பெற்றோரின் எதிர்ப்பை சமாளிக்க முடியாமல் அவள்... அவள்... தற்கொலை!“*

*சொல்லிவிட்டு அறைக்குள் போய் ஜன்னலை வெறித்தேன்.*

*“இதை ஏன் எங்கிட்ட முன்பே சொல்லலை..?“*

*“உன்னிடமென்றில்லை எங்கள் வீட்டிலும் கூட யாரிடமும் சொல்லவில்லை. இனி சொல்லி ஆகப் போகிறதென்ன? நான் அவளை மறக்க விரும்புகிறேன். அடுத்தவர்களுக்குத் தெரிந்தால் அவ்வப்போது அவளை சுட்டிக்காட்டி காட்டி ஞாபகபடுததுவர். என் மனதிலிருந்து அவளை முழுக்கத் தூக்கி எறிய வேண்டியே மறைந்தது வைத்தேன். எனக்கு நீ வேண்டும் என் நெஞ்சு முழுக்க நீயே நிறைந்திருக்க வேண்டும் அதனால்தான் என்னை நம்பு!“*

*அரைமணி நேரத்திற்குப் பிறகு கல்பனா புதுமலராய் அறைக்குள் நுழைந்தாள். அவளது கையில் பலகாரம்! முகத்தில் பறக்கள். முடியில் மல்லிகை!*

*“போனதெல்லாம் போகட்டுங்க. நான் உங்களை நம்பறேன். முழுதாய் நம்பறேன்!“*

*“இனி சேலம் ஸ்டேனோவை சந்தேகிக்க மாட்டாயே...“*

*“ம்கூம்“ என்று இறுக்கிக் கொண்டு மூச்சு முட்ட வைத்தாள்.*

*“எப்படியோ எங்கள் குருக்கள் சொன்ன ஜோஸ்யம் பலித்துவிட்டது பார்த்தீர்களா. ! அவர் சொன்னது உண்மை என்று இப்போதாவது ஒத்துக் கொள்கிறீர்களா?“*

*“ஆமாம், ஆமாம்! அவர் சொன்னது நூத்துக்கு நூறு உண்மை!“ என்று வார்த்தைகளை உதிர்த்தாலும் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டேன்.*

*பெண்டாட்டியின் சந்தேக தொல்லையிலிருந்து விடுபட வேண்டி செய்த ஐடியா இது என்பதும், அந்த படத்திலிருப்பது பெயர் தெரியாத ஏதோ ஒரு மராத்தி துணை நடிகை என்பது கல்பனாவிற்கு தெரியவாய் போகிறது!*

## *12. மவளே......*

*நாள் முழுக்க உழைத்து களைத்திருந்தாலும் கூட மாலைத்தென்றல் உடலுக்குப் புத்துணர்ச்சி தந்திருந்தது. அந்திவானச் சிவப்பு, கருப்பாக மாறிக் கொண்டிருக்க “தேவகி! சோத்துப பானையை எடுத்துகிட்டு கிளம்பு. நான் டவுன்ல கீரையை போட்டுட்டு வந்துடரேன்!“ மாணிக்கம் வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு சாக்கு மூட்டையை சைக்கிளில் ஏற்றினான்.*

*தலையில் மூங்கில் கூடையும் தோளில் சாப்பாட்டு வாளியு மாய் அவள் புறப்பட்ட மகள்கள் ஆளுக்கொரு பக்கம் அவளுடன் நடக்க ஆரம்பித்தனர்.*

*“கைக் குழந்தையைத் தூக்க முடியலே. உங்ககூட சைக்கிள்ல அழைச்சுப் போயேன்ய்யா!“*

*மாணிக்கம் வண்டியின் விட்டத்தில் துணியை சுற்றி குழந்தையை அதன் மேல் அமர வைத்து “மழை வரமாதரி இருக்கு. சுருக்கமா வீடு போய் சேருங்க!“ என்று பெடல் சுற்றினான்.*

*பசுமையும், கீரை பாத்திகளின் செழுமையும் தேவகிக்கு சந்தோஷம் தந்தது. இதுமட்டும இல்லையென்றால்.... எங்கள் பிளைழப்பு என்னாகும்?*

*வானம் பார்த்த காட்டில் விளைச்சல் ஏதுமில்லை. வேண்டிய நேரத்திற்குப் பெய்யாமல் வேண்டாத நேரத்தில் உள்ள பயிர்களையும் அழிப்பதற்காக மழை வந்து போகிறது.*

*என்ன செய்யலாம். பிள்ளை குட்டிகளை எப்படிக் காப்பாற்றுவது என்று யோசித்த போதுதான் – ஆற்றோரப் படுகையில் அரசாங்க நிலம் பட்டா போட்டு கிடைத்தது.*

*சின்ன இடம்தான். புதுரும் முட்காடுமாயிருநததை சீர்பண்ணி, ஆற்றில் ஊற்று வெட்டி ஏற்றம்கட்டித் தண்ணீர் பாய்ச்சி இந்த கீரைத் தோட்டம்!*

*மாணிக்கம் சால் மொண்டு விட – ரப்பர் பை உப்பலாய் தண்ணீர் ஒழுகிக் கொண்டு – மேலே வர தேவகியும் – மகளும் இழுட்ததுக் கொண்டு நடப்பர். தண்ணீர் வாய்க்காலில் கொட்டப்பட்டதும் – மறுபுறம் தொங்கிப் போய் கீழே போவதை பிள்ளைகள் ரசிப்பர்.*

*கீரைத்தோட்டத்தில் பெரிய செலவில்லை. கொஞ்சம் உரம். களைபறிக்கணும். இரண்டு நாட்களுக்கொருமுறை பறித்து மார்க்கெட்டிற்குக் கொண்டுப்போனால் உடனடி காசு.*

*ஆனால் குடும்பம் முழுக்க இங்கே குடியிருக்க வேண்டும் – இல்லாவிட்டால் ஆடு மாடுகளை விட்டு அழிததுவிடுவார்கள். நரி நோண்டிப் போட்டுவிடும். அதனால் பொழுது விடிந்ததும் சோறு ஆககி – கழனி தண்ணியுடன் அங்கே வந்தால் பொழுது சாய்ந்ததும்தான் வீடு திருமப முடியும்.*

*சந்தையில் விற்பவர்களும் வாங்குபவர்களுமாய் சலசலப்பு! கசகசப்பு! வைக்கிள், வண்டி, காய்கறிகள், பூ, கீரை என அங்கங்கே ஏலம்! பேரம்!“*

*மாணிக்கம் வாடிக்கையாளர் என்பதால் வியாபாரியிடம் பேரம் பேச வேண்டிய அவசியமில்லாமல் சாக்குகட்டை இறக்கினதும் எடை! கல்லாப் பெட்டியிலிருந்து பணம்!*

*நாள் முழுக்க வெயிலும் வியர்வையுமாய் உழைந்ததிற்கு அந்தப் பணம் மகிழ்வுதந்தது திருபதி. சேர்ந்த உழைப்பு, யாரையும் ஏய்க்கவில்லை கெடுக்கவில்லை. குடும்ப ரத்தம்!*

*இதில் கிடைக்கும் ஆனந்தத்திற்கு அளவில்லை.*

*சைக்கிளை தள்ளிக் கொண்டு வெளியே வந்து, குழந்தைக்குப் பலூன் பஞ்சுமிட்டாய் வாங்கினான். வயிறு பசிக்கவே டீக்கடையில் பக்கோடாவும் டீயும். வீட்டுக்கும் பக்கோடா, சமுசா பார்சல்!*

*குழந்தையை அமரவைத்து வண்டியை எடுத்தபோது "ஏ.. மாணிக்கம் இன்னிக்கு என்ன மேகா வசூலா!" என்று தோளில் கரம் ஒன்று அழுத்திற்று.*

*திரும்பினால் மீசை சவரம் செய்யப்படாத முள்தாடி லுங்கி பனியனுமாய் நண்பர்கள்! அவர்களின் கண்களிலும் வாயிலும் சிகப்பு! பீடிநாற்றம். துவைக்க வேக் கூடாது என்று சத்தியம் பண்ணிக் கொடுத்த மாதரி துணிகளில் கப்பு!*

*கிராமத்துக கூட்டாளிகள்! அங்கே உழைக்கவும் பிழைக்கவும் தயாராக இல்லாமல் டவுனுக்கு வந்து கூலியாய் – கூவித் திரிபவர்கள்.*

*"ஐ! அண்டர்வியர் பையில் பெரிய முடைப்பு! அப்போ செம வரும்படிதான்!" என்று ஒருவன் தட்ட, மாணிக்கம் ஒதுங்கினான்.*

*"ஏய் இத தொடாதீங்க உரம் வாங்கணும்! பூச்சி மருந்து! வீட்டுக்கு மளிகை!"*

*"அதெல்லாம் அப்புறம் பாத்துக்கலாம். வாடா ஒரு பெக்!"*

*"ம்கூம் வேணாம். அது தப்பு!"*

*"எதுடா தப்பு? நீ என்ன திருடுகிறாயா – வரண்டுகிறாயா – எவன் சொத்தையாவது கொள்ளையடிக்கிறாயா?... இல்லை கற்பழிப்பா...?"*

*"அதானே! அதெல்லாம்! இல்லியே. இவற்றையெல்லாம் செய்றவன் நாட்டுலு நலமாயிருககாங்க. உனக்கேன் கலக்கம் மவனே? சொந்தக் காசில் குடிப்பது என்ன தவறா?"*

*"இல்லை விடுங்க. குடி குடியைக் கெடுக்கும்!"*

*"அது வெறும் சுலோகம்டா. கொஞ்சம் ஊத்திப்பா – உடம்பு வலி போகும். களைப்பு மாறும். மறுநாள் இன்னும் தெம்பாபோட உழைக்கலாம்"*

*"வேணாம். என் தேவகிக்கு இதெல்லாம் பிடிக்காது!"*

*"தேவகி என்ன தேவதைக்கே பிடிக்கும். தோ பார் உனக்கு உடம்பு முடியலேன்னு மருந்து சாப்பிட்டா உன் பெஞ்சதி வேணான்னுருமா?"*

*"இல்லை. இதும் கூட மருந்துதாண்டா. அதும் நாட்டு மருந்து தப்பேயில்லே!"*

*"எங்கிட்ட அவ்ளோ பணமில்லை."*

*“அதான் சொல்றோமே. நாட்டுமருநதுன்னு! பிரைவேட்டு! ஷோக்கா இருக்கும். இன்னும் ஜாஸ்தி போதை! மாணிக்கம் உழைச்சா மட்டும் போதாதுடா. அதை அனுபவிக்கவும் தெரியணும். சந்தோஷமா வாழணும். நீ என்ன மாடா? மறத்துப் போக?*

*அவர்களின் வற்புறுத்தலில் மாணிக்கத்தின் மனமும் இறங்கி வந்தது. மனிதனை ஆக்குவதும் அழிப்பதும் சுற்றுப்புறச் சூழல்தான். ஒருவனின் முன்னேற்றத்திலும் கலாச்சாரத்திலும் நண்பர்களின் குண நலன்களைச் சொல்கிறேன் என்பார்கள்.*

*உண்மை.*

*பழக்கவழக்கங்களும், நற்பண்புகளும் நட்பைப் பொறுத்து அமையும். கெட்டவர்களின் சகவாசம் தீய காரியங்களையும் செய்யத் தூண்டும். மனசாட்சியை அடமானம் வைக்கும்.*

*மாணிக்கமும் அடமானம் வைக்கத் தயாரானான்.*

*அதற்குள் குழந்தை வீலென அலற ஆரம்பித்தது. “ப்பா வீத்துக்குப் போலாம்! போலாம் .... !“*

*“போலாம்டா கண்ணு!“*

*“இப்பவே போணும். அம்..மா..ம்மா!“*

*“மாணிக்கம் அவர்களிடம் கெஞ்சி, “குழந்த் அழுதுடா. பயப்படுது. நான் வரேன்!“*

*“டவுனுக்கு வரும்போது எதுக்குடா இந்த அகிபடி லக்கேஜ்? வீட்டுலயே விட்டுர வேண்டியதுதானே!“*

*“தேவகி பாவம்டா. ஏற்கனவே ரெண்டு பிள்ளைக சோத்து மூட்டை! இதையும் எப்படி சுமப்பா – நான் கிளம்பறேன்!“*

*தடி நண்பன் ஹேண்டில் பாரைப் பிடித்து நிறுத்தி “இன்னிக்கு விடறோம் – மவனே நாளைக்கு நீ தனியாத் தான் வரணும் ஆமா - சொல்லிபுட்டோம்!“*

*மறுநாள்-*

*கீரைத் தோட்டத்திற்குத் தண்ணீர் இரைத்து, உரம்போட்டு, களை பறித்தபோது மாணிக்கத்தின் சிந்தை அங்கில்லை*

*“உழைச்சா பத்தாதுடா. அனுபவிக்கவும் தெரியணும்!“*

*‘‘களைப்புக்கும் உடல் வலிக்கும் இது மருந்துடா“*

*அவனுக்கு உடல் முழுக்க வலி! இத்தனை நாள் தெரியாத வலி! களைப்பு! இன்று மட்டும் ஏன்! மனதில் விஷம் பரவிற்று.*

*குடித்துத்தான் பார்ப்போமே. உடம்பு வலி குறைஞ்சா சரி. இல்லேன்னா விட்டிடறது! நாட்டுல பாதிக்கு மேல் குடிக்கிறாங்க. எல்லோரும் கெட்டாப் போனாங்க? கவர்மென்டே ஊத்திக் கொடுக்குது!*

*எப்போது பொழுதுசாயுமென்றிருந்தது அவனுக்கு.*

*ஆறு மணிக்கு எல்லாவற்றையும் சாக்கில் அள்ளிக்கட்டி "தேவகி நீ குழந்தையை அழைச்சுப்போ. நான் மார்க்கெட்டுக்கு..."*

*"எல்லாத்தையும் நான் எப்படிய்யா... குழந்தை உன்கூட தானே தினம் வரும்!"*

*அதற்குள் குழந்தை சைக்கிளை பிடித்து தயாராய் நின்று "போலாம்பா!"*

*"வேணாம் மழை வரமாதிரியிருக்கு!"*

*தேவகி அண்ணாந்து பார்த்து "மேகத்தையே காணோமே."*

*"இல்லை. சொன்னாக் கேள். தினம் நாலு மைல் நான்தான் காத்துலயும் மழையிலும் அவஸ்தை படறேன்னா குழந்தை ஏன்? அதுக்கு குளிர் ஒத்துககாது, அழைச்சுப்போ!"*

*மாணிக்கம் அதட்டிவிட்டு புறப்பட்டான். இந்த மனுஷனுக்கு இன்னிக்கு என்னாச்சு? தேவகிக்கு எதுவும் விளங்கவில்லை. தலையில் சாப்பாட்டுக் கூடை, இடுப்பில் கைக்குழந்தை என நடக்க ஆரம்பித்தாள்.*

*"எங்களுக்குத் தெரியும் நீ வருவேன்னு! வா.. மவனே.. வா"*

*கூட்டாளிகள் உறிசாகமாய் மாணிக்கத்தின் தோளை அரவணைத்து குடிசை ஒன்றிற்கு அழைததுப போயினர். அங்கு பிசிறின முடியும். கசங்கின சதையுமாய் வசீகரித்த பெண்ணிடம் அமரவைத்து கண்ணாடி டம்ளர்கள்!*

*"இந்தாடா பிடி! குடி! அடி!"*

*"அடி மவனே அடி! அப்புறம் பார் நீ எங்கேப் போறேன்னு!"*

*தயக்கத்துடன் டம்ளரை வாங்கி முகர்ந்ததுமே மாணிக்கத்திற்கு குமட்டிற்று. ஒருவாய் வைத்ததும் கசப்பு! துவர்ப்பு! தேவகி கண்ணில் தெரிந்தாள். பிள்ளைகள் அவர்களது கிழிந்த துணி!*

*"போலாம்ப்பா ம்...மா.....ம்மா..."*

*குழந்தையின் நேற்றைய அழுகை. வயிற்றைக் கீறிற்று.*

*இண்டாம் வாய் அவனுக்குச் செல்லவில்லை வெளியே கொப்பளித்தான்.*

*"ஏண்டா. எனக்கு வேணாம்" அப்போதும் காதுக்குள் மகளின் குரல். 'போலாம்ப்பா.. போலாம்'*

*"அதான் ஏன்னேன்"*

*"முடியலே.."*

*"ஏன் மவனே?"*

*"என் தேவகி பாவம்டா. நான் மட்டும் உழைக்கலே. அவளும் தான் கஷ்டபடறா. அவங்களை விட்டுட்டு நான் இப்படி சரியாப் படலே."*

*"அப்போ அவளுக்கும் வாங்கப்போ!"*

*"ஆமா. பார்சல்!"*

*“இல்லை வேணாம் என்னை விட்டிருங்க!“*

*“அடச்சீ தப்புகெட்டவனே! ஆம்பளையாடா நீ? பொட்டைபய!“*

*“இருந்துட்டுப் போறேன்!“*

*“ஏய்... அழைச்சு வந்துட்டு நம்பிக்கை துரோகமா.?“ போதை ஏறினவர்கள் அவனது சட்டையைப் பற்றினர். “ஒண்ணாவந்துட்டு மவனே எங்களை விட்டுட்டுப் போயிருவியா... நீ?“*

*“ஆமா அப்ப போய்தானுகணும்னா... துட்டைக் கொடுத்துடடுப் போ!“*

*“துட்டுதானே – இந்த ஆளைவிடுங்க!“*

*மாணக்கத்திற்கு அன்று இரவு தூக்கம் வரவில்லை. புரண்டுக் கொண்டேயிருந்தான். மனதில் இனம்புரியாத கலக்கம். உறுத்தல். ஒரு வாய் குடித்ததிற்கே வயிற்றில் கலவரம். நாலு முறை புதர்ப்பக்கம் போய் வந்துவிட்டான்.*

*தேவகி... கண் விழித்து “என்னய்யா... வயிறு சரியில்லையா... ஜீரகம் – உப்பு தரட்டுமா?‘‘ என்று முனகினாள்.*

*“வேணாம். நீ தூங்கு.“*

*மறு நாள் மாலை.*

*“தேவகி! குழந்தையை நானே அழைச்சுப் போறேன்“ என்று மாணிக்கம் சொல்ல அவளுக்கு எதுவும் பிடிபடவில்லை “உனக்கு சிரமமில்லையா...?“*

*“இல்லை.“*

*“சந்தையில் கீரையில் விற்றுப் பணத்துடன் வெளியே வந்த போது பசங்கள் தென்படுகிறர்களா என்ப் பார்த்தான். இல்லை. மனதில் நிம்மதி – பயம் – சங்கடம். மளிகைக் கடைக்குப் போன போது அங்கே தொலைக்காட்சியில் ‘குப்பத்தில் விஷசாராயம் குடித்து அம்பது பேர் பலி! நேற்று குடிசையில் சாராயம் குடித்து...“ என்று செய்தி வாசித்து அரசாங்க மருத்துவமனையில் பிணங்களை காட்டின போது வரிசையாய் அடுக்கப்பட்டிருந்தவர்களில் அவனது நண்பர்களது உடல்களும்! அவனுக்குப் பகீரென்றிருந்தது. அடக்கடவுளே! நேற்று இவர்களுடன் சேர்ந்து. குடித்திருந்தால் நானுமல்லவா... அப்புறம் என் குடுமபம் குழந்தைகளின் கதி....*

*வழக்கமாய் ‘போலாம்ப்பா... வீத்துககுப் போலாம்ப்பா...‘ என்று அழும் குழந்தை – ஹான்ட்பாரில் அமர்ந்தபடி புன்னகைக்க – அள்ளி எடுத்து அவளை முத்தமிட்டான். ‘மவளே உன்னலதான் நான் பிழைச்சேன்!‘*

## *13. சொகுசு*

*பொன்னம்மா, "அப்போ நான் கிளம்பட்டுமாம்மா..?" என்றார் ஈரக்கையை கொசவத்தில் துடைத்தபடி.*

*"டிபன் ரெடி பண்ணிட்டாயா...?"*

*"பண்ணி அந்த ஆட்பெட்டியில் (ஹாட்பேக்) வச்சிருக்கேன். பார்த்திரங்கள் கழுவிட்டேன். வீடு பெருக்கியாச்சு."*

*"பூச்செடிகளுக்குத் தண்ணீர்." கனகாம்பாள் விடாப்பிடி விடித்தாள்.*

*"ஊத்திட்டேம்மா."*

*கனகம், கடிகாரத்தை எட்டி பார்த்து "மணி ஏழுதானே ஆகறது.. ஐயா வந்ததும் காபி போட்டு கொடுத்துட்டுப் போகக்கூடாதா?"*

*"இருட்டி போக்சும்மா. குடிசைல எம்மவன் தனியா இருப்பான்."*

*"தினம் தினம் அவனை சொல்லிதான் ஓடிப்போகிறாய்! வீட்டுல எல்லோரும் சாப்பிட்டு முடிச்சதும் பத்து பாத்திரமெல்லாம் குமிஞ்சு போறது!"*

*"பரவாயில்லைம்மா. நாளை காலைல வந்து கழுகி வச்சுக்கிறேன்!"*

*"நான் அதுக்காக சொல்லலே பொன்னம்மா. இங்கே வசதியில்லையா? இல்லை இடமில்லையா? எதுக்காக நீ குப்பத்துல போய் தங்கணும்? பேசாம இங்கே அவுட்ஹவுஸிலேயே தங்கிகிட்டால் அலைச்சலும் மிச்சம் உனக்கு பாதுகாப்பவும் இருக்குமில்லே...?"*

*பொன்னம்மா அதற்குப் பதில் சொல்லாமல் கிளம்பினாள்.*

*எட்டி நடை போட்டு வியர்க்க விறுவிறுத்து குடிசைக்கு வந்த போது ல்ட் கம்பத்தின் கீழ் முத்து அமர்ந்திருபபது தெரிந்தது. மடியில் ஸ்கூல் புத்தகம் விரிந்துவிடக்க, வாய் பிளந்தபடி அவன் தூங்கிக் கொண்டிருந்தான்.*

*அவனைச் சுற்றிலும் கொசுக்கள் வளையமிட்டிருந்தன. ஈசல்கள் லைட்டை தாக்கி தோற்றுப் போய் தரையில் மொய்த்திருந்தன.*

*"எலே முத்து."*

*அவன் திடுக்கிட்டு விழிததான். வாயிலிருநது ஒழுகின எச்சிலை துடைத்துக் கொண்டு சோர்வுடன் எழுந்தான்.*

*"தூக்கம் வந்தால் உள்ளே போகலாமில்லே."*

*"டீச்சர் நிறைய வீட்டு பாடம் கொடுத்திருக்காங்கம்மா" என்று தாயின் பின்னாலேயே நடந்தான். "எனக்கு திங்கறதுக்கு என்ன கொண்டு வந்தாய்..?" என்றான் ஆவலுடன். அவன் சரியான தீனிப் பிரியன்.*

*“திங்கறதுக்கு தினம் படைப்பாங்களா...? முதலாளி வீட்டுல இன்னைக்கு ஒண்ணும் செய்யலே.“*

*“பட்டானியாவது வாங்கி வந்திருக்கலாமில்லே...? எனக்கு பசிக்கிது“*

*“இதோ இப்போ கஞ்சி வச்சுடறேன்“ என்று அடுப்பை மூட்டினாள்.*

*“படிச்சுட்டுரு. இதோ ஆச்சு!“*

*குடிசையின் மேல் பாகம் கரிபிடித்திருந்தது. வெளியே மழைச் சாரல் ஒழுகிற்று அவனது புத்தகத்தின் மேல் சொட்டிற்று.*

*“நாம எப்போம்மா மாளிகைக்குப் போவோம்...?“*

*“மாளிகையா...?“ கனகம் சிரித்து சமாளித்து “நீ படிச்சு வேலைக்குப் போனதும்“ என்றாள்.*

*“அதுவரை இருட்டிலேயே படிக்கணுமா...? இந்த பல்பு பீஸாகி எத்தனை நாளாச்சு... !“*

*“கவர்மெண்ட்டுல கரண்ட்தான் இலவசமா தராங்க. பல்பு தரலியேப்பா!“*

*சாப்பிடும் போது முத்து “நமக்கு விமோசனமே கிடையாதாம்மா...?“*

*“குளிருது. ஒழுகுது. கொசு கடிச்சு புடுங்குது.“*

*“சாப்பிட்டு பேசாம தூங்குடா!“*

*அவனை அதட்டி படுக்க வைத்தாளே தவிர அவளக்குத் தூக்கம் வரவில்லை. செத்துப் போன புருஷன் மேல் கோபம் கோபமாய் வந்தது. ஒரு குடிகாரனுக்கு வாக்கப்பட்டிருக்கக் கூடாது. அப்படியே வாக்கப்பட்டிருந்தாலும் பிள்ளை பெற்றுக் கொண்டிருக்கக் கூடாது. அவனுக்கென்ன சீக்கிரம் நிம்மதியாய்ப் போய் சேர்ந்துவிட்டான்.*

*‘கஷ்டமோ நஷ்டமோ நாம் மட்டும் என்றால் அனுபவித்துக கொள்ளலாம். இவனுக்கு வருத்தம் தெரிகிறதா...? மாளிகை வேண்டுமாம். மாளிகை! அப்போது அவளுக்கு மூளையில் ஒரு பளிச். எஜமானியம்மா சொன்னாங்களே அவுட்ஹவுஸில் தங்கிக் கொண்டால் இத்தனை தூரம் வந்துப் போக வேண்டியதில்லை அங்கே லைட் இருக்கிறது. காத்தாடி இருக்கிறது. ஒழுகாது கொசுக் கிட்டே வராது.*

*மறுநாள்.*

*வீடு துடைக்கும் போது கனகம், “என்ன முடிவு பண்ணினாய்..?“ என்றாள்.*

*“எதுக்கும்மா....?“*

*“அவுட்ஹவுஸிற்குதான். ஐயாகூட சஜஸ்ட் பண்ணினார். என்ன சொல்கிறாய்...“*

*“உங்க இஷ்டம்மா.“*

*அடுத்த வாரத்திலேயே அவர்கள் அவுட்ஹவுஸிற்கு மாறினர்கள். முத்துவிற்கு சந்தோஷம் பிடிபடிவில்லை. லைட்டைப் போட்டுப் போட்டு நிறுத்திப் பார்த்தான். ஃபேனை இம்சை பண்ணினான்.*

*“அய்.. ! பளிங்குத் தரை!“ என்று கால்களால் வழுக்கினான். “அய்... ஷவரு! அய்... டேபிள்! சோபா! அய்.... சுவத்துல கண்ணாடி!*

*பொன்னம்மாவிற்கும் பெருமிதம் பிடிபடவில்லை. “எஜமானர் நல்லவர். அவருக்குதான் எத்தனை பரந்த மனசு! இல்லாவிட்டால் இப்படி ஒரு பளிங்கு வீட்டை நமக்கு ஓசியில் விடுவார்களா?“*

*“ஏய்... முத்து! லைட் லைட்டுன்னாயே இனி ஒழுங்காய் படிக்கணும் என்ன...“*

*“சரிம்மா...“ என்றானே ஒழிய அவனால் படிக்க முடியவில்லை. சொகுசு வந்ததும் கவனம் பிசகிற்று. மனது பூக்களின் மேல் போயிற்று. உல்லாசத்தில் பறந்தது.*

*முதலாளியின் மகன்கள் பேட்மிட்டன விளையாட, அவர்கள் பின்னால் ஓடிற்று. புத்தகத்தைப் போட்டுவிட்டு வெளியே வந்தான். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும அடிபடும பந்தை ஆவமுடன் பார்த்தான்.*

*பந்து கோபித்துக் கொண்டு காம்பவுண்டின் கண்ணாடிச் சிதறலில் குத்திக் கொண்டு நிற்க, அவர்கள் குதித்துக் குதித்துப் பார்த்தார்கள். பந்து எட்டவில்லை. பிறகு இவன் பக்கம் ஏக்கத்துடன் திரும்பினர். முத்துவிற்கு கைகள் பரபரத்தன. என்னால எடுக்க முடியும் நான் எடுத்து தரட்டா...? நான்?“*

*அவன் கேட்கவில்லை மெல்ல நகர்ந்தான். காம்பவுண்டின் உயரத்தைக் கண்களால் அளந்து பார்த்தான். எட்டாது. ‘நிச்சயமாய் ஏறவும் முடியாது. என்ன செய்யலாம்...? எப்படியாவது இவர்களுக்கு உதவ வேண்டும.‘*

*‘நாம் ஒரு உதவி பண்ணினால் பதிலுக்கு தின்பத்திற்கு ஏதாவது தருவார்கள். காசு தருவார்கள். கடலை மிட்டாய் வாங்கி திண்ணலாம்.‘ சட்டென மூளையில் ஒரு யோசனை உதித்தது.*

*இரும்பு கேட்டிடம் ஓடினான். அதன் மேல் ஏறி அப்படியே காம்பவுண்டிற்க தாவி வித்தைக்காரன் கம்பியின் மேல் நடப்பது போல நடந்து பந்தை எடுத்து போட்ட போது அவர்கள் நன்றியுடன் பார்த்தனர்.*

*“தாங்க்ஸ்டா.“*

*அந்தக் பெருமிதப்பில் திரும்பின போது பாதத்தில் கண்ணடிகுத்தி ரத்தம் ஒழுகிற்று. நமநமத்தது. அதை மறைக்க முயன்றும் முடியவில்லை. காயம் வெளியே தெரியக்கூடாது! வீரசெயலுக்கு அது ஒரு இழுக்கு.*

*ஆனாலும் கூட அவர்கள் பார்த்து விட்டனர்.*

*“அச்சச்சோ ரத்தம். கண்ணாடி குத்திருச்சா...?“*

*“இல்லை...“*

*“பொய் சொல்லாதே. வா மருந்து போட்டு விடறோம்“ என்று வீட்டிற்குள் அழைத்துப் போயினர். “அம்மா! இவன் கால்ல கண்ணாடி வெட்டிருச்சு!“*

*முத்து தயங்கித் தயங்கி நிற்க, கனகம் அவனை அருவருப்பாய் பார்த்து மருந்து எடுததுக் கொடுத்தான். ஹாலில் டைனிங்டேபிளும் அதன் மேலிருந்த பழவகைகளும் பதார்த்தங்களம் அவனை ஈர்த்தன. நாக்கு சுரந்தது.*

*கட்டுப்போட்டதும் மூத்தவனான அருண், ''இந்த பிரட் ஜாம்!'' என்று நீட்டினான். ''சாப்பிடு.''*

*அந்தச் சமயம் பொன்னம்மாள் கிட்டசனிலிருந்து முறைக்க ''எனக்கு வேண்டாம்'' என்றான் பயத்துடன்.*

*''சும்மா வாங்கிக்க'' என்று அவனது கையில் திணித்து வெளியே அழைத்து வந்தனர். ''சீக்கிரம் சாப்பிடு விளையாடலாம்!''*

*அன்று மட்டுமில்லை தினமும் அவனுக்கு சந்தோஷமாடியருந்தது ஜாலியாகவும். அவர்களுடன் சேர்ந்து கொண்டு சைக்கிள் விடுவான். கண்ணாமூச்சி.*

*உள்ளே போய் டி.வி. பார்ப்பான். அவர்களின் டிரஸ்களின் பார்த்து வியப்பான். உனக்கு இத்தனை சட்டைகளா...? இத்தனை செருப்புகளா..? இத்தனை விளையாட்டுப பொருட்களா.?*

*அந்த வியப்பு பிரமிப்பாயிற்று. பிரமிப்பு பெருமூச்சில் வந்து நின்றது. பெருமூச்சு படிப்பைத் தடை பண்ணிற்று. புத்தகத்தை வைத்துக கொண்டு சுவற்றையே வெறித்துக கொண்டிருப்பான். சதா யோசனை.*

*எனக்கும் மட்டும ஏன் இந்த நிலமை? நானும் ஏன் பணக்காரனாய் பிறந்திருக்கக் கூடாது? அவர்கள் விதம் விதமாய் சாப்பிடுகிறார்கள். ஐஸ்க்ரீமாய் சுவைக்கிறார்கள். காரில் சினிமாவிற்கப் போகிறார்கள். அவர்கள் வீட்டு நாய்க்கு கூட பிஸ்கெட்! கோழிககறி! ஆனால் நமக்கு...? தினம் கஞ்சி. நாம் என்ன குற்றம் செய்தோம்?*

*அந்த நினைப்பு படிப்பை கெடுத்தது, சஞ்சலத்தை உண்டு பண்ணிற்று. அவற்றை போக்கிக் கொள்ள வேண்டி அல்லது ஆசையை அடக்கிக் கொள்ள முடியாமல் அவர்களிடம் நெருங்கி நெருங்கிப் போவான். அவர்களும்-*

*அவனைக் கண்டதும் பரிதாபபட்டு எச்சில் சாக்லெட் தருவார்கள். கேக்! பாடித கப் ஐஸ்! எல்லாம் தந்துவிட்டு அவன் மேல் குதிரை ஏறுவார்கள். அவனுக்கு வால் வைத்து விளையாடுவார்கள். அவனுக்கு மீசை வரைந்து நகைப்பார்கள்.*

*எல்லாவற்றையும் அவன் ஏற்றுக்கொள்வான். திண்பண்டம் கிடைக்கிறதே!*

*பொன்னம்மாள் அவனது போக்கை கவனிக்கவே செய்தாள். ஆனாலும் கூட கண்டிக்க முடியலில்லை. அதற்கு நேரமில்லை. முன்பு தள்ளியிருந்த போதாவது மகனுடன் பனிரண்டு மணிநேரம் கழிக்க முடிந்தது.*

*ஆனால் இப்போதோ ராத்திரியில் கூட வேலை ஓழிவேயில்லை 'பக்கத்தில் தானே இருக்கிறாய், இதை செய்துட்டு போ, அதை செய்துவிட்டு போ' என்று ஒன்று மாற்றி ஒன்றாய் வேண்டாத வேலைகளையெல்லாம் தலையில் விழும், ஒய்வில்லை, மறுக்கவும் முடிவதில்லை.*

*எப்படி முடியும்? அவுட் ஹவுஸை கொடுததிருக்கிறார்களே!*

*ஒரு சமயம் பரீட்சை மார்க்குகளைப் பார்த்தவளுக்கு அதிர்ச்சி. முன்பெல்லாம் தட்டுததடுமாறி பாஸ் மார்க் வாங்கிக் கொண்டிருந்தது முத்து இப்போது எல்லாவற்றிலும் பெயில்.*

*பொன்னம்மாவிற்கு கோபத்தை அடக்க முடியவில்லை. அவனை போட்டு நொறுக்கித் தள்ளிவிட்டாள், ''ஏண்டா? ஏண்டா பெயில்? 'லைட் வேணும் ஃபேன் வேணும்னாயே! மாளிகை வேண்டும் என்று அழுதாயே! ஏன் அப்புறம் ஏன் பெயில்?''*

*அவன் பதில் பேசவில்லை. அழுதுகொண்டே படுத்துவிட்டான் அரைமணி நேரத்தில் அவளது கோபம் அடங்கிற்று.*

*பாவம்! தகப்பனில்லாத பையனை இப்படி அடிக்கலாமா? சுகம் வந்ததும் விளையாட்டு நினைப்பில் இருந்திருப்பான்.*

*போகப் போகச் சரியாகி விடுவான்.*

*அவன் சயிகவில்லை. ''முத்து உன்க்கு என்னடா ஆச்சு?''*

*''என்னால படிக்க முடியலேம்மா.''*

*''அது தான் ஏன்?''*

*''நான் மட்டும் என்ன பாவம் பண்ணினேன். முதலாளி மகன்கள் உல்லாசமா இருக்காங்க. வாய்க்கு ருசீயா சாப்பிடறாங்க. போர்ன்விட்டா! ஹார்லிக்ஸ்! ஆப்பிள்! மாங்காய் ஜூஸ்! எனக்கு மட்டும ஏம்மா கஞ்சி! அவங்களை ஸ்கூலுக்கு கொண்டுப் போக வேண் வருது. நான் மட்டும ஏம்மா நடக்கணும்? அவங்களுக்கு புதுசு புதுசா டிரஸ். எனக்கு மட்டும் ஏம்மா கிழிஞ்ச சட்டை? நான் என்ன குத்தம் பண்ணினேன்? சொல்லும்மா சொல்லு.''*

*''குத்தம் நீ பண்ணலேடா. நான் நான்தான்! உனக்கு வசதியாயிருக்கட்டுமேன்னு இங்கே வரசம்மதிச்சேன் பார். அதுதான் குத்தம்!''*

*மறுநாளே அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். தன் மூட்டை முடிச்சுக்களை கட்டி, அவுட்ஹவுஸை பூட்டி ''இந்தாங்கம்மா சாவி'' என்று கனகத்திடம் நீட்டினாள். ''நாங்கள் எங்களோட குடிசைக்கேப் போறோம்.''*

*''ஏன் உனக்கு இங்கே என்ன குறை வைத்தோம்? எதுக்காக நீ போகணும்?''*

*''குறை உங்ககிட்டையில்லேம்மா. எங்கிட்டதான். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படகூடாது. யாருககு என்னென்ன விதிச்சிருக்கோ அதுதான் நிலைக்கும். அதுதான் ஓட்டும. அவங்கவங்க இருக்க வேண்டிய இடத்தில் இருந்தாதான் நிம்மதியும் கிடைக்கும். சுகமும் நிலைக்கும். நாங்க வரோம்.'' சொல்லிவிட்டு –*

*பொன்னம்மாள் முத்துவை இழுத்துக கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.*

## *14. மணி*

*பாதிரியார் மாதா கோவிலின் பின்புறமிருந்த தோட்டத்தில் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் நடந்துக் கொண்டிருந்தார். அவர் முகம் வாட்டமாயிருந்தது.*

*அவர் சாதாரணமாய் எந்த விஷயத்தையும் பெரிதாய் எடுததுக் கொள்கிறடைப் இல்லை. எப்போர்ப்பட்ட பிரச்னை வந்தாலும எளிதாய் சமாளித்து விடுவார். வரது வரட்டும்' என்று ஏற்றுக் கொள்வார்.*

*அப்படிப்பட்டவரையே இப்போது கலங்க வைத்துவிட்டது அந்த சர்ச்சின் மணி.*

*அந்த ஊர் சின்னதுதான். ஆனால் கிறிஸ்துவர்கள் அதிகம் என்பதால் சர்ச் பிருமாண்டமாய் கட்டப்பட்டிருந்து. அதன் கோபுரம் சுமார் 300 அடி உயரம் வரை எழும்பியிருக்கும். கோபுரத்தின் உச்சியில் ஒரு ராட்சஷ மணி!*

*அந்த மணிதான் ஊரை எழுப்புகிற கோழி. காலையில் ஐந்து மணிக்கும் ஐந்தரைக்கும் மணி அடித்தது என்றால் ஊரே விழித்துக் கொள்ளும். டிங்-டாங்கென்று கர்ணக் கொடூரமாய் ஒலிக்கும் அதன் ஓசையை கேட்டாட்ல ஜனங்களுக்கு சுறுசுறுப்பு வந்து ஒட்டிக் கொள்ளும்.*

*சர்ச்சை ஒட்டினாற்போல் ஸ்கூல் ஒன்று இருந்தது. மணி சப்த்தைக் கேட்டதும். பிள்ளைகள் குளிரையும் பொருட்படுத்தாமல் குளிக்கக் கிளம்பிவிடும். ஊரில் சங்கு இல்லாத குறையையும் அந்துமணி தீர்த்துக் கொண்டிருந்தது.*

*பகல் பனிரெண்டு மணிக்கு, ஒரு மணிக்கு, மாலை ஐந்திற்கு. இரவு எட்டு மணிக்கு என்று குறிப்பிட்ட நேரங்களில் மணியடிக்கப்படும். யாராவது இறந்து விட்டால் அதை அறிவிப்பதிற்கும் அஞ்சலி செலுத்துவதிற்கும் கூட மணி முழங்கும்.*

*ஒவ்வொரு காரியத்திற்கம் ஒவ்வொரு வித மணி! மணி சப்தம் கேட்டால் அது எதற்காக அடிக்கப்படுகிறதென்று ஊர் ஜனங்கள் பளிச்சென சொல்லி விடுவார்கள். அத்தனைக்கு எல்லோருக்கும் அத்துபடி.*

*இந்த மணியை அடிப்பது அந்தோணி.*

*மணியடித்தல், கோவிலைச் சுத்தம் செய்தல், பூஜை சமயத்தில் உதவுதல் போன்றவைகள் அவனுடைய வேலைகள்.*

*கடந்த ஒரு வாரமாய் அந்த மணி செயலிழந்து இருக்கிறது. ரிப்பேர். என்று கோளாறு என்று கண்டு பிடிக்க முடியவில்லை.*

*அந்தோணி, சங்கிலியோ முறுக்கிக் கொண்டிருக்கும் என்று தன் பலத்தை பிரயோகித்துப் பார்த்தான். பலனில்லை. மாறாக அது கான்கிரீட்டை பியர்த்துக் கொண்டு அந்தரத்தில் நிற்கிறது.*

*மணி எப்போது யார் தலையில் விழும் என்று சொல்ல முடியாத நிலை. ஸ்கூல் பிள்ளைகள் அந்தப் பக்கம் எப்போதும் சஞ்சரிப்பார்கள். விளையாடுவார்கள்,*

*பூஜைக்காகவும் பாதிரியாரைக் காணவும் ஊர் ஜனங்களும் வருவார்கள். அப்படியிருக்கும் போது மணி அந்தரங்கத்தில் இருப்பது ஆபத்தல்லவா...?*

*பாதரியாரும் அதை சரிபண்ண பெரிதும் முயற்சி எடுததுப் பார்த்தார். முடியவில்லை. அத்தனை உயரத்தில் மணியை எப்படிக் கட்டினார்கள் தெரியாது. இப்போது ஏறி சரிபண்ணுவதிற்கு ஆள் இல்லை.*

*அதைச் சரிபண்ண வேண்டும் என்றால் கீழேயிருந்தே சாரம் கட்ட வேண்டும். முந்நூறு அடி உயரத்திற்கு சாரம் கட்டவேண்டும் என்றால் ஆயிரக்கணக்கில் கேட்கிறார்கள்.*

*ஆயிரமாயிரமாய் கொடுப்பதிற்கு சர்ச்சில் நிதி வசதியில்லை. கடந்த இரண்டு மூன்று வருடங்களாய் பருவமழை தவறியாதால் ஊரிலும் பஞ்சம் எவரிடமும் போய் கேட்கவும் முடியாது.*

*ஆனாலும் அதைச் சரி பண்ணியேயோக வேண்டும். அதுதான் அவருடைய வருத்தத்திற்குக் காரணம்.*

*அந்தோணி பாதிரியாருக்காக அலுவலகத்தில் காத்துக கொண்டிருந்தான். அவனுடைய சகோதரிக்கு இது பிரசவ நேரம். ஆஸ்பத்திரியில் அட்மின் பண்ணியிருந்தான். அவளுக்கு ஆபரேஷன் நடந்து வேண்டி வரும் என்று டாக்டர் சொல்லிவிட்டா. அதற்கு குறைந்தது ஐநூறு ரூபாயாவது வேண்டி வரும்.*

*ஐநூறுக்கு எங்கேப் போவது.? சம்பளமே இருநூறு தான்! இது இன்னும் இரண்டு தங்கைகள். சீக்கான அம்மா! சாப்பாடு, துணி மணிகள். பாதிரியார் புண்ணியத்தில் எப்படியோ வண்டி ஓடுகிறது.*

*பாதிரியார் நல்லவர். பிறர்துன்பம் பொறுக்காதவர். கையில் காசிருந்தால் உடனே உதவி பண்ணி விடுவார்.*

*உதவி பண்ணுவார் என்பதற்காக திரும்பத் திரும்ப அவரிடம் போய் எப்படி கேட்க முடியும்...?*

*அவன் யோசனையுடன் நின்றிருந்தான்.*

*பாதிரியார் உள்ளே நுழைந்தார். ‘‘அந்தோணி நீ இன்னும் போகலே...?‘‘*

*‘‘இல்லை சாமி‘‘ என்று தலை சொறிந்தான். தங்கையின் நிலையை மெல்ல எடுத்துச் சொன்னான்.*

*‘‘கர்த்தர் ஆசிர்வாதம் உனக்கு என்றைக்கும் உண்டு. உன் சகோதரிக்கு எந்த ஆபத்தும் வராது. நீ போய்ட்டு வா.‘‘*

*‘‘அதுக்கில்லை சாமி. ஆபரேஷனுக்கு 500 ரூபாய் ஆகுமாம்.‘‘*

*‘‘இதோ பாருப்பா எங்கிட்ட காசில்லை. என் அக்கௌண்ட் நிலமைதான் உனக்கு தெரியுமே.*

*அவர் சொல்லிவிட்டு உள்ளே போனார். மனது கேட்காமல் திரும்பி விந்து சர்ச்சோட மணியை சரிபண்றதுக்கு பிஷப் 500 ரூபாய் ஒதுக்கியிருக்கார். கான்ட்ராக்ட்காரனோ*

*ரெண்டாயிரம் கேட்கிறான். நான் அதுக்கே என்ன பண்றதுன்னு தெரியாம தவிச்சுகிட்டிருக்கேன்.“*

*பதிரியார் சர்ச்சுக்கு கிளம்பினார். அங்கு போய் மண்டியிட்டு பிரார்த்தனையி மூழ்கிப் போனார்.*

*அந்தோணிக்கு ஏமாற்றம். இருந்த ஒரே நம்பிக்கையும் போயிற்று. இனி யாரிடம் சென்று கையேந்துவது? சோகத்துடன் தோட்டத்தில் புல்வெட்டினான். தண்ணீர் தெளித்தான்.*

*வேலை முடிந்து முகம் கழுவின போது அவன் மூளையில் ஒரு மின்னல். கோவில் மணியைச் சரி பண்ணுவதற்கு ஐநூறு ரூபாய்!*

*ஐநூறு! அதை நாமே சரிபண்ணினால் என்ன? பணத்திற்கப் பணம்! மணியின் ஆபத்தையும் போக்கின மாதிரி இருக்குமே!*

*பாதிரியார் பிரார்த்தனை முடிந்து வெளியே வந்ததும் சொன்னான்.*

*“அந்தோணி நீயா? உன்னால முடியுமா?“*

*“முடியும் சாமி...“*

*“எப்படிப்பா...மணி என்ன கொஞ்ச உயரத்திலா இருக்கு.“*

*“இது எப்படி சாத்யம்?“*

*“அதெல்லாம் நான் ஏறுவேன் சாமி. சின்ன பிள்ளையில ஏறியிருக்கேன்.“*

*“அது அப்போ விளையாட்டா ஏறியிருப்பே. இப்போ முடியுமா...?“ தடுத்தார். “சொன்னா கேள் தப்பித் தவறி விழுந்தா எலும்பு கூட மிஞ்சாது.“*

*“நான் விழுமாட்டேன் சாமி..“*

*“ம்கூம். நான் அனுமதிக்க மாட்டேன். காசு போனாலும் பரவாயில்லை. நீ வேண்டும். “ அவர் உறுதியாய் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.*

*அந்தோணியின் மனதில் வைராக்கியம் தோன்றியது. அவன் முதன் முதலில் பாதிரியாரின் பேச்சை மீறினான். மணியை அண்ணந்து பார்த்தான். கட்ணகள் சூரிய ஒளியில் கூசின. தங்கை கண்முன் தோன்றினாள். அவள் படும் வேதனை அவளையே, நம்பியிருக்கும் குழந்தைகள், அவள் கணவன், “அண்ணா என் குழந்தைகளை காப்பத்துண்ணா!“*

*“சாமி! நீங்க பணம் தரவேண்டா“ என்று முணுமுணுத்தான்.*

*“எது எப்படியானாலும சரி, அந்த மணியை நான் சரி பண்ணத்தான் போகிறேன். அந்தப் புண்ணியத் திற்காகவாவது மாதா எம்மேல் கருணை வச்சு என் தங்கையை காப்பாத்தட்டும்.“*

*மளமளவென ஏற ஆரம்பித்தான். அதற்குள் யாரோ பார்த்து பாதிரியாருக்குத் தகவல் போயிற்று. அவர் ஓடி வந்து "ஏய்! அந்தோணி சொன்னாக் கேள். வேண்டாம் வேண்டாம்."*

*அவர் கத்த கத்த அவன் மேலே ஏறினான். அவனிடம் ஒரு ஆவேசம் வந்திருந்தது. அவன் தனைமீறிப் போவதைக் கண்டு பாதிரியார் கைகளைப் பிசைந்தார்.*

*"முரட்டு பயலே... ! ஏண்டா உனக்கு இந்த விபரீதம்...?"*

*அவர் அங்கேயே முழுங்காலிட்டுப் பிரார்த்தனை பண்ண ஆரம்பித்தார். விபரம் அறிந்து ஊர் திரள ஆரம்பித்தது. அண்ணாந்து பார்த்து வியந்தது, பயந்தது.*

*அவனுக்கு மூச்சு வாங்கிற்று. கை கால்கள் நடுங்கின. அசந்துப் போய் வந்து. அப்படியே கட்டி அணைத்தபடி நின்றான். கீழே பார்த்தான்.*

*ஜனங்கள் பூச்சியாய்த் தெரிந்தார்கள். ஸ்கூல் பிள்ளைகள் விளையாட்டை நிறுத்திவிட்டு ஓடிவருவது தெரிந்தது. அவனுக்கு வியர்த்தது. தங்கையின் வேதனை அவனை உசுப்பிற்று. அப்படியே நின்றால் மலைப்பாய் இருக்கும் போலிருந்தது.*

*இன்னும் கொஞ்சம்தான் இதோ உச்சிக்குப் போய் விட்டான். மணிக்கூண்டு பக்கத்தில் விசாலமாய் இடமிருந்தது. அங்கு அமர்ந்து மூச்சு வாங்கினான். கீழே பிள்ளைகள் கரகோஷிப்பது கேட்டது. அதுவே அவனுக்கு உற்சாகத்தைத் தந்தது.*

*அந்தோணி மணியை ஆராய்ந்தான். அது கொக்கியிலலிருநது விடுபட்டிருக்க 'தம்' கட்டி தூக்கிச் செருகினான். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் ஆட்டிப் பார்த்தான். சரியாய் செயல்பட்டது. ஒருமணிநேரம் கழித்து இறங்க ஆரம்பித்தான. பாதிரியாருக்கு சந்தோஷ மாயிருந்தது. திருப்தியாகவும்.*

*அவனுக்கும் மனதிற்குள் இனம்புரியாத ஒரு சுகம் தங்கைக்கு பிரசவம் நல்ல படியாக நடக்கும் என்று தோன்றியது. அவளடைய வேதனையை இவன் சுமந்து விட்டதாய் பிரமை.*

*பதி இறங்கும் போது ஜனங்களும் பிள்ளைகளும் ஆர்ப்பரிக்க ஆரம்பித்தனர். அவனுடைய கஷ்டமெல்லாம் பறந்து போன மாதிரி இருந்தது.*

*அப்படியே சந்தோஷத்துடன் இறங்கினவன் கால் இடறி பேலன்ஸ் தவறினான். கன்ட்ரோல் பண்ண முடியாமல் சறுக்கிக் கொண்டே வந்து, எகிறி அத்தனை உயரத்திலிருந்து "அம்மா" என்று மணியின் சங்கிலியை பிடித்துக் கொண்டு விழுந்தான்.*

*விழுந்த வேகத்தில் அவன் தலை அடிபட்டு அந்தோணி அங்கேயே...*

*அவன் சரி பண்ணின மணி –*

*அவன் பற்றிக்கொண்டு விழுந்த வேகத்தில் 'டிங்டாங்' என்று அடித்து அவனுடைய சாவை ஊருக்கு அறிவித்தது.*

## *15. கூடாது*

*"ஏய்.. குடா."*

*"முடியாது!"*

*"இப்போ கொடுக்க போறியா இல்லியா நீ..?" குளித்துவிட்டு முடியை ஒதுக்கிக் கொண்டிருந்த கன்யா சீப்பை தன் உச்சி தலையில் உட்கார வைத்துவிட்டு திரும்பினாள். "மரியாதையாய் கொடுத்திரு!"*

*"போடி! உகனக்கென்ன மரியதை!" அவளது தம்பியும் எட்டாங்கிளாஸ் படிப்பவனுமாகிய விஷ்ணு வைக்கிள் சாவியை கண்ணுக்கு நேரே ஜாலம் காட்டி இடுப்பை வளைத்து ஆட்டம் போட்டான்.*

*அந்த ஆடடத்தில் ஒரு இறுமாப்பிருந்தது. உன்னால் என்ன செய்ய முடியும் என்கிற எகத்தாளம். போதும் போதாதிற்கு விசில் வேறு!*

*கன்யாவிற்கு அதற்கு மேலும் பொறுமையில்லை. உட்கார்ந்திருந்த ஸ்டூலை ஒதே தள்ளாய்க் தள்ளிவிட்டு எழுந்தாள். முடியை அள்ளி முதுகில் பரப்பிட்டுவிட்டு நாலே தப்படியில் தம்பியைப் பிடிக்க முனைய. அதற்குள் அவன் ஹாலை விட்டு வாசலுக்குள் போயிருந்தான்.*

*அவள் வாசலுக்கு ஒட, அந்தப்பாக்கம் போக்கு காட்டிவிட்டு அறைக்குள் ஒடிவந்து கொடிக் கயிற்றிலிருந்து சட்டையை எடுத்துத் திணிப்பதிற்குள்ளேயே பிடித்துக் கொண்டாள்.*

*"விஷ்ணு விளையாடாதே!"*

*"உன்கிட்ட எனக்கென்ன விளையாட்டு" என்று சாவியை உள்ளங்கையில் வைத்து கெட்டியாய் மூடிக் கொண்டான்.*

*அவளுக்கு அவனது விரல்களை விடுவிக்கவே முடியவில்லை. "சரியான காட்டான்! கையை இது மரக்கட்டை!"*

*"நா மரக்கட்டைன்னா நீ மரவட்டை!" என்று உதறிக் கொண்டு ஓடினவனை வீட்டிற்குள்ளேயே துரத்தினாள். ஒரு மூலையில் மாட்டிட்க கொண்டவள் இனியும் அக்காவிடமிருந்து தப்பிக்க முடியாது என்று தோன்றவே" தந்திர்றேன் நகரு."*

*"தா!" என்று மார்பு விம்ம மூச்சு வாங்டகனாள். கழுத்து வியர்வையை துடைத்துக் கொண்டாள்.*

*"முதலில் நகரு!"*

*"சீக்கிரம் கொடுடா ரிகார்ட் எழுதணும்."*

*"இந்தா" என்று நீட்டினான். அவள் கப்பென்று பிடுங்க முனையவே கையை உள்வாங்கிக் கொண்டு, "ஏமாந்தியா! ஏமாந்தியா!"*

“விஷ்ணு! எனக்கு கெட்ட கோபம் வரும்.“

“கெட்டவங்க்ளுக்கு கெட்ட கோபம்தான் வரும்.‘‘

“அப்பாட்ட சொல்வேண்டா!“

“சொல்லேன். உனக்கு அப்பா சப்போர்ட்டுன்னா எனக்கு அம்மா!“

“சீ! குடுடா!“

“இந்தா.“ என்று திரும்ப நீட்டிவிட்டு, அவள் நெருங்கவே குனிந்து, நிமிர்ந்து. இடது, வலாது, மேலே, கீழே என போக்குக் காட்டி வெறுப்பேற்றினான். கடைசியில் பைக்கென வாயில் போட்டுக் கொண்டு “இந்தா இந்தா“ என்று வெறும் கையை மூடிக்கொண்டு நீட்ட அவளுக்குக் கோபம் அதிகமாயிற்று.

“உனக்கு அவ்ளோ திமிரா?“ என்று பளாரென அறைந்தாள்.

அவனும் சும்மாயிருக்காமல் அவளை அறைந்து, அவள் பதிலுக்கு அறைந்து, அவன் அவளது முடியைப் பிடித்து இழுக்க-

“ஆ.. அம்மா!“ என்று அவள் முழுங்கால் போட்டுக் கொண்டு குனிந்த நேரத்தில் அம்மா காய்கறிப் பையுடன்உள்ளே பிரவேசித்தாள்.

“ஏய் என்னடி இங்கே ரகளே!“

“ரகளை நானா பண்றேன்? எல்லாம் உன் சீமந்திரபுத்திரன்தான்! என் முடியைப் பிடித்து இழுத்து என்று சொல்லி முடிப்பதிற்குள் கன்யாவின் கண்கள் கலங்கிப் போயின. தலையில் வின்வின்!

“விஷ்ணு!“

“எங்கிட்ட வம்புக்கு வந்தால் அப்படித்தான் இழுப்பேன்!‘

“யாரா உங்கிட்ட வந்தது. நான் மரியாதையாய்த் தானே தானே கேட்டேன். தர வேண்டியதுதானே?“

“கேட்டதும் உடனே தந்துவிட வேண்டுமா? சைக்கிள் உனக்கு மட்டும்தான் சொந்தமா...? எனக்கும்தான்!“ என்று பலிப்புக் காட்டிவிட்டு. “எங்கிட்ட மோதாதே...“ என்று பாட ஆரம்பிக்க ஆத்திரம் தாங்காமல் பவுடர் டப்பாவையும் சீப்பையும் அவன் மேல் விட்டெறிந்தாள்.

“..ம்கும்!. எம்மேல பட்டதா.. எம்மேல பட்டதா.. !“

“பாரும்மா அவனை!“

அவன்தான் இனம் தெரியமல் நடந்துக்கிறான்னா, காலேஜ் போகிற உனக்கு கூடவாடி தெரியலே?“

“ஆமா! ஆச் ஊச்சுன்னா உடனே காலேஜ் பொட்டைப் பிள்ளைன்னு எம்மேல தான் பாய்வீங்க!“

“ஆமா பொட்டப்புள்ளை நீதான் அனுசரித்துப போகனும்!“

''நான் எதுக்கு அனுசரிக்கணும்?''

''அவன் உன் தம்பி இல்லையாடி!''

''தம்பியா அவன். எமன். எனக்கு கெட்ட பெய்ர் வாங்கித் தரதுகருன்னே அவதரித்தவன்.''

அதற்குள் விஷ்ணு செருப்பை மாட்டிக் கொண்டு ''நான் வரேம்மா! வரேண்டி, உன்னை வந்து கவனிச்சுக்கிறேன்'' என்று சைக்கிளில் தொற்றினான்.

''அவனது திமிரைப் பார்த்தியாம்மா... எல்லாம் நீ கொடுக்கிற இடம்.''

''சின்ன பையன்தானே போனாப் போகட்டுமே! உனக்கெதற்கு சைக்கிள்?''

''லைப்ரரி போகணும். நோட்ஸ் எடுக்கணும்!''

''இதுக்கா இத்தனை சண்டை தெருக்கோயில இருக்கிற லைப்ரரிக்கு நடந்து போகக்கூடாதா நீ?''

''லைப்ரிக்கு நான் நடந்து போகணும். விளையாடப் போறவன் சைக்கிளில் போகணுமா? இது எந்த ஊர் நியாயம்.''

நியாயமெல்லாம் அப்புறம் கிடக்கட்டும. தலையைச் சீவிட்டு போய் தண்ணீர் எடுத்துவா.''

''முடியாது.''

''போடி அப்புறம் நின்னிரும்.''

''உன் செல்லப் புத்திரனையே போய் எடுத்து வரச்சொல்'' என்று அறைக்குள் போய் கதவை மூடிக்கொண்டான்.

அவர்களுக்குள் நடக்கும் புத்தம் யுத்தம் ஒன்றும் புதிதில்லை. விபரம் தெரிந்த நாள் முதலே இருவருக்கும் ஆகாது.

இரண்டு பேத்தையே சாமாளிக்க முடியல்லை. ஆறும் ஏழும் குழந்தைகள் உள்ளவர்கள் என்ன செய்வார்களோ? என்று தாய் சலித்துக கொள்வாள்.

இன்ன விஷயத்திற்குதான் அவர்களிடம் போர் மூளும் என்று சொல்ல முடியாது.

காலையில் எழுந்ததுமே டாய்லெட்டிற்கு போராட்டம். கன்யா பல்விளக்கிக் கொண்டிருக்கும் போதே விஷ்ணு ஓடிப்போய் கதவை மூடிக்கொள்வான் என்னப் பண்ணுவானோத் தெரியாது. அரைமணி நேரம் தபஸிற்குப் பிறகுதான் வெளியே வருவான்.

ப்றகு பேனா, பென்சில் தகறார். சாப்பிடுவதில்! கிளம்புவதில் டிபன்பாக்ஸில்! செருப்பு! ராத்திரி டி.வியிலும் கூட பிரச்னை. கன்யா முதல் அலைவரிசை என்றால் அவன் இரண்டாவது அலைவரிசையை வேண்டுமென்று போடுவான்.

''ஏய் நியூஸ்டா... !''

''சரியான நியூஸென்ஸ்! மெட்ரோ பார்க்கலாம்!''

*“பெரிய மெட்ரோ! சினிமா சினிமான்னு உயிரை எடுக்கறான்!“*

*“நீ சினிமாவே பார்க்கமாட்டியாமே...?“*

*“பார்ப்பேன் அதுக்காக இருபத்து நான்கு மணிநேரமும் அதேதானா?“*

*இரண்டு பேருமே விட்டுக்கொடுக்காமல், அப்பா கோபப்பட்டு டி.வி.யை நிறுத்த வேண்டிவரும். பெருமபாலான சமயங்களில் தவறு விஷ்ணு வினுடையதாய் தானிருக்கும். ஆனாலும் அவன் கடைகுட்டி விபரம் தெரியாதவன் என்கிற போர்வை போர்த்தி கன்யாவிற்கே திட்டு கிடைக்கும்.*

*பெண்பிள்ளை அடக்க ஒடுக்கமாய் இருக்க வேண்டும். விட்டுக்கொடுததுப் போகவேண்டும் என் உபதேசங்கள் கிளம்பும். கண்டிப்பும் தண்டிப்பும் அவளுக்கு மட்டும தான்.*

*விஷ்ணுவிற்கு அதுவே லைசென்ஸ் கொடுததது போலாகி விடும். தான் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று அவளை சீட்டிக் கொண்டேயிருப்பான்.*

*அன்று-*

*அப்பாவும் அம்மாவும் அவசரமாய் வெளியூருக்கு கிளம்பிக் கொண்டிருந்தனர்.*
*நெருங்கிய உறவுக்காரர் தவறிவிட்டதாய்த் தகவல் வர அதற்குத்தான் அந்தப் புறப்பாடு.*

*“ஏய் பசங்களா... போய்ட்டு ரெண்டு நாள்ல திரும்பிடறோம். வீட்டை பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்.“*

*“சரிப்பா!“*

*“வீட்டை பார்த்துக கொள்வது இருக்கட்டும். ஒருத்தருக்கொருததர் அடிச்சுக்காம இருப்பீங்களா?“*

*“உன் பிள்ளையாண்டான்ட்ட நல்லா சொல்லிவிட்டு போ!“*

*“ஏன் நான் தான் இளிச்சவாயனா?“*

*“ஏய்! போதும் போதும். இப்பரே ஆரம்பிச்சிராதீங்க!“ என்று தாய் பதறுவாள். “இதுங்களை நம்பி எப்படி விட்டுட்டுப் போறது! பேசாம நீங்க மட்டும் போயிட்டு வந்திருங்களேன்!“*

*“அதெல்லாம் பார்த்தால் முடியுமா நீயும் வரலென்னா நல்லா இருக்காது. வாப் போவோம்!“*

*இருவரும் கிளம்பிப் போய் அரை நாளிற்கு எந்தப் பிரச்சனையுமில்லை. உடன்பிறப்பு இருவரும் ஒன்றாய் சாப்பிட்டனர். செஸ் விளையாண்டனர்.*

*“பத்து மணிக்கு விஷ்ணு நான் சினிமாவிற்கு போறேன்க்கா“ என்றது பிரச்சனை ஆரம்பமாயிற்று. அவள் மறுக்க அவன் மீற, கன்யா டவல் எடுத்துக் கொண்டு பர்ஸையும் எடுத்துக் கொண்டு பாத்ரூமிற்குள் போய் கதவை மூடிக் கொண்டாள்.*

*தன்னை விடாத அக்காவை எப்படி பழி தீர்க்க வேண்டும் என்று விஷ்ணு தருணம் பார்த்துக கொண்டிருந்தபோது தான் – அடுத தெருவிலிருந்து பாஸ்கரன் வந்தார்.*

*அவர் அப்பாவின் அலுவலகத்தில் வேலை செய்பவர் சற்று சபலக்கார்.*

*“விஷ்ணு! அப்பாயில்லை...“*

*“இல்லை ஊருக்குப் போயிருக்கார்.“*

*“அம்மா.“*

*“அம்மாவும்தான். “ என்று வீட்டு ஜன்னலை வெறிக்க ஆரம்பித்தான்.*

*“ஏண்டா அம்பி ஒரு மாதிரி இருக்கே.“*

*“எல்லாம் அக்காவாலதான்.“*

*“அக்காவிற்கு என்னவாம்.“*

*“திமிர்பிடிச்சவள். பொறாமைக்காரி. ராங்கிக்காரி. பாருங்க அங்க்கிள். சினிமாவுக்கு போகணும்னு சொல்லவே காசை எடுதது வச்சுக்கிட்டா.“*

*“அக்கா தானேப்பா அட்ஜஸ்ட் பண்ணிக்கோயேன்.“*

*“அக்காவா இவள் சண்டாளி. அவளை நான் வீழ்த்தணும்.“*

*“எப்படி?“*

*“எப்படியாவது, எந்த வழியிலாவது அவளை அழவைக்கணும்.“*

*அப்போது கன்யாவிற்குச் சோதனையான நேரம் போலும். டாங்கில் தண்ணீர் நின்று போக.*

*“ஏய் விஷ்ணு மோட்டரைப் போடு.“ என்று கத்தினாள்.*

*“முடியாது.“*

*“கண் எரியுதுடா.“*

*“எரியட்டும். நன்றாக எரியட்டும்.“*

*“ப்ளீஸ்டா.“*

*பாஸ்கரன், “நான் வேணுமானால் மோட்டார் போடட்டுமாப்பா“ என்க. “வேண்டாம் அங்க்கிள்! நீங்க சும்மா இருங்க!“ என்று தடுத்தான்.*

*கடைசியில் கெஞ்சிக் கெஞ்சிப் பார்த்து முடியாமல் போகவே கன்யா டவலை சுற்றிக் கொண்டு வெளியே வந்து மோட்டர் போட்டு செல்ல-*

*அவளின் அரைகுறை ஆடையையும், தழுதழு உடலையும் பார்த்த பாஸ்கரனிற்கு உணர்ச்சிகள் துளிர்விட ஆரம்பித்தது. உடலில் ஜிவ்வென ரத்தம் பாய்ந்தது.*

*வீட்டில் யாருமில்லை. இருக்கிற தம்பியும் சினிமாவிற்காக தவமிருப்பவன். இவன் எப்படியாவது அனுப்பிட்டால்...அனுப்பிவிட்டால் கன்யாவை டாய்லட்டில் வைத்தே...*

*யாருக்குத் தெரியப் போகிறது?*

*அவளாக வெளியே சொல்ல முடியாது. அது அவளுக்குத்தான் அவமானம்! நிச்சயம் சொல்லமாட்டாள். மறைத்து விடுவாள்.*

*சிந்தை சிதிலமடைந்தது. கண்ணாபின்னாவென்று ஓட ஆரம்பித்தது.*

*“விஷ்ணு நீ படத்துக்குத் தானே போகணும்.“*

*“ஆமாம்.“*

*“என்ன படம்...?“*

*“ரஜினி.“*

*“போயிட்டு வா. உங்கக்காட்ட நான் சொல்லிக்கொள்கிறேன்.“*

*“பணம்.“*

*“இந்தா. வாங்கிட்டு ஜாலியாய்ப் போயிட்டு வா.“*

*“வேணாம் அங்க்கிள். அப்பா வந்ததும் வத்தி வைப்பாள்.*

*“அதெல்லாம் நான் பார்த்துககொள்கிறேன், கிளம்பு“*

*விஷ்ணு வேறு எதுபற்றியும் யோசிக்கவில்லை. அவனுக்கு யோசிக்கத் தோன்றவில்லை. அவனுடைய சிந்தையெல்லாம் சினிமாவின் மேலேயேயிருந்தது. ரஜினி! அவரது ஸ்டேயில்! சண்டை!*

*‘தலைவா! இதோ வருகிறேன். ‘மணி பார்த்தான் பத்து பத்து! இந்நேரம் படம் ஆரம்பித்திருப்பான். ‘ஓடு. சீக்கிரம் ஓடு!‘*

*சைக்கிளை எடுத்தான்.*

*பறந்தான்.*

*மூச்சிறைக்க டோக்கன் வாங்கி, டிக்கட் வாங்கி தியேட்டருககுள் பிரவேசித்த போது படம் ஓடிக்கொண்டிருந்தது. கண்களை இருட்டு கவ்விற்று. கண்கள் பழக்கப்படும்வரை இப்படியே ஓரமாய் நின்று பார்ப்போம் என்று நின்று கொண்டான்.*

*திரையில்-*

*குடிசை ஒன்றில் பெண் ஒருத்தி அலறிக் கொண்டிருந்தாள். பதினறு வயது மதிக்கத் தக்க அவளை வில்லன் குடித்துவிட்டு வந்து கற்பழிக்க முனைய. அவள் எதிர்த்துத் தோற்று அலற-*

*அந்த அலறல் கேட்டு அவளது தம்பி ஓடிவந்து, அதிர்ந்து வில்லனை எதிர்க்க முனைந்து, முடியாமல் போகவே அழுது கடைசியில் வேறு வழியில்மல் கையில் கிடைத்த கல்லெடுத்து வில்லனின் மண்டையைக் குறிபார்த்து எறிய-*

*வில்லன் ரத்தம் சிந்தி “அம்மா“ எனத் தலையை பிடித்துக கொண்டு சரிய, தியேட்டரில் பெருத்த விசில் சத்தம் கைதட்டல். (இருக்காதாப் பின்னே அந்த பையன் தானே பின்னால் ரஜினியாய் வளரப் போகிறான்!).*

*ரசிகர்கள் ஆர்ப்பரிக்க, திரையில் எழுத்து ஒட ஆரம்பித்தது. அதுவரை நின்று பார்த்துக் கொண்டிருந்த விஷ்ணுவிற்கு ஏனோ அந்தக் காட்சிகளை ரசிக்க முடீயவில்லை. மனதிற்குள் ஏதோ ஒரு உறுத்தல்.*

*தப்பு செய்துவிட்ட பாவனை. படத்தில் கவனம் போகவில்லை. கன்யாவின் ஞாபகம் வந்தது. தொடர்ந்து பாஸ்கரன்!*

*அந்தாள் மோசமானவன் என்று குடித்துவிட்டுப் பெண்களிடம் கலாட்டா செய்வான் என்றும் அவனும் எப்போதோ கேள்விப்பட்டிருந்தான்.*

*'வீட்டின் அப்பா அம்மா இல்லை. அக்கா மட்டும் தனியாய் இருக்கிறாள். அப்படியிருக்கும் போது அந்தாளை வீட்டில் வைத்துவீட்டு வந்திருக்கலாமா? அது ஆபத்தில்லையா?*

*உள்ளுணர்வு உணர்த்த. சட்டென கதவைத் திறந்துக் கொண்டு வெளியே பாய்ந்தான். சைக்கிளை எடுக்க ''ஏய் தம்பி படம் பார்க்கலே.''*

*''இல்லை.''*

*''டோக்கன் எங்கே...?''*

*''இந்தா!'' என்று விசிறிவிட்ட வேகவேகமாய் மிதித்து வீட்டை அடைந்தபோது. எது நடக்கக் கூடாது என்று பயந்தானோ அதை நடத்திவிட பாஸ்கரனும் துடிப்பதும், அறைக்குள்ளிருந்து அக்காள் அலறுவதும் கேட்டது.*

*அந்த அலறல் அவனுக்குள் ஆவேசத்தைக் கிளப்பிற்று. சைக்கிளை போட்டுவிட்டு கதவை இடித்து பார்த்தான். உள்பக்கம் தாழிடப்பட்டிருந்தது.*

*''அக்கா! அக்கா!'' என்று கத்திக்கொண்டு வீட்டைச்சுற்றி வந்தான். ஜன்னலை இடிக்க திறந்துக் கொண்டது.*

*உள்ளே – கன்யா பாதி ஆடை கிழிந்த நிலையில் போராடிக் கொண்டிருக்க, பாஸ்கரன் மிருகமாய் அவள் மேல் கவிழ முயல அதைப்பார்க்கப் பார்க்க விஷ்ணுவின் ரத்தம் சூடாயிற்று ''அங்க்கிள்... அங்க்கிள்... ! அக்காவை விட்டிருங்க.''*

*''யாரு... விஷ்ணுவா... நீ கண்டிக்காம போயிரு!''*

*''முடியாது. அவளை மரியாதையாய் விட்டுவிடுங்கள். இல்லையென்றால்.''*

*‘‘சர்தான் போடா! உன்னால்தான் இவளை ஜெயிக்க முடியலை பழி வாங்க முடீயலை நான் ஜெயிக்கறேன். பழிவாங்கறேன். டிஸ்டர்ப் பண்ணாமல் போயிருப்பா!‘‘*

*‘‘பழியா... அக்காவையா....நீயா...? அவனுக்கு கப்னெ வியர்த்து எங்களுக்குள் ஆயிரம் இருக்கும். நாங்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொள்வோம். யுத்தம் நடத்துவோம். அது எங்களுக்குள் நடக்கும் உரிமை. எங்களது விளையாட்டு, நாங்கள் ஓரே ரத்தம். உடன்பிறப்புகளுக்குள். எத்தனையோ இருக்கும். எத்தனையோ போட்டி, பொறாமையிருககும்.*

*அதற்காக...*

*அதற்காக? எங்களது மனஸ்தாபத்தை பயன்படுத்தி அந்நியன் ஒருவன் அக்காவை பழிவாங்குவதா. அதற்கு நானும் உடந்தையாக இருப்பதா...*

*கூடாது!*

*அவன் ஒரு முடிவிற்கு வந்தான் ஜன்னல் அசைத்துப பார்த்தான். முடியவில்லை உள்ளே கன்யாவின் கோலமுமம அலறலும் மனதை கசக்கி பிழிய – தெருப் பக்கம் திரும்பிப் பார்த்தான்.*

*அங்கே கொட்டிக்கிடந்த சரளைக் கற்கள் அவனது கவனத்தை ஈர்த்தன. சட்டேன குனிந்தான். எடுத்தான். ஜன்னல் வழி ஆவேசத்துடன் பாஸ்கரனின் தலையை குறிவைத்தான்.*

*அவனது குறி தப்பவில்லை, பாஸ்கரன் ரத்த்துடன் சரிய கன்யா, ‘‘தம்பி!‘‘ என்று கண்களாலும் வார்த்தைகளாலும் நன்றி பொங்கினாள்.*

## *16. வானத்தைத் தொட்டவன்*

*ஐந்து வருங்கள் நாயாய் பேயாய் அலைந்து நம்பிக்கையிழந்து கடைசியில் வேலை கிடைத்திருக்கிற தென்றல் யாருக்குத்தான் சந்தோஷமாய் இருக்காது?*

*பூரிப்பும் எழும். மனது இன்சாட் விடும் தெய்வத்தின் முன்புபோய் நின்று அழத்தோன்றும் சந்தோஷ அழுகை!*

*அப்பா! இனிமேல் நீங்கள் கவலைப்பட வேண்டாம். தள்ளாடித்தள்ளாடி கணக்கெழுதப் போக வேண்டாம் அம்மா! நீ அரிசிக்கும் பருப்பிற்கும் அலைய வேண்டாம். உன் உடம்பை கவனித்துக கொள். டானிக் வாங்கித் தருகிறேன். நல்ல டாக்டரிடம் அழைத்துப் போகிறேன். லலிதா கண்ணு. உனக்கு புது தாவணி!*

*இப்படியெல்லாம் நானும் கூட சந்தோஷப் பட்டவன்தான். வானத்தைத் தொட்டவன் தான். ஆனால் அது ஒரு மாதம்கூட நிலைக்கவில்லை.*

*இங்கே வேலை என்பது மனிதனின் தகுதியை நிர்ணயிக்கிற வஸ்து. அந்தஸ்து தரும் மாத்திரை.*

*அது எப்படி வேண்டுமானாலும் கிடைத்திருகலாம், சிபாரிசில், பணம் கொடுதது, அல்லது அபூர்வமாய் மெரிட்டிலேயேக் கூட! எனக்கு மெரிட் இழுத்தும் கூட சிபாரிசை நாட வேண்டியிருந்தது.*

*படிக்கிற காலத்தில் வலஞ்சம் – ஊழல் மேடையில் வெளுத்து கட்டியிருக்கிறேன், கைதட்டல் பெற்றிருக்கிறேன். சிபாரிசு எனும் சொல்லையே வெறுத்திருக்கிறேன்.*

*ஆனால் அவற்றையெல்ல்ம் வயிறும், காலமும் தோறகடித்து விட்டது. அப்பாவிடம் கூட சிபாரிசை எதிர்த்துப பார்த்தேன். முடியவில்லை.*

*“குடும்பம் வாழ வேலை வேண்டும். வேலைக்கு சிபாரிசு அவசியம். சிபாரிசுக்கு நீ போகலை என்றால் நஷ்டம் சிபாரி செய்யும் நபருக்கில்லை. நீ இல்லையென்றால் இன்னும் ஆயிரம் பேர!“*

*“இருக்கலாம்ப்பா, என் மனசாட்சி அதற்கு இடம் கொடுக்கவில்லை.“*

*“முதலில் வயிறு மற்றதெல்லாம் அப்புறம்படன! ரவி... ! நான் சொல்வதைக் கேள். விதாண்டாவிதம் பண்ணாமல் அந்த அப்பாதுரையை போய் பார்!“*

*அப்பாதுரை பார்வைக்கு முரடாயிருந்தாலும் கனிவாய் பேசினார். “ரவிக்குமார்... ! உன் திறமையென்ன, குணாதிசயம் என்ன என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும் கூட உங்கப்ப அந்த நாளில் என் குடும்பத்திற்கு செய்த உதவிக்காக எம்.டி.யிடம் சொல்லி வேலைக்கு ஏற்பாடு பண்ணித் தருகிறேன்.“*

*“ரொம்ப நன்றி சார்!.“*

*அன்று அவர் தெய்வமாகத் தெரிந்தார்.*

*முதல் சம்பளம் பெற்றதும் ஸ்வீட்டுடன் அப்பாவின் காலில் விழ, ‘‘அப்பாதுரையை போய் பார்த்தாயா..?‘‘ என்று விரட்டினார்.*

*‘‘இல்லேப்பா. என்ன விஷயம்?‘‘*

*‘‘மதியம் கடைவீதியில் எதேச்சையாய்ச் சந்தித்தேன். உன்னை உடனே வந்து பார்க்கச் சொன்னார்.‘‘*

*‘‘பார்ப்பரேம்ப்பா. சுவீட் எடுததுககங்க.‘‘*

*‘‘முதலில் அவருக்கு கொட. அவர் தானே நம் குடும்பத்தின் ஒளிவிளக்கு.*

*விளக்கு வைக்கும் நேரத்தில் பழங்களும் ஸ்வீட்களும் வாங்கிக் கொண்டு அப்பாதுரைடியன் வீட்டை பயத்தோடும், மரியாதையோடும மிதித்தேன்.*

*அப்பாதுரை வாசலில் பேப்பருடன் ஈஸிசேரில் அமர்ந்து தொந்தியை சுரண்டிக் கொண்டிருந்தார். என்னைக் கவனித்து, ‘‘வாப்பா ரவி... உட்கார்!‘‘*

*நான் உட்காரும் முன்பே, ‘‘என்ன நீ..? உங்க செக்ஷன்ல பிரச்சனை பண்ணிகிட்டிருக்கியாமே... !‘‘*

*‘‘பிரச்சனையா...?‘‘*

*‘‘ஆமாம். ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்ஸ் பேசிறியாம். சக தொழிலாளர்களைத் தூண்டி விடுகிறியாம். உங்க மானேஜர் முத்துசாமி எம்.டி.கிட்டே புகார் பண்ணியிருக்கார்.‘‘*

*‘‘சார்... நான் எந்தத் தப்பும்...‘‘*

*‘‘லிசன் மி! எந்த வழி மறந்து போயிற்றா? உங்கப்ப வேண்டியவர்ங்கிறதுக்கா, எம்.டி.கிட்ட கெஞ்சி வேலை வாங்க் கொடுத்தேன். இப்போ, ‘‘எனனய்யா.. உன் ஆள் இப்படி பண்றானேன்னு அவர் கேட்கும் போது ஐ ஆம் டோட்டலி ஷாக்! உன் செயலால் எனக்கு தலைகுனிவு! ஒழுகாய் வந்தோமே... வேலையை பார்த்தோமா... போனோமான்னு இருக்க மாட்டாயா...?‘‘*

*என்னைப் பேசவிடாமல் பொரிந்து தள்ளினார். ‘‘உன் நோக்கம்தான் என்ன?‘‘*

*‘‘‘ஒர்க் ஸ்பாட்டுலே வெண்டிலேஷன் இல்லை. குடிக்க தண்ணி இல்லை. யூரினல் இல்லை. இந்த மாதிரி அடிப்படைத் தேவைகளைக்கூட கேட்கக் கூடாதா சார்...?‘‘*

*‘‘கேட்பது தவறில்லை. கேட்ட விதமும நபரும்தான் தவறு. அந்த முத்துசாமிக்கும் எனக்கும் நென்மழக்கலாம்னு பார்த்துககிட்டிருக்கான். அவனால் எங்கிட்ட நேராய் மோதமுடியாது. உண்டு இல்லைன்னு பண்ணிருவேன். என் பலம் அவனுக்குப் புரியும். ஆனாலும கூட கவிழ்க்கணும். அதற்காக உன்னை குறி வைத்திருக்கிறான்.*

*என் சிபாரிசில் வந்தவன் நீ என்பது அவனுக்கும் தெரியும். அதனால் உன்னை வைத்து மறைமுகமாய் என்னைத் தாக்க முனைகிறான். உன் தவறை பெரிதாக்கி எம்.டி.யிடம் நல்ல பெயர் சம்பாதிக்க பார்க்கிறான்.*

*எம்.டி.க்கும் எனக்குமிடையே விரிசல் ஏற்படுத்தும சதி, ஸோ, பி கேர்ஃபுல் ஆஃப் யுவர் வோர்ட்ஸ் அண்ட் ஒர்க்!‘‘*

*அப்பாதுரை இத்தனை கண்டிப்பார் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை கையில் இனிப்பு இருக்க, மனதில் கசப்பு.*

*எத்தனை ஆர்வமாய் வந்தேன்! எத்தனை குதூகலம்! எல்லாமே போச்சு! மனதை தேற்றிக் கொண்டு, "சார்... இன்றைக்கு என் முதல் சம்பளம் ஸ்வீட் கொண்டு வந்தேன்."*

*அவர் எதுக்கு இதெல்லாம் என்கிற மாதிரி பார்த்து, "வெச்சுட்டுப் போ!"*

*அதுவரை அவர் மேலிருந்த மபியாதையெல்லாம் நொடியில் உடைந்து போயிற்று. அங்கே நிற்கக் கூட பிடிக்கவில்லை. காலில் தயக்கம். நாக்கைப் பிடிங்கிக் கொள்ள வைக்கும் அவமானம்.*

*எல்லாம் என் நேரம்! என்ன செய்ய... வேலை வாங்கிக் கொடுத்த தெய்வமாயிற்றே! பார்சலை வைத்துவிட்டு விறுவிறுவென வந்துவிட்டேன்.*

*அதன்பின்பு வேலையில் பிடிப்பில்லை. முத்துசாமியைப் பார்க்க்றி போதெல்லாம் வெறுப்பாயிற்று. இப்படியும் ஒரு ஈனப் பிறவியா? என் மேல் தவறு கண்டால் அதை என்னிடம் தெரிவிக்காமல் எம்.டி. வரை கொண்டு போவது ஒருவகை குரூரம். கோழைத்தனம்.*

*முத்துசாமியின் கண்கள் என்னை ரொம்ப வட்டமிட ஆரும்பித்தன. எங்கெங்கு தொல்லை கொடுக்க முடியுமே அங்கெல்லாம் கொடுத்துக கொண்டிருந்தார்.*

*எல்லாவற்றையும் குடும்பத்திற்காகவும், அப்பாதுரைக்காகவும் பொறுத்துக் கொண்டேன். தன்மானம் எழுந்த போதெல்லாம் அடக்கினேன்.*

*எதற்கும் ஒரு எல்லை இருக்கிறதே. தன்மானம் எத்தனை நாட்களுக்குதான் அடங்கிக் கிடக்கும்?*

*அன்று-*

*அடைமழை. இடியும் மின்னலும் மின்சாரத்தைக் கொண்டுப் போக, மெஷின்கள் ஓடவில்லை. சரி, வேலையில்லாமல் எதற்காக மழையிலும குளிரிலும் நடுங்க வேண்டும் என்று அட்மின் பில்டிங்கில் ஒதுங்கின என்னை முத்துசாமி பிடித்துக் கொண்டார்.*

*"ஏய்.. ! வாட் ஆர் யு டூயிங் ஹியர்?"*

*"மழைகாகு ஒதுங்க அங்கே இடமில்லை சார்!"*

*"நோ... நோ... ! யு ஆர் நாட் சப்போஸ்ட்டு டு லீவ் யுவர் ஒர்க் ஸ்பாட்!"*

*"இந்தப் போய் மழையில் நாங்கள் எங்கேப் போக முடியும் சார்? எங்கள் மேல் கொஞ்சமேனும் கருணை காட்டுங்கள்!"*

*அவர் காட்டுவதாய்த் தெரியவில்லை, என்னை அகற்றுவதிலேயே குறியாயிருக்க, எனக்கு ஆவேசமாயிற்று.*

*"உங்களுக்கு மனிதத் தன்மையே கிடையாதா சார்...? தொழிலாளர்கள் மட்டும் மனிதர்கள் இல்லையா...? அவர்கள் என்ன ஆடு மாடுகளா? புரடெக்ஷன் நின்றால் மட்டும கேள்வி கேட்க தெரிகிறதில்லை....? அங்கே தொழிலாளிகள் நனைகிறார்களே,*

*அவர்களுக்கு அட்லீஸ்ட் ஒரு ஷெட்டாவது போட்டுத் தருவோம் என்கிற ஈரமில்லாமல் பேசுகிறீர்களே... உங்கள் பிள்ளையென்றால் இப்படி நனைய விடுவீர்களா...?"*

*எனக்கு என்னாயிற்று என்றே தெரியவில்லை. எத்தனை அடக்கியும்கூட கோபத்தை கட்டுப்படுத்த முடீயவில்லை. அடக்கி அடக்கி ஒரு லெவலுக்கு மேல் தாங்காமல் தன்மானம் வெடிக்கவே செய்தது.*

*எக்ஸ்ப்ளோஷன்!*

*அடுத்த இரண்டு மணி நேரத்தில் அப்பாதுரையிடமிருந்து எனக்கு அழைப்பு வரும் எனத் தெரியும்.*

*வந்தது.*

*யோசனையுடன் அவரைப் பார்க்கப் போனேன்.*

*"ஏன் இப்படிப் பேசினாய்.. உன்னால் எனக்கு அவமானம் – என் பெயரும் கெடுகிறது என்று திட்டுவார். என்னச் செய்ய. கேட்டுக் கொள்ளதான் வேண்டும். சிபாரிசு செய்தவராயிற்றே!*

*சிபாரிசில் வந்திருக்கவே கூடாது. அப்படி வந்தால் சுதந்திரம் பறிக்கப்படுகிறது. நல்லது கெட்டதைப் பேச தடை விதிக்கப்படுகிறது. அடிமையாய் நடத்தப்படுகிறது. நாக்கு பிடுங்கப்படுகிறது. குற்றம் சுமத்தப்படுகிறது.*

*ஒரு பைசா வாங்கிக் கொள்ளாமல் உனக்கு வேலை போட்டுக் கொடுத்தேனே... நீ இப்படி நடந்துக் கொள்ளலாமா என்றுக் கண்டிப்பார். கண்டிக்கட்டும்.*

*பணம் கொடுத்திருந்தால்- "நீ ஒன்றும் சும்மா வேலை வாங்கித் தரவில்லை. பணம் வாங்கிக் கொண்டுதானே" என்று திருப்பிக் கண்டிக்கலாம். ஆனால் இப்போது முடியாதே!*

*நன்றி விசுவாசத்திலும், நட்பிலும் தந்திருக்கிறார். அதுதான் பிரச்சனையே. எதிர்த்துப பேசமுடியாத அவஸ்தை. சித்ரவதை.*

*அவர்களுக்குள் ஆயிரம் துவேசங்கள் இருக்கலாம். பாலிடிக்ஸ் இருக்கலாம். அவற்றைத் தீர்த்துக் கொள்ள நான்தான் கிடைத்தேனா? நான் தொழிலாளியா இல்லை பகடைக்காயா...?*

*ஒரு முடிவுடன் அப்பாதுரையின் அறைக்குள் நுழைந்தேன்.*

*அவரது முகம் இருண்டிருந்தது. மூக்கில் சிகப்பு. என்னைக் கண்டதுமே. "உன் மனசுல என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்..? நீயென்னா காந்தியா? தெரியமால்தான் கேட்கிறேன். மனிதாபிமானம்பற்றிப் பேச நீ யார்..?"*

*எனக்கு பதில் வரவில்லை.*

*"யூ ஆர் ஹெட் ஏக் டு மி! கஷ்டப்படுகிறாயே – போனால் போகிறதென்று வேலை போட்டுக கொடுத்ததிற்கு சட்டம் பேசுகிறாயாமே.ஈ உனக்கு எத்தனை வாட்டி சொல்லியிருக்கேன்.. அவன் வீஷம். அந்தாளுடம் மோதாதே என்று? உன்னால் எனக்கு தொல்லை. வாயை திறந்து பேசுய்யா!"*

*நான் பேசவில்லை. தலை கவிழ்த்திருந்தேன்.*

*தளர்ந்த அப்பாவும். சீக்கு தாயும், தளிர் போன்ற தங்கையும் கண்ணில் தெரிய, அமைதி காத்தேன்.*

*“உன் சௌகர்யத்திற்கு ஆட இது ஒன்றும் கவர்மென்ட் கம்பெனி இல்லை., பிரைவேட். இங்கே சிலதுகள் இப்படிதான் நடக்கும், நடப்பார்கள், அவற்றை ஏற்றுக்கொண்டு இருக்க முடியுமானால் இருக்க வேண்டும். இல்லை அத்தனை ரோஷம் இருக்கிறவனென்றால் பேசாமல் ரிசைன் பண்ணிவிட்டு போய்க்கொண்டேயிருக்கலாம். உள்ளே இருந்துக் கொண்டே வம்பு செய்வதில் அர்த்தமில்லை. எப்படி சௌகர்யம்?“*

*தளர்ந்த அப்பாவும், சீக்கான தளிர் தங்கையும் இப்போது கண்ணிலிருந்து விலகிப் போக, அவர்களையும் விட தன்மானம் பெரியதாய் தெரிந்தது.*

*இது என்ன நாய் பிழைப்பு! வாழ்ந்ததால் மானத்தோடு வாழ வேண்டும். நான் என்ன வம்பு தும்பிற்காப் போனேன்! நல்லதை கேட்டேன். நியாயத்தை எடுத்துச சொன்னேன். அதற்கு இப்படி ஒரு அவமானமா...?*

*சிபாரிசில் வந்திற்காக எல்லாவற்றையும் சகித்துக் கொள்ள வேண்டுமா? உழைக்கிறேன் சம்பளம் தருகிறீர்கள். உங்கள் பேச்சையெல்லர்ம் கேட்டுக கொண்டிருகக நான் ஒன்றும் பிச்சைக்காரன இல்லை!*

*ஒரு கணம். ஒரே கணம்தான் யோசித்தேன்.*

*“என்ன சொல்கிறாய்...?“*

*“இந்தாங்க சார். என் ரெஸிக்னேஷன் லட்டர்!“ என்று நீட்டிவிட்டு விறுவிறுவென திரும்பி நடந்தேன்.*

## *17. பெட்டி*

*பல்லவனுக்காக கால் கடுக்க நின்றிருந்த போதுதான் பஸ் ஸ்ட்டாப்பில் இருநத அந்தப் பெட்டி. விமலின் கண்களை உறுத்த ஆரம்பித்தது.*

*சிவப்புக் கலரில் வர்ணம் பூசப்பட்டு, சதுரமாய் தெர்மாஸ் போல தலையின் கைப்பிடியுடன் இருந்த அதன் கவர்ச்சி அவனை ஈர்த்தது.*

*“மாமா! அதைப் பார்த்தீங்களா...?“ என்றான் உற்சாகத்துடன்.*

*சேது அதற்குப் பதில் சொல்லாமல் நரசிம்மராவாய் (உம்மென்று) நின்றிருநதார். அயோத்தியோ, பஞ்சாப் பிரச்சனையோ, புதிய பொருளாதாரக் கொள்கையோ அதற்குக் காரணமில்லை. ஹர்சத் மேத்தாவும் காரணமில்லை.*

*எத்தனை வெட்டிவிட்டாலும் படுவா வந்து வந்து ஒட்டிக் கொள்கிறானே – இவனிடமிருந்து விடுதலையே கிடையாதா என்கிற கோபம்! அவன் அந்தக் கோபத்தை கண்டு கொள்ளாமல். “மாமா! நமக்கு லாட்டரி அடிக்கப் போகுது“ என்றான் அருகில் வந்து கிசுகிசுப்புடன். “அந்த பெட்டியைப் பார்த்தீங்களா...?“*

*“அதுக்கென்னவாம்..?“*

*“நாம வந்தப்போ சிட்டு ஒண்ணு அவசர அவசரமாய் கைகொள்ளாமல் பைகளுடன் ஆட்டோவுல ஏறிச்சே.. கவனிச்சீங்களா... அதுதான் இதை விட்டுடடுப் போயிருக்கணும்!“*

*அப்போது பல்லவன் ஓடிவந்து வழக்கம்போல் ஸ்டாப்பைக் கண்டு பயந்து தள்ளிபோய் நிற்கவும், பயணிகள் ஓட ஆரம்பித்தனர். அந்த ஓட்டத்தில் கலந்து கொண்ட சேதுவை விமல் தடுத்து நிறுத்தி, “வெயிட் எ மினிட்!“ என்றான். அவனுக்கு எப்போதும் பேராசை!*

*“எண்டா...?“*

*“அக்கம் பக்கம் யாருமில்லை. அந்த பெட்டியை ளுட்டு போட்டிருவோம்!“*

*“எதுக்கு...?“*

*“எதுக்கா...? பிழைக்கத் தெரியாத ஆள்ன்னு அக்கா சும்மாவா உங்களை திட்டுது...? பொட்டியை வித்தாவே இருநூறு முண்ணூறு தேறும்!“ என்று அதனை நெருஙகினான். “உன்னே. இன்னும் என்ன பொருள் இருக்கிறதோ!“*

*“ஏய்... ! தொடாதடா! குண்டு குண்டு...“*

*சேது அலற, ஒரு நிமிடம் (அதிகமில்லை ஜெண்டில் மேன் – ஒரே ஒரு நிமிடம்!) ஆடிப்போனவன். குண்டாவது கிண்டாவது என ஆடிக் கொண்டே பெட்டியைத் தூக்கி வந்தான். “அம்மாடி! செம கனம்! அப்படியே எடைக்குப் போட்டாலே. !“ என்று விசில் அடித்தான்.*

*“வேணாண்டா. அடுத்தவங்க பொருளுக்கு ஆசைப்படக் கூடாது!“*

*“அதைப் போய் அயோத்தியில் சொல்லுங்க!“*

*“வேணாண்டா. சொற்தைக்கேளு! பேசாமல் போலீசுல ஒப்படைச்சிருவோம்!“*

*போலீஸ் என்றதும அவனது முகத்தில் களவரம் தோன்றி பிறகு அதுவே பிரகாசமாயிற்று! இதற்கு முன்பு பேப்பரில் படித்திருந்த செய்திகள் மண்டைக்குள் ஓட ஆரம்பித்தன.*

*“ரெண்டு லட்சம் ரூபாயுடன் பெரியவர் ஒருவர் தவறவிட்டு விட்டுப் போன பெட்டியை பொறுப்பிடன் போலீஸில் ஒப்படைத்த ஆட்டோ டிரைவருக்கு கமிஷனர் பாராட்டு! அத்துடன் மேலும் ரூபாய் ரெண்டாயிரம் சன்மானமும அளித்தார்!“*

*அந்த ரெண்டாயிரமும், உதடுகளுக்குள் சிரிப்புமாய் போஸ் கொடுத்திருநத ஆடடோகாரரின் படம் அவனது கண்களில் இன்னமும் இருந்தது.*

*பெட்டியை சுட்டால் வெறும் பணம் மட்டும்தான் கிடைக்கும். அதையே போலீஸில் ஒப்படைத்தால் பணத்திற்கு பணம்! பாராட்டு! அத்துடன் பேப்பர்களிளெல்லாம் பெரிசு பெரிசாய் போட்டோ வரும்!*

*எங்களது ஜோரான நேர்மை பறைசாற்றப்படும். பேட்டி எடுக்கபடும் ஆமாம் – அதுதான் சரி!*

*“மாமா! கிளம்புங்க!“ என்று பள்ளத்தில் குறிப்புடன் ஓடிவந்து ஆட்டோவை மறித்தான்.*

*“எங்கேடா...?“*

*“நீங்க சொன்னபடியே ஸ்டேஷனில் பெட்டியை ஒப்படைக்சிருவோம்!ஈ“ என்று அவரையும் ஆட்டோவுக்குள் அழைததான். அவனுடைய திடீர் மாற்றம் அவருக்கு விளங்கவில்லை. அயோக்கிய பயல் – என்ன திட்டம் போட்டிருக்கிறானோ என்று பயந்தார்.*

*மீட்டர் போடப்படாமலே ஆட்டோ ஓட. அவனுக்கு ஆர்வம் தாங்கவில்லை. கற்பனை ஓடிற்று. பெட்டிக்குள் என்ன இருக்கும்... தங்கமா, வைரமா இல்லை வைடூரியமா....? அதை அறிந்து கொள்ள கைகளில் அரிப்பெடுத்தது.*

*சட்டென மூடியைத் திறந்து ஒருக்களித்துப பார்த்தான். உள்ளே காப்பி கலரில் சீசாக்கள்! எல்லாமே ரெண்டங்குல உயரம்தான்! ரப்பர் கார்க் போடப்பட்டு. டிரேயில் கச்சிதமாய் அடுக்கப்பட்டிருந்தன.*

*காற்றுவாக்கில் அதிலிருந்து மயக்கமாய் ஆல்கஹால் பணம்! என்ன இவைகள்? மைகாட்! எங்கக்கா காட்! பாட்டில்களில் என்ன... மயக்கம் மருந்தா...?*

*“ஆட்டோவை நிறுத்துப்பா!“*

*“ஏண்டா..?“*

*“டிரைவர்! நீ நிறுத்துப்பா!“*

ஆட்டோ சறுக்கிக் கொண்டு ஓரம் கட்டவும் இறங்கி, பத்து ரூபாய் மீட்டருக்கு மேல் மொய் கொடுத்து அனுப்பிவிட்டு, “மாமா! நல்லவேளை.... மடத்தனம் செய்யாமல் தப்பித்தோம்!“

“என்னடா சொல்றே நீ.? எனக்கு ஒண்ணுமே புரியலை!‘‘

“உங்களுக்கு என்னைக்கு புரிஞ்சிருக்கு? பெட்டிக்குள்ளே என்ன இருக்கு தெரியுமா... அவ்ளோவும் சுகரு!“

‘‘சுகரா.?“

“ஆமாம். அத்தோட ஒரு பிரவுனையும் சேர்த்துக்குங்க! இது சாதா பொட்டியில்லை. கோடீஸ்வர பெட்டி! அது சாதாரண பொம்பளை இல்லே மாமா! கடத்தல் பொண்ணு! இதை பொட்டலம் போட்டு காலேஜ் வாசல்ல உக்காந்தாக்கூட போதும் ஒரே வாரத்துல நாம ஹர்ஷத் மேத்தாவையே மிஞ்சிருவோம்!“

“வேணாம்ண்டா.. அந்த பொண் பாவம்!“

“பாவமா. ஹாஹ்ஹா! சிங்காரிச்சுகிட்டு சென்ட்டு போட்டுகிட்டு ஆட்டோவுல ஏறினப்பவே நினைச்சேன். சரியான ஃப்ராடுன்னு!“

“அவள் எப்படியிருந்தால் நமக்கென்னவாம்! அவ தப்பு பண்ணிணால் அதை அவளே அனுபவிச்சுட்டுப் போறாள். நாம் பேசாமல் போலீஸில் ஒப்படைப்போம் – அவங்களாப் பார்த்து கொடுக்கிற சன்மானத்தை வாங்கிகிட்டு, ஃபோட்டோ எடுத்தால் போஸ் கொடுத்துவிட்டு வந்திருவோம்!“

“உளறாதீங்க மாமா! இதைக் கொண்டு போய் கொடுத்தால் சன்மானம் கையில் கொடுக்கமாட்டாங்க! முதுவுலதான் கிடைக்கும். உள்ளே தள்ளி மயக்கமருந்து கடத்தினவர்களை போலீஸ் சாகசத்துடன் வளைத்து – ஒடித்து பிடித்துன்னு அவங்க தான் போட்டாவுக்கு போஸ் கொடுப்பாங்க!“

“ஆமாம். அதுவும் கூட சரிதான். பேசாம அந்தப் பொண்ணு கிட்டயே திருப்பி கொடுத்திருவோம்!“ என்று பெட்டிமேல் இருந்த ஸ்டிக்கரைப் பார்த்தார். அதில் கைஃபா லேபரட்டரீஸ் டெல்லி என்றிருந்தது. போன் நம்பர்கூட தெளிவாயிருந்தது.

“பார்த்தீங்களா...? சந்தேகம் வரக்கூடாதுன்னு லேபரட்டரின்னு சீட்டு ஒட்டியிருக்காள்! எல்லாம் கடோத் கஜம். மாமா! இதை வச்சுகிட்டு அவளிடம் டீல் போடுவோம்!“

“என்னன்னு?“

“உன்னோட மருந்து எங்கள் கையில்! மரியாதையாய் ஒரு லட்சம் கொடுத்திட்டு இதைப் பெற்றுக் கொண்டு போ! ஒரு வாரம் டயம்! அதற்குள் லட்சம் வரவில்லையென்றால் மருந்து போலீஸ்ல ஒப்படைக்கப்படும்னு போன் போயிடுவோம்!“

“வேணாம்டா. எதுக்கு வம்பு! எத்தனை கதைகள்ல படிச்சியருக்கோம்... ! எவ்வளவுதான் திட்டம் போட்டு பிளாக்மெயில் பண்ணினாலும் கடைசியில் மாட்டிக்குவாங்க! நாம பேசாமல் போலீஸுல...“

*“விவரம் புயித பேசாதீங்க மாமா! நீங்கள் வேணுமானால் யோக்கியமாய் நடந்து கொள்ளலாம். எல்லா போலீஸுங்களும் அப்படியே யோக்கியமாய் நடவடிக்கை எடுப்பாங்கண்ணு எதிர்பார்ப்பது முட்டாள்தனம்! நம்மைவிட அவங்க கில்லாடிங்க! காதும் காதும் வச்சமாதிரி கேஸ் பைல் பண்ணாமல் அவங்களே அந்த டெல்லி லாபரட்டரியோட டீல் போட்டுவிடக்கூடும்!“*

*“போலீஸ் அப்படிக்கூட செய்யுமா....?“*

*“ஏன் செய்யாது? ஸ்டேஷன்ல வச்சு கொலை நடக்குது, கற்பழிப்பு பேசாம வாங்க மாமா! வலிய வந்த ஸ்ரீதேவியை எட்டி உதைக்காதீங்க!“*

*விமல் அவரை அழைத்துக் கொண்டு, டெல்லிக்கு அந்த அட்ரஸிற்கு உடனே போன் பேச வேண்டி எஸ்.டி.டி பூத்தைத் தேடி நடக்க ஆரம்பித்தான்.*

*அதே சமயத்தில் –*

*பக்கத்து போலீஸ் ஸ்டேஷனில் அந்தப் பெண், “சார்! என்னுடைய சிகப்பு கலர் பெட்டியை பஸ் ஸ்டாப்பில் தவறவிட்டு விட்டேன். அதை நீங்கள்தான் கண்டுபிடித்துத தரவேண்டும்!“ என்று புகார் கொடுத்துக் கொண்டிருந்தாள்.*

*“அதில் அப்படி என்னம்மா வைத்திருந்தாய்?“*

*“அந்த பகுதியில் காலரா பரவியிருக்கிறதென்று ஜனங்களிடமிருந்து Stool எடுத்து டெல்லி லேபிற்கு அனுப்பச் சொல்லி அரசாங்கம் சொல்லியிருந்தது!“*

## *18. ஒரே ரகம்!*

*தெரு முழுக்க அந்த வீட்டு வாசலில் நிரம்பியிருந்தது. கோமதிக்கு பெருமிதம் பிடிபடவில்லை. இருப்புக் கொள்ளாமல் வாசலுக்கும் அறைக்குமாய் அவள் நடந்துக் கொண்டிருந்தாள்.*

*சற்று நேரத்தில், "என் டாக்டர் மருமகள் ரெடியாயிட்டா! ஒவ்வொருத்தரா வந்து பாருங்கள்!" என்று சொல்லிவிட்டு அறைக்குள் ஓடி, "நிர்மலா! உன்னை பார்க்கணும்னு எல்லோரும ஆசைபடறாங்க. வெளியே வாம்மா!" என்றான் கனிவுடன்.*

*அவள் சேதுவைப் பார்க்க, அவன், "என்னம்மா இதெல்லாம்...?" என்றான் கோபமாய்.*

*"நீ சும்மா இரு. இது உன் பெண்டாட்டி மட்டுமில்லை. என் மருமகளும் கூட டாக்டர்ன்னா சும்மாவா...? நீ வாம்ம்! கழுத்தில் அந்த ஸ்டெதஸை மாட்டிக்கொ!"*

*தாயின் போக்கு சேதுவுக்கு புரியவில்லை. பெண்களுக்குப் பிடிவாதம் அதிகம். ஒன்றைப் பிடித்துவீட்டால் அதைச் சாதிக்காமல் விடமாட்டார்கள்!*

*கோமதியும் மருமகள் விஷயத்திலும் கூட அப்படித்தான். டாக்டர்தான் வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றாள். "நம் வீட்டில் வக்கீல் இருக்கிறார்கள். என்ஜீனியர். ஆடிட்டரும் இருக்கிறார்கள். டாக்டர் தான் இல்லை. வீட்டில் டாக்டர் இருந்தால் அது நமக்கு எத்தனை பெருமை! நம் குடும்பம் முழுக்க இலவசமாகச் சிகிச்சை பண்ணிக்கலாம். வெளியே டாக்டருக்கு கொடுத்துக் கொடுத்து மாளலை!"*

*"எதுக்கும்மா வேண்டாத ஆசையெல்லாம்! நம் தகுதிக்கு ஏத்தபடிதான் பெண் பார்க்கணும். நானோ சாதாரண ஆபிசர். எனக்குத் தகுந்தமாதிரி சுமாரான படிப்பு, சுமாரான வருமானம் போதாதா? பொண்ணு எப்பயுமே மட்டமாகதானிருக்கணும்!"*

*அப்போ சரி, குட்டையா பார்த்தாப் போச்சு!"*

*"ஐயோ... அம்மா! நான் உயரத்தைச் சொல்லலே. வருகிறவன் நம்மைபிட படிப்புலயும், வசதியிலயும் குறைவாக இருந்தால்தான் வாழ்க்கை சிறக்கும். அப்போதுதான் அவள் நம்மை மதிப்பாள். இல்லேன்னா ஈகோ பிரச்சனை வரும்!"*

*"அதெல்லாம் எதுவும் வராது. உனக்கு எதுவும் தெரியாது. நீ சும்மாயிரு!" என்று அவனது வாயை அடக்கி, ஊரெல்லாம் தேடி அலைந்து அவள் விருப்பப்படியே டாக்டர் மருமகளைக் கொண்டு வந்து விட்டாள்.*

*வந்தததிலிருந்தே நிர்மலாவை அவள் வைத்த இடத்தில் வைப்பதில்லை. சதா... மருமகள்! மருமகள்! இப்போதெல்லாம் அவளுக்கு மகளைவிட மருமகள்தான் உசத்தி!*

*சேதுவும் அதை பெரியதாய் எடுத்துக்கொள்வதில்லை.*

*நிர்மலாவின் கிளினிக் பக்கத்து டவுனில் ஏற்பாடாகிக் கொண்டிருநதது கோமதி அவளிடம் தயங்கித் தயங்கி, "ஏம்மா! கிளினிக் டவுனில் போடுகிறாயாமே... இங்கேயே இந்தக் கிராமத்தில் வச்சுக்கக்கூடாதா...?" என்றாள்.*

“கிராமத்திலா...அது அத்தனை சௌகர்யப்படாதத்தே! டவுனில் என்றால் ஜனங்கள் அதிகம் வருவார்கள்.“

அதுக்கில்லே... இங்கேன்னா நம்மூர் ஜனங்களுக்கு வசதி.“

“ஏன் டவுன் ரொம்ப தூரமா என்ன – பஸ் பிடிச்சால் அரை மணிநேரம்! அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு பஸ் ஓடுதே... !“

கோமதிக்கு அதற்குமேல் அவளை வற்புறுத்த முடியவில்லை.

கிளினிக் ஆரம்பித்ததிலிருந்து நிர்மலாவிற்கு ஓய்வில்லை. ஒரே அலைச்சல், சரியான தூக்கமில்லை. கோமதியும், தன் உறவினர் மட்டுமின்றி ஊர் பெண்களையெல்லாம் அழைத்து வந்து காட்டி இலவசமாய் அனுப்பிக் கொண்டிருந்தாள்.

நிர்மலாவிற்கும் மறுக்கமுடியாத நிலமை.

ஒருசமயம் நிர்மலா அலுப்புடன் தூங்கி கொண்டிருந்த போது கோமதி ஓடிவந்து, “மருமகளே! எழுந்திரு, எழுந்திருச்சுவா!“ என்று அவசரப்படுத்தினாள்.

“என்னத்தே?“

“பக்கத்து வீட்டுப் பையன் கீழே விழுந்து காலில் அடி! என்னன்னு வந்து பார்!“

அவள் வெறுப்புடன் போய் பார்க்க, தூக்கம் போன வெறுப்பு இன்னும் அதிகமாயிற்று. “அவனுக்கு பெரிய அடி ஒன்றுமில்லை. லேசான சிராய்ப்புதான். அதை டெட்டால் போட்டு கழுவி டிஞ்சர் போட்டுக் கட்டினால் வேலை முடிந்தது. இதை யார் வேண்டுமானாலும் செய்யலாம். டாக்டர்தான் வேணும் என்பதில்லை.“ நிர்மலா அதைச் சொல்லிக் கடுப்படிக்க, கோமதிக்கு பிறர் முன்னில் அவமானமாயிற்று. அன்று அவர்களுக்குள் முதல் விரிசல் விழுந்தது.

பிறகு வேறொரு நாள் கோமதி கிளினிக்கிற்கு வந்து, “எனக்கு அசதியா இருக்கு. நடந்தால் மூச்சு வாங்குது, என்னன்னு பார்!“ என்றாள்.

டெஸ்ட் பண்ணிப் பார்த்த போது அவளுக்கு சுகர் அதிகமிருந்தது பி.பி யிம் கூடுதல்.

“அத்தே! உங்களுக்கு சர்க்கதை அதிகமிருக்கு. ஸ்வீட் சாப்பிடாதீங்க, காய்கறி பழங்கள் சேர்த்துக்குங்க. அரிசி சாதம் குறைக்கணும்!“ என்று அவள் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளை எடுததுச் சொன்னாள்.

ஆனால் கோமதிக்கு அதையெல்லாம் கடைபிடிக்க முடியவில்லை. நன்றாகச் சாப்பிட்டு வளர்ந்த தேகம்! ருசிகண்ட நாக்கு! கட்டுப்படுத்த முடியவில்லை.

ஒரு சமயம் கோமதி தட்டுநிறைய சாப்பாடு எடுத்து வைத்து சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் நிர்மலாவிற்கு பக்கென்றிருந்தது. உடல் முழுக்க சீக்கை வைத்துக் கொண்டு இப்படி பண்ணுகிறார்களே...‘ என்று அதை பிடுங்கிப் போய்க் கொட்டினாள்.

“அத்தே! ம்கூம். நீங்க இவ்ளோவெல்லாம் சாப்பிடக் கூடாது. ரைஸ் ஒரு கப் போதும். சப்பாத்தி சாப்பிடுங்க. கேழ்வரகுக்களி!“

*“அதெல்லாம் சாப்பிட்டால் வயிறு மந்திப்பாகுதே!“*

*“பரவாயில்லை. நிறைய நடங்க. சும்மா உட்கார்ந்திருக்காம குனிஞ்சு நிமிர்ந்து வேலை செய்ங்க!“*

*அவள் யதார்த்தமாய்ச் சொல்ல விரிசல் அதிகமாயிற்று.*

*“நான் நிறைய சாப்பிடறேனாமே – சும்மா உட்கார்ந்திருக்கேனாமே – இவ காசிலியா சாப்பிடறேன்!“ என்று ஊர் முழுக்க புலம்ப ஆரம்பித்தாள். “திங்கிற சோற்றைப் பறிக்கிறாள். எல்லாம் டாக்டர் என்கிற திமிர்! அகம்பாவம்! நீ டாக்டரென்றால் அதை உன்னோட வைத்துக கொள்!“ என்று புகைந்தாள்.*

*மூன்றாவது விரிசல் கோமதியின் தங்கையின் மூலம் விழுந்தது.*

*அவளுக்கு உடம்பு முடியலை என்று வர, நிர்மலா மாத்திரை எழுதிக் கொடுத்தாள். கடையில் மாத்டிதரை மாறி போய்விட, அது தெரியாமல் அவள் சாப்பிட்டு, ஒரே வாந்தி! பேதி! சின்ன மாமியாருக்கு ஆச்சு போச்சென்றாயிற்று.*

*உடன் கோமதி மலை ஏற ஆரம்பித்தாள்.*

*“இவள் என் சோற்றில் மண் அள்ளி போட்டது பத்தாதுன்னு என் மேலுள்ள வெறுப்பை... என் தங்கை மேலும் காட்டி, அவளையும் கொல்லப் பார்த்தாள்“ என்று ஊர் முழுக்க டமாரமடிக்க –*

*அதை கேள்விப்படதும் நிர்மலா, “எப்போ என்மேல சந்தேகம் வந்ததோ – நம்பிக்கை இல்லையோ இனி இந்தக் குடும்பத்திலுள்ள யாருக்கும் வைத்தியம் பார்க்க மாட்டேன். நான் எத்தனை நன்றாக வைத்தியம் பார்த்தாலும் என் மேல் பழிதான் வரும். இனி இந்த வீட்டிலும் இருக்க மாட்டேன்!“ என்று சொல்லி டவுனில் வீடு பார்க்க-*

*நடந்த தவறு புரிந்ததும் கோமதி சேதுவிடம் வந்து “உன் பெண்டாட்டியின் திமிரைப் பார்த்தியா... ஏதோ தப்பு நடந்து போச்சு. எங்க மேலதான் தவறுன்னு ஒத்துகிட்டோமில்லே – அப்புறம் இன்னும் என்னவாம்...? அவளுக்கு நீ புத்தி சொல்லக்கூடாதா?“ என்று பாய்ந்தாள்.*

*அவன் பதில் எதுவும் சொல்லவில்லை.*

*அம்மா, நிஜமாலுமே நல்லதை நினைத்துத்தான் டாக்டர் மருமகளைத் தேடினாள். எந்தக் காரணத்திற்காக டாக்டர் மருமகள் வேண்டும் என்று ஆசைபட்டாளோ அது இப்போது நிறைவேறாமல் போவதில் அவனுக்கும் சங்கடம் தோன்றிற்று. ஆனால் என்ன செய்ய முடியுமாம்!*

*பெண்கள் எல்லோரும படித்தாலும் – படித்திருக்கா விட்டாலும் ஓதே ரகம்தான்! ஒருவருக்கொருவர் அனுசரணை கிடையாது. இந்த உலகத்தில் மாமியார்களும் மாறப் போவதில்லை – மருமகள்களும் திருந்தப் போவதில்லை! இவர்களுக்கிடையில் மகன் என்பவன் ஊமை, உதாவாக்கரைஇ ஒன்றுக்கும் ஆகாதவன்.*

*“என்னடா... நான் பாட்டுக்குக் கேட்டுகிட்டேயிருக்கேன். நீ பேசமாட்டேன்றாய்...? நீயும் பெண்டாட்டி பித்தனாயிட்டியா...?“*

*அந்த வார்த்தை சர்ரென்று உரைக்க சேது, "அம்மா! எனக்கு இங்கு என்ன உரிமை? எனக்கு தான் எதுவும் தெரியாதே! இதில் தலையிட நான் யார், நீயாச்சு – உன் டாக்டர் மருமகளாச்சு – எப்படியோ போங்கள்!"*

*சொல்லிவிட்டு விருட்டென்று வெளியேறினான்.*

## *19. இன்றே கடைசி*

*டிரைவ் – இன் ஹோட்டலில் கார்கள் ஒழுங்கில்லாமல் அணி வகுத்திருந்தன. காருக்குள் குடும்பமே ஐக்யமாகியிருக்க. வெயிட்டர்கள் பணிவோடு அவர்களிடம் ஆர்டர் எடுதது‌க கொண்டிருந்தனர்.*

*புல்வெளியில் டேபிள்கதள் நிரம்பியிருந்தன. ஹோட்டலைச் சுற்றிலும் மரங்கள் அடர்ந்திருந்தன. அந்தப் பகுதி முழுக்க மெல்லிய இருட்டு.*

*கார்டனில் அங்கங்கே ராட்சஷ டிவிகள்! அவற்றில் வெள்ளைக்காரிகள் ஜட்டி – பிராவோடு பீச்சில் ஓடிக்கொண்டிருந்தனர். குழந்தைகள் ஊஞ்சலாடின சறுக்கின.*

*வாடிக்கையாளர்களெல்லாம் பணம் போவது பற்றி கவலைபடாமல் உல்லாசமாயிருக்க மரம் ஒன்றின் கிளையில் அமர்ந்திருந்த அவனுக்கு மட்டும் டென்ஷன்!*

*அவனது கையில் வில் போன்ற அமைப்பில் உபகணம் ஒன்றிருந்தது. அதன் முகப்பில் கம்பு ஒன்று பொருத்தப்பட்டு. அதன் நுனியில் ஊசி ஒன்று சொருகப்பட்டிருந்தது. அந்த ஊசியில் சயனைட்.*

*அவன் – பெருமாள் – 35, தொழில் - கொலை!*

*இன்னாரை இந்த தேதிக்குள் முடித்துவிட வேண்டும் என்று சொல்லி விட்டால் போதும் அன்னாருக்கு அந்தத் தேதிக்கள் சமாதி கட்டிவிடுவான்.*

*கொலையை ஏவுவது யார் என்றெல்லாம் அவனுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை. தெரிந்தால் பின்னால் அதை வைத்து மிரட்டக்கூடும் என்கிற எச்சரிக்கை உணர்வு!*

*அவனும் அதுபற்றி தெரிந்து கொள்வதில்லை. ஆளைக் காட்டுவார்கள். திரைமறைவிலிருந்து தகவல் வரும். கூடவே அட்வான்ஸும். இவன் கச்சிதமாய் காரியத்தை முடித்து விடுவான். கேஸ் பரபரப்பாய் கொஞ்ச நாட்களுக்குப் பேசப்பட்டு அப்புறம் பரணிற்குப் போய்விடும்.*

*பெருமாளின் கண்கள் இப்போது அருண் எனும் இளைஞனின் மேல். அவன் இளைஞரணித் தலைவன். கட்சிக்குள் அவன் கோஷ்டி சேர்க்கிறானாம். விட்டால் தலைமைக்கு ஆபத்து என்று பெருமாளை ஏவியிருக்கிறார்கள்.*

*தனக்குக் குறிவைக்கப்படுவதை அறியாத அவன் இப்போது நான்காவது டேபிளில் அமர்ந்து இடியாப்பத்தில்! அருகில் நண்பர்கள் அவனுக்கு செலவு வைத்துக கொண்டிருந்தனர்.*

*பெருமாள் கூம்பின் விசையைத் தட்டிவிடத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு செகண்டு போதும் – ஊசி அருணின்ந புஜத்தில் பாய்ந்து, தாக்கி, ரத்ததில் சயனைடை கலந்துவிட்டு, ஈரப்பதமானதும் கீழே விழுந்துவிடும்.*

*பார்ட்டிக்கு எறும்பு கடித்தது மாதிரிதான் இருக்கும். யாருக்கும் எந்தச் சந்தேகமும் வராமல் அடுத்த நான்கைந்து மணி நேரத்தில் ஆள் காலி!*

*பெருமாளும் வந்தது முதலே பார்க்கிறான் – அருண் கொஞ்ச நேரமும சீட்டில் அமர மாட்டேன்கிறான். எழுந்து போவதும், போன் பண்ணுவதும், அக்கம் பக்கம் கைகொடுப்பதும்...*

*இப்போதுதான் செட்டிலாகியிருககிறான்.*

*விடக்கூடாது. தாக்கு!*

*ஒன்று...*

*இரண்டு...*

*மூன்று!*

*நான்காவது நொடியில் அவன் விசையைத் தட்டினதுதான் தாமதம், ஊசி மின்னலாய் பாய்ந்து போக-*

*அந்த நேரம் பார்த்துதானா அருண் தன் ஷுவின் லேஸைக் கட்டக் குனிய வேண்டும்? சை!*

*எல்லாமே வேஸ்ட்!*

*அடுத்த ஊசியை முயலலாம் என்று பார்ப்பதற்குள் அருண் எழுந்து விட்டான். அவசரமாய் பில் பொடுத்துவிட்டு தன் காரில் கிளம்பிப் போய்விட்டான்.*

*போகட்டும்! எங்கே போய்விடுவான்! எப்படியும் ராத்திரி தன் ரூமிற்கு அவன் படுக்க வந்துதானேயாகம்! ரூமில் அவன் தனியாகத்தான் இருக்கிறான். ரொம்ப வசதி.*

ராத்திரி பன்னிரண்டு மணி வரை பெருமாளுக்கு சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. அருண் தனி வீடு எடுத்து தங்கியிருந்த வீட்டுப்பக்கம் நீண்ட நேரம் காத்திருந்தும் எந்தப் பிரயோஜனமுமில்லை.

அங்கு ஆட்கள் வருவதும் போவதுமாயிருந்தனர். தலைமைக்கு வேட்டு வைக்க அவன் ராத்திரியோடு ராத்திரியாய் சதித்திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறான் போலிருக்கிறது.

இன்றுதான் கடைசி நாள். விடிவதிற்குள் அவனைத் தீர்த்து கட்டாவிட்டால் ஏவின ஏஜெண்ட் சும்மா இருக்கமாட்டான். துளைத்தெடுத்து விடுவான்.

பெருமாளுக்குத் தூக்கம் தூக்கமாய் வந்தது.

வீட்டிற்கு வந்தான். மனைவி – மகனெல்லாம் அலுப்பாய் தூங்கிக் கொண்டிருக்க, ஓசையின்றி கதவைத் திறந்து தன் அறைக்கு போய் ஐக்யமானான்.

தூக்கம் வரவில்லை.

அருணை எப்படியும் தீர்த்தாக வேண்டும்.

எப்படித் தீர்க்கப் போகிறேன்? சற்ற நேரத்தில் யோசனையை தூக்கம் வென்றது.

விடியற்காலை.

வானம் நன்றாக இருட்டியிருந்தது. மப்பும் மந்தாரத்துடன் பொச பொசவென தூரல். குளிர்காற்று ஜில்லென ஜன்னல் வழி தாக்க, பெருமாளின் தூக்கம் போயிற்று. எழுந்து சோம்பல் முறீத்தான்.

மணி பார்த்தான்.

நான்கு.

முகம் துடைத்துக கொண்டு டிரஸ் செய்து கொண்டான்.

கையில் தனக்கு வேண்டிய உபகரணங்களை எடுத்துக் கொண்டு. மெல்ல வெளியேற முயன்ற போது மனைவி விழித்துக் கொண்டு, ‘‘எங்கேய்யா கிளப்பிட்டே...?‘‘ என்று மறித்தாள்.

‘‘வெளியே கொஞ்சம் வேலையிருக்கு!‘‘

*“இந்த அசந்த நேரத்தில் அப்படி என்ன வேலை.. ம்? ராத்திரி எப்போ வீடு திரும்பினாய்? பெண்டாட்டி பிளை பத்தின கவலை உனக்கு இருக்கா.?“*

*“விடுடி கையை! இப்போ என்ன ஆகீ போச்சுன்னு இப்படி பிடுங்குகிறாய்...?“*

*“இன்னும் என்னய்ய ஆகணும் வீடு ஒழுகுது. பால் கார்டு தீர்ந்து போச்சு. மாத்தி கொடுய்யான்னு சொல்லி நான்கு நாளாச்சி. கேட்கறியா நீ? நான்கு நாளாய் வீட்டில் பால் பாக்கட் போடலே!“*

*“பால் பாக்கட் தானே.?“ என்று போது அவனது மனதில் மின்னல் ஒன்று வெட்டிற்று. “இன்னைக்கு ஒருநாள் பொறுத்துக்கோ. நாளைக்கு எல்லாத்தையும் சரி பண்ணிடறேன்!“*

*சொல்லிவிட்டு பெருமாள் பைக்கில் தொற்றினான்.*

*கணவன் போய்விட்டானே என்று அவள் சும்மா இருக்க வில்லை. தூங்கிக் கொண்டிருந்த மகனை எழுப்பி, “கணேசு! எழுந்து பூத்துககுப் போய் பால் வாங்கி வாடா!“ என்று அவனை பிடித்து உலுக்க ஆரம்பித்தாள். இந்த வீட்டில் யாருககும் பொறுப்பில்லை.*

*“தூக்கம் வருதும்மா!“*

*“பொல்லாத தூக்கம்! எழுந்திரு நாயே!“*

*“இன்னும் கொஞ்ச நேரம் கழிச்சு போறேம்மா!“*

*“ம்கூம். உடனே கிளம்பு!“ என்று பாத்திரத்தை நீட்டினாள். அவன் வெறுப்புடன் எழுந்து டிராயரை சரி பண்ணிக் கொள்ள ‘இந்தா பணம். பத்திரம்!“ என்று நீட்டினாள். “சீக்கிரம் போ! இல்லாட்டி தீர்ந்து போயிரும்! என்ன தெரிஞ்சுதா....“*

*“சரிம்மா“ என்று கணேசு கோட்டு வாயைத் துடைத்துக கொண்டு நடக்க ஆரம்பித்தான்.*

*பெருமாள், ஒருவனின் வீட்டுக்கு முந்தின தெருவிலேயே பைக்கை நிறுத்தினான். மழையின் நசநசப்பில் தெரு வெறிச் சோடியிருந்தது.*

*அருணின் வீடும் கூட நிசப்தத்தில்.*

*தெரு விளக்குகள் யோசித்து எரிந்துக் கொண்டிருந்தன. அந்த வீட்டை அடைந்ததும் அக்கம் பக்கம் திருமபிப் பார்த்தான். யாரும தென்படவில்லை.*

*சட்டென காம்பவுண்டில் தொற்றினான்.*

*அந்தப் பக்கம் ஒரு ஜம்ப்!*

*வாசலை உற்றுக் கவனித்தான். அவனது எதிர்பார்ப்பு வீண் போகவில்லை. அங்கே கதவின் நடுமத்தியில் பூனைக்கு பயந்து கொண்டு பை ஒன்று தொங்கிற்று.*

*அதில் பால் பாக்கட்! ஜில்லென அதன் வெளிபக்கம் நீர்த்திவலைகள். இப்போதுதான் போட்டிருக்கான். ரொம்ப வசதி. ரிஸ்க்கில்லாமல் காரியத்தை முடீக்கலாம். யாரும் பார்க்கவில்லை.*

*பெருமாள் யோசனையுடன் அந்த பாக்கட்டை எடுத்தான்.*

*பையிலிருந்து சிரிஞ்ச்.*

*அதற்குள் சயனைட்.*

*சிரிஞ்சை பாக்கட்டின் விளிம்பில் செலுத்தி – வெளியே எடுத்தான். மறுபடியும் பாக்கட்டை பையில் போட்டுவீட்டு வேகமாய்த் திரும்பி நடக்க ஆரம்பித்தான். காம்பவுண்ட்! ஜம்ப்!*

*பைக்!*

*இத்தனை எளிதாய்க் காரியம் முடீயும் என்று அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.*

*பால்பூத்தில் அந்த இருட்டிலும், அத்தனை தூரலிலும கூட்டம் குழுமியிருந்தது. எனக்கு – உனக்கு என்று அடித்துக கொண்டது.*

*கணேசும் வேண்டாவெறுப்புடன் கியூவில் நின்றிருந்தான். அவனுக்குத் தூக்கம் தூக்கமாய் வந்தது.*

*கொட்டாவி. தூக்கத்தை கெடுத்த தாயின் மேல் வெறுப்பு! அதிகாலையில் எத்தனை ஆனந்தமான தூக்கம்!*

*பால் கவுண்டரில் கிட்டே போனதும், பாத்திரத்தை நீட்டும் போது பாக்கட்டில் பணம் எடுக்க கைவிட்டவனுக்கு அதிர்ச்சி.*

*அங்கே தாய் கொடுதத பத்து ரூபாயைக் காணவில்லை. அதற்குப் பதில் விரல்தான் பாக்கட் ஓட்டை வழியே வெளியே போயிற்று! சே! எங்கோ விழுந்துவிட்டிருக்கிறது.*

அம்மாவிற்குத் தெரிந்தால் முகுது பழுக்கும்.

பால் இல்லாமல் போனால் தொலைத்து விடுவாள். கடவிளே. என்ன இது சோதனை! தூக்கம் போனதுமில்லாமல்... அம்மாவை நான் எப்படி சமாளிக்கப் போகிறேன்! அவன் யோசனையுடனும். தயக்கத்துடனும் திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

பெருமாள் மிகுந்த உற்சாகத்துடுன் பைக்கிலிருந்து இறங்கினான். பெண்டாட்டி வீட்டின் பின் பக்கம் என்னவோ செய்து கொண்டிருக்க, தன் அறைக்குப் போய் லுங்கிக்கு மாறினான்.

இன்னும் ஐந்து மணி நேரத்தில் அருண் காலி. அவன் இந்நேரம் பால்பாக்கெட்டை எடுததிருபபான். பெட் காபி! அதுவே அவனது கடைசிக் காப்பி! ஹாஹ்ஹா!

சந்தோஷத்தில் தூகம் வரமறுத்தது. சும்மான்னாலும இழுத்து போர்த்திக் கொண்டு படுக்கையில் விழுந்தான்.

அரைமணி நேரத்தில் வீடு வந்து சேர்ந்திருந்த கணேசு மிகவும் உற்சாகமாயிருந்தான்.

"இந்தாம்மா பால்!" என்று பாக்கெட்டை நீட்டினான். "இனி என் தூக்கத்தை கெடுக்காதே" என்று அவனும் படுக்கையில் விழுந்தான்.

பால் வாங்காமல் திரும்பினால் அம்மா அடிப்பாள் என்பதால் என்ன செய்யலாம் என்று யோசனையுடன் வந்து கொண்டிருக்கும்போது அருண் வீட்டில் தொங்கின பால் கண்ணில் படஇ சத்தமில்லாமல் போய் அதை அபகரித்து வந்தது பற்றி அவன் மூச்சேவிடவில்லை.

அது அறியாத பெருமாள் படுக்கையிலிருநதபடியே, "சீக்கிரம் காபி போட்டு எடுத்து வாடி!" என்று பெண்டாட்டியை அதட்டினான்.

## *20. தை பனிரெண்டு*

*சுதன் அப்படி ஒரு குண்டைத் தூக்கி போடுவான் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.*

*“உன்னுடன் அவசரமாய்ப் பேசணும், குவைத் டவருக்கு மாலை ஐந்து மணிக்கு வந்துவிடு“ என்று போனில் சொல்லியிருந்தான். மனதில் ஆசைகளையும் கனவுகளையும் சுமந்து கொண்டு ஓடிவந்த எனக்கு சம்மட்டியால் அடி!*

*குவைத் டவர் என்பது கூம்பு வடிவில், அற்புதமான டவர். குவைத்தின் சின்னம். சுற்றிலும் புல்வெளிகள்! நீச்சல் குளம்! தூரத்தில் கடலில் இளைஞர்கள் படகு சவாரி விட்டுக கொண்டிருந்தனர்.*

*லிஃப்டில் மேலே போகும்வரை அவன் வாய் திறக்கவில்லை. மேலே சுழலும் ரெஸ்டாரென்ட்டிற்கப் போனதும் இப்படி உட்கார் என்று என்னை அமர வைத்து அவனும் எதிரே அமர்ந்துக் கொண்டான்.*

*அந்த ரெஸ்டாரெண்ட் மெல்ல ஊர்ந்துக் கொண்டிருந்தது.*

*அதன் கண்ணாடி பிரிவுகளில் சால்மியா, மெளிலா, அரேபியன் கடல், ஜாக்ரா, ஈராக் பார்டர் என்று எழுதி வைத்திருந்தனர். அந்தந்த கண்ணாடிகளுக்கு நேராய் அந்தந்த பகுதிகள் டெலஸ்கோப்பில் நன்கு தெரிந்தன.*

*நான் – நர்ஸ். இங்கு சிட்டி ஆஸ்பத்திரியில் கடந்த இரண்டு வருடமாய் வேலை. இருபத்தைந்து வயது. அழகுக்கும் வனப்புக்கும் பசங்கள் எனக்கு அறுபது மார்க் போட்டிருக்கிறார்கள். சுமார் ரகம்தான்!*

*ஊரில் நல்ல ஆஸ்பத்திரியில் தானிருந்தேன். ஆனால் பெற்றோர்களின் இயலாமையாலுல், வறுமையாலும், இங்கே அப்ளை பண்ணி தேர்வு எழுதி கனவுகளையும், கல்யாணத்தையும் தள்ளி வைத்து விட்டு வந்திருக்கிறேன்.*

*மனக்கட்டுப்பாடு.*

*இந்த வயதிற்கு ஏற்படக்கூடிய உணர்ச்சிகளை எல்லாம் என்னிடமும் எழாமல் இல்லை.*

*தங்கைகளை கரைசேர்க்கவும், பொறுப்புக்களை நிறைவேற்றவும் அவற்றைக் கட்டிப் போட்டு வைத்திருந்த போதுதான், இந்த சுதனின் அறிமுகம் கிடைத்தது.*

*சுதன் முப்பத்து ஐந்து வயது. காதோர நரையை டை அடித்து மறைத்திருந்தான். இங்கு ஏதோ ஒரு கான்ட்ராக்ட் கம்பெனியில் வேலை. ஏறக்குறைய ஒரு வருடமாய் சுதனுடன் பழக்கம்.*

*இங்கே சட்டதிட்டங்கள் கடுமை என்பார்கள். ஆண், பெண் பழக முடியாது. பேசமுடியாது என்று சொல்வதெல்லாம் ஓரளவிற்கு உண்மைதான்.*

*பலவந்தம், கற்பழிப்பு போன்றவற்றிற்குதான் தண்டனை. பழகுவதற்கு எந்தப் பிரச்சனையும் இருப்பதாக தெரியவில்லை. நாங்கள் அதற்கு ஒரு உதாரணம். ஆஸ்பத்திரியில் எத்தனையோ ஆண்களுடன் பழகுகிறேன். வேறு எவரிடமும தோன்றாத ஒரு ஈடுபாடு சுதன்மேல்! எனக்கே புரியவில்லை. எப்படி இவரிடம் மயங்கினேன்?*

*ஒரு சமயம் – ஊரிலிருந்து அவசரமாய் பணம் வேண்டும் என்று கேட்டிருந்தனர். இங்கிருந்து தபாலில் அனுப்பினால் எப்படியும் போய்ச் சேர, ஒருவாரம் ஆகிவிடும்.*

*கடிதங்களெல்லாம் பெரும்பாலும் ஊருக்குப் போகிறவர்களிடம் அனுப்பி அங்கே போஸ்ட் பண்ணுவதுதான் வழக்கம்.*

*அப்படியாரும் போகிறார்களா என்று விசாரித்த போதுதான் சுதன் அகப்பட்டான். பணத்தை நேரிலேயே கொடுதது விடுகிறேன் என்று வாங்கிப் போனான்.*

*திரும்பி வரும் போது எனக்காக வீட்டினர் கொடுத்தனுப்பின பொருட்களையெல்லாம் கொண்டு வந்தான்.*

*அதன்பிறகு போனில் மணிக்கணக்காகப் பேசுவோம். (இங்கே லோக்கல் போன் – கால்களுக்கு சார்ஜ் கிடையாது என்பதை அறிக!)*

*ஹாஸ்டலில் எந்தக் கட்டுபாடும் இல்லை. பகலில் எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம். ராத்திரிக்குள் திரும்பிவிட வேண்டும். வாரத்தில் வியாழன் – வெள்ளி விடுமுறை.*

*அந்த நாட்களில் சுதனுடன் சுற்றாத இடமில்லை.*

*எண்டர்டெயின்ட்மெண்ட் சிட்டியில் – சுற்றியிருக்கிறோம். பறக்கும் ரயில்! பம்பிங்க கார்! மெஸிலா பீச்சில் ஒன்றாய்க் குளியல்! சால்மியா பீச்சீல் போட்டிங்!*

*சுதனின் மௌனத்தை கலைத்து, ''என்ன விஷயம் சொல்!'' என்றேன்.*

*''நாளை மறுநாள் ஊருக்குப் போகிறேன்.''*

*''என்ன விஷயம்?''*

*''தை – பன்னிரண்டில் என் திருமணம்.''*

*''இந்தக் கிண்டல்தானே வேணான்றது! நானில்லாமல் உனக்கு திருமணமா...?''*

*''கிண்டலில்லை. நிஜம்.''*

*''சுதன்! என்ன சொல்கிறாய் நீ? ஏன் திடீருன்னு? இதுவரை நீ சொல்லவேயில்லையே!''*

*''எனக்கே தெரியாது. வீட்டினர் நிர்ப்பந்தம் – எனக்கு ஒரு முறைப் பெண் இருக்கிறாள். அவளை நிச்சயம் பண்ணிவிட்டார்களாம்!''*

*''நம் விஷயத்தை நீ சொல்லவேயில்லையா....?''*

*''இல்லை'*

*''ஏன்?''*

*“சொல்லியிருநதால் குவைத்தே வேண்டாம் – வந்துவிடு என்பர். சொல்வதிற்குத் தருணம் பார்த்திருந்தேன். அதற்குள் அவர்கள்...“*

*“அப்போ நான்? எனக்குக் கொடுத்த ப்ராமிஸ்? என்னுடன் பழகினதெல்லாம்?“*

*“ஸாரி சிநேகா. எனக்கு என்ன பண்றதுன்னே தெரியல. ஒரே குழப்பமாயிருக்கு.“*

*“சுதன்! நீ என்னை விரும்புவது நிஜம்தானே!“*

*“ஆமாம்.“*

*“நான் உனக்கு நிச்சயம் நல்ல மனைவியாக இருப்பேன் என்கிற நம்பிக்கை உனக்கு இருக்கிறதில்லே?“*

*“நிச்சயமாக.“*

*“அப்புறம் இன்னும் என்ன தயக்கம்? நாம் ஏற்கனவே முடிவு செய்தபடி இங்கேயே இந்திய தூரதரகத்தில் திருமணம்...“*

*“அது நடக்கும்னு தோணலே...“*

*“ஏன்?“*

*“உன்னைக் கட்டிக்கொண்டால் என் முறைப்பெண் தூக்கில் தொங்கவாள். என் பெற்றோர்களும் இடிந்துப் போவார்கள்!“ சொல்லிவிட்டு சுதன் கண்களைக் கசக்கினான். நான் கைகளைப் பிசைந்தேன்.*

*ஹாஸ்டலுக்கு வந்த பின்பு கூட எனக்கு அந்தச் செய்தியை ஜீரணிக்க முடியவில்லை. சுதனில்லாமல் நான் எப்படி?*

*சும்மாகிடந்தவளைத் தூண்டிவிட்டான்.*

*அடங்கிக் கிடந்தவளை தட்டி எழுப்பி, ஆசைகளை கிளப்பிவிட்டு...ஏன்? ஏன் இப்படி?*

*சுதன் பொய் சொல்கிறானா? சும்மா என்னைச் சீண்டிப் பார்க்கிறானா?*

*ரூமிற்கு போன் பண்ணினபோது, சுதன் வெளியே போயிருப்பதாய்ச் சொன்னார்கள். அவனது திருமணம் பற்றிக் கேட்டபோது, “ஆமாம். நிஜம்“ என்று ரூம் மேட் தெரிவித்தார்.*

*எனக்கு ராத்திரி முழுக்கத் தூக்கமில்லை.*

*சதா சுதன் சுதன் என்று கட்டின கோட்டையெல்லாம் ஓரே நாளில் தகர்ந்துவிட்டது. நான் இவனுக்காக பிறக்கவில்லை. இவனை நம்பி இங்கே வரவில்லை. கடல் தாண்டி வந்தது காதலிக்க இல்லை.*

*பணம். குடும்பப் பொறுப்புக்கள்!*

*சொற்த வாழ்க்கையை தியாகம் பண்ணத் தயாராகத் தான் வந்தேன். வந்த இடத்தில் மனபாய்ச்சல், வீழ்ந்து விட்டேன். பணம் சம்பாதிப்பதுதான் நோக்கம் என்றாலும் கூட எதற்காக இளமையை வீணடிக்க வேண்டும்? ஒரு சறுக்கல்.*

*ஏன் சொந்த வாழ்க்கையை அழித்துக் கொள்ள வேண்டும்?*

*சுதன் நல்லவன், அவனுடன் வாழலாம். வீட்டினருக்கு பணம்தானே தேவை? அனுப்பினால் போயிற்று?*

*சுதனுடன் நெருங்கிப் பழகி, பகலில் அவனது ரூமில் என்னையும் மறந்து அவனுக்குச் சுதந்திரம் கொடுத்து... எல்லாம் ஏன்? அவன் என்னைக் கட்டிக் கொள்வான் என்றுதானே!*

*வெளிநாட்டினர் இங்கு திருமணம் செய்து கொள்வதற்கு சில தடைகள் உண்டு. சட்டதிட்டங்கள் உண்டு. இந்தியத் தூதரகத்தில் மனுச் செய்து. இருவரின் படங்களையும் கொடுத்து – இந்த் திருமணத்தில் யாருக்காவது மறுப்பு உண்டா – என்று நோட்டீஸ் ஒட்டி... பிறகுதான் முடியும்.*

*அதற்குகூட தயாராகி விட்டேமே! கடைசி நேரத்தில் ஏன் இப்படி ஒரு குண்டு?*

*அன்று.*

*சுதன் ஊருக்குப் பயணப்படும் நாள்.*

*எனக்கு மனது கேட்கவில்லை. சுதனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அவனது ரூமிற்குக் கிளம்பினேன்.*

*நான் போன போது அவன் குளித்துக் கொண்டிருநதான். பெல்லடித்ததும். டவல் சற்றிக் கொண்டு வந்து திறந்து விட்டு விட்டு "இரு வந்திர்றேன்!" என்று மறுபடியும் பாத்ரூம்.*

*பெட்டிகள் கட்டப்பட்டுத தயார் நிலையில் இருந்தன.*

*ஹாண்ட் பாக்! டேபிள் டிராயர். சும்மா அமர்ந்திருக்க முடியாமல் டிராயரைத் திறக்க, அதில் கட்டுகட்டாய்க் கடிதங்கள்! எல்லாம் பெண் கையெழுத்து. சுனிதா என்கிற பெண்! அவளது முறைப் பெண்ணாக இருக்க வேண்டும்.*

*எடுத்துப படிக்கப் படிக்க எனது ரத்தம் கொதிக்க ஆரம்பித்தது. அதிர்ச்சி. ஆத்திரம்.*

*ஏறக்குறைய 100 கடிதங்கள்!*

*எல்லாவற்றிலும் அவள் தன் திருமணம் பற்றி எழுதியிருக்கிறாள். இவனும் பதில் போட்டிருக்க வேண்டும. தை பனிரண்டிற்காக காத்திருப்பதாக அவள் போன பிப்ரவரியிலிருந்தே எழுதியிருக்கிறாள்.*

*அப்படியென்றால்... அப்படியென்றால் இவன் என்னை ஏமாற்றியிருக்கிறான்! வஞ்சகன்! சும்மா இருந்தவளை உசுப்பிவிட்டு... ஆசைகாட்டி... அனுபவித்து... வெளியூரில் வந்து கூட இப்படி ஒரு மோசடியா?*

*அனுபவிக்க ஒருத்தி, வாழ்க்கைக்கு வேறொருத்தியா?*

*இவன் இப்படிப்பட்ட மோசக்காரன் என்பது அவளுக்குத் தெரியுமா! இவன் இன்னும் எத்தனை பேர்களை இப்படி ஏமாற்றினானோ? இந்த மாதிரி மோசக்காரன் எனக்கு கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை – இவனையே நம்பி இருக்கிற அந்த சுனிதாவுக்கும் கூடாது.*

*இந்தத் திருமணம் நடக்கக்கூடாது. தடுத்தாக வேண்டும்.*

*எப்படி? எப்படித் தடுகப் போகிறேன்?*

*இவன் ஊருக்குப் போனால்தானே நடக்கும்?*

*சட்டென யோசனை வர, அவனது சூட்கேஸைத் திறந்து அதிலிருந்த பாஸ்போர்ட்டை எடுத்தேன். இரண்டாய், நான்காய் அதைக் கிழித்து, பிளவுஸில் செருகிக் கொண்டு எனது ஹாஸ்டலை நோக்கி நடக்க ஆரம்பித்தேன்*

## *21. பச்சைக்கல் கடுக்கன்*

*முருகேசன் தபால்களை எடுத்துக கொண்டு போஸ்டாபீஸை விடடு வெளியே வந்தபோது மழை தூற ஆரம்பித்தது. போச்சு, இன்றைய பிழைப்பு கோவிந்தா தான் என்று நினைத்துக கொண்டான்.*

*சாதரணமாய் ஒன்பது மணிக்கு இறங்கினால் கடிதங்களை டெலிவரி பண்ணிவிட்டு பன்னிரண்டிற்கெல்லாம் வீட்டிற்கு போய் விடலாம். மழைபெய்வதால் அது முடியாது. என்னதான் குடைபிடித்துக் கொண்டு சைக்கிள் மிதித்தாலும் ஒன்று அவன் நனைய வேண்டும். இல்லையென்றால் கடிதங்கள்!*

*மழை விடட்டும் என்று பக்கத்து பில்டிங்கில் ஒதுங்கின போது மனைவி காமாட்சி காது கடுக்கனுடன் பக்கத்து மளிகைக் கடையில் சாமான் வாங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது.*

*அவளைவிட அந்தக் கடுக்கனே அவனுடைய கவனத்தை ஈர்த்தது. அதை பார்க்கப் பார்க்க அவனது மனது கனக்க ஆரம்பித்தது. அவள் ரொம்ப நாட்களாகவே அந்தப் பச்சைகல் பதித்த கடுக்கன் வேண்டும் என்று நச்சரித்துக் கொண்டிருந்தாள்.*

*ஒரு போஸ்ட்மேனின் சம்பளத்தில் வீட்டு செலவை கவனிப்பதா, குழந்தைகளின் படிப்பா, துணிமணிகளா...? எந்தச் செலவை என்று கவனிப்பது, வீட்டு வாடகை வேறு. இவற்றுக்கிடையில் அவனால் பச்சை கல் கடுக்கனைப் பற்றி நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை.*

*அவளும் விடுவதாக இல்லை. அவள் நச்சரிப்பதற்கும் கூட காரணமிருந்தது. கல்யாணம் பண்ணி வந்த போது அவளக்குப் பிறந்த வீட்டில் அதுமாதிரி கடுக்கன் போட்டு அனுப்பியிருந்தார்க்ள்.*

*அந்தச் சயமத்தில் முருகேசனுக்குச் சீட்டாட்டப் பழக்கமிருந்தது. அவள் ஊருக்குப் போன தருணம் பார்த்து அவற்றை விற்று சீட்டாடித் தொலைத்து விட்டாள்.*

*அன்றைக்கு பிடித்தது சனி!*

*அதன்பிறகு அவன் சூதாட்டத்தையே மறந்துவிட்டாலும் கூட அவள் கடுக்கனை மறப்பதாக இல்லை. தினம் நான்கு முறையாவது கடுக்கனைச் சொல்லி காமாட்சி இடிப்பாள். அவளுடைய இடிதாங்காமல், என்ன செய்யலாம் என்று அவன் யோசித்துக் கொண்டிருந்த போதுதான் தபால் ஒன்றின் மூலம் வழி பிறந்தது. ஒருவாரம் முன்பு.*

*மழைநாள் ஒன்றில் வழக்கம்போல தபால்களை அடுக்கி வைத்த போது கவர் ஒன்று நனைந்து, அதற்குள் பணநோட்டு இருப்பது தெரிந்தது. பணத்தைப் பார்த்ததும் அவனது முகம் மலர்ந்தது. அவசரமாய் எடுத்து எண்ணி பார்த்தான். மூன்று ஐநூறு ரூபாய் நோட்டுக்கள்!*

*பணத்தை கவருக்குள் வைத்து அனுப்புவது சட்டப்படி குற்றம்! இப்படி அனுப்பும் பணத்திற்கு காரென்டியும் இல்லை. யாரும என் பணம் களவு போயிற்று என்று*

*கம்ப்ளெயின்ட் பண்ணவும் முடியாது. பணம் சரியாய் போய் சேர்ந்தால் பிழைத்தார்கள். இல்லாவிட்டால் திருடனுக்குத் தேள் கொட்டின மாதிரி பேசாமல் இருக்க வேண்டியதுதான்!*

*முருகேசனுக்கு அதை பார்க்கப் பார்க்க கடுட்கன் ஆசை எழுந்தது. பேசாமல் இதை எடுத்து கடுக்கன் வாங்கிக் கொடுத்து விட்டால் என்ன? பெண்டாட்டி எனும் ராட்சஷியின் நச்சரிப்பிலிருநது தப்பிக்கலாமே!*

*கவரில் இருந்த விலாசத்தைப் பார்த்தான். ராஜம்மாள், குழிவளை, குமரி மாவட்டம் என்றிருந்தது. ஃப்ரம் அட்ரஸில் – ‘‘ராஜேந்திரன், பாம்பே‘‘ !*

*முருகேசனுக்கு அந்த ராஜம்மாளையும் தெரியும். ராஜேந்திரனையும் தெரியும். ஆனால் நெருக்கமேல்லாமில்லை. ஓகோ.... மணியார்டர் சார்ஜை எப்போப் பார்த்தாலும் ‘‘எனக்கு கவர் வந்திருக்கா தம்பி...?‘‘ என்று கேட்கிறாளா...?*

*இன்று கவர் வந்திருக்கிறது. யாருக்கு தெரியப் போகிறது...? அமுக்கு! அப்படிச் செய்வது தவறு என்று உள் மனது எச்சரித்தாலும் கூட, பச்சைக் கல் கடுக்கன் அவனை உசுப்பிற்று.*

*பணத்தை எடுத்து வைத்துக கொண்டு, ‘‘அன்புள்ள அம்மாவிற்கு இத்துடன் நீ கேட்டபடி பணம் அனுப்பியுள்ளேன். பெற்றுக் கொண்டு கடிதம் போடவும்‘‘ என்று எழுதப்பட்டிருநத கையளவு பேப்பரைக் கிழித்து எறிந்தான்.*

*பிறகு அத்தோடு கொஞ்சம் பணம் புரட்டி கடுக்கன் வாங்கிப் போன போது காமாட்சி வாயிறென மலர்ந்தாள். பற்பசைக்குப் போஸ் கொடுத்தாள்.*

*‘‘ஏதுங்க பணம்...?‘‘*

*‘‘அதை பற்றி உனக்கேன்! ஒரு வருஷமா சீட்டு கட்டினேன்‘‘ என்று கதை கட்டினேன்.*

*‘‘நல்லாயிருக்கா.‘‘*

*‘‘பிராமாதங்க!‘‘ என்று அகமும் தடித்த புறமும் குளிர்ந்தாள். அப்பாடா... நச்சரிப்பு விட்டது என்று அவனும் சந்தோஷப்பட்டான். ஆனால் அந்த ராஜம்மாளைப் பார்க்கும் போதெல்லாம் உறுத்தல் எழும். நாலு வீடு தாண்டினால் எல்லாம் மறந்து போகும்.*

*இப்போதும் கூட அப்படிதான். காமாட்சி போனதும் கடுக்கன் நினைவுகளும் மறந்து போயின. அதறக்ள் மழை விட்டிருக்க அவன் சைக்கிளில் ஏறி கிளம்பினான்.*

*மேலத்தெருவின் கோடிவீடு.*

*ராஜம்மாள் கொல்... கொல்லென இருமிக் கொண்டு. கர்ர்... கர்ரென இழுத்துக் கொண்டு திண்ணையில் அமர்ந்திருந்தாள். அவளுடைய உடலெல்லாம் தளர்ந்து போய், தோட்ல சுருங்கியிருந்தது. பார்வை மங்கிக் கொண்டு வந்தது.*

*அவளுக்கு அறுபது வயதிற்கு மேலாகிறது. வயதிற்கேற்ற முதிர்ச்சியும் தளர்ச்சியும் அவளைப் பலகீன படுத்தியிருந்தது. வீட்டில் கவனிக்க ஆளில்லை சரியான ஆகாரமும் இல்லை. போதும் போதாததிற்கு கொஞ்சநாட்களாய் ஆஸ்துமா தொந்திரவு வேறு.*

இழுப்பும் இருமலும் ஆரும்பித்த சமயத்திலேயே டாக்டரிடம் போயிருந்தால் ஓரளவிற்கு கண்ட்ரோல் பண்ணியிருக்கலாம். இருமல் என்ன செய்துவிடும் என்று அவள் அலட்சியமாயிருந்து விட்டதில் நோய் முற்றிவிட்டது. அதன்பிறகு அக்கம்பக்கத்தவர்கள் ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போய் காட்டினர்.

நோய் முற்றிவிட்டது. தீவிர சிகிச்சையளிக்க வேண்டும் என் பெட்டில் இருக்க வேண்டும் என்றும் அதற்கக் குறைந்தது ஆயிரம் ரூபாய் ஆகும் என்றும் டவுனில் சொல்லிவிட்டார்கள்.

“அக்கம் பக்கத்தவர்கள் “நாங்கள் பணம் தருகிறோம். நீ போய் பெட்டில் சேர்ந்து விடு“ என்று சொன்னதைக் கூட அவள் கேட்கவில்லை. பிடிவாதம் பிடித்தாள்.

“ஆஸ்பத்திரியில் போய் யாரால் இருக்க முடியும்... என்னை விடுங்க!“

“கிழவி! நோயோட இங்கிருந்தால் உன்னை யார் கவனிச்சுக்குவா...? பேசாமல் சொல்றதைக் கேள்!“

அவள் கேட்பதாக இல்லை. “பெட்டில் அட்மிட்டாகணும்னா அதை நான் பார்த்துக கொள்கிறேன். என்னை கவனிக்கவும் எனக்குப் பணம் அனுப்பவும் என் மகன் இருக்கான்“ என்று பிடிவாதமாய் மறுத்துவிட்டாள்.

அதன்பிறகு ஊர்க்காரர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அவளுக்கு எதிரி அவளுடைய பிடிவாதம் தான். ஆரம்ப நாளிலிருந்தே அவள் அப்படித்தான். அடுத்தவர்கள் சொல்வதையே காதில் வாங்கிக் கொள்ளமாட்டாள். அவளுடைய நோக்கப்படித்தான் நடப்பாள். அவளுடைய குணமறிந்திருந்ததால் யாரும் அவளை எந்த காரியத்திற்காகவும் வற்புறுத்துவதில்லை.

அவளுடைய மகன் ராஜேந்திரன் கூட அப்படிதான்.

அவன் படித்து முடித்து இங்கே வேலை கிடைக்காமல் பாம்பேக்குப் போய் வேலை தேடிக் கொண்டதும் அவளைத் தன்னடன் வந்து விடும்படி அழைத்தான். ஆனால் அவள் மறுத்துவிட்டாள்.

“புரியாத ஊரிலும் புரியாத பாஷையிலும் என்னால் க்ர்லந்தள்ள முடியாது!“

“புரியாத பாஷைன்னா என்னம்மா... அதான் நானிருக்கேனே... ஊரில் ஒத்தாசைக்கு ஆளில்லாமல் நீ தனியாய் என்ன பண்ணுவாய்?“

“எனக்கெதுக்குடா ஒத்தாசை? என் தேவைகளைக் கவனிச்சுக்க துப்பில்லாத அளவுக்கு நான் என்ன இன்னைக்கோ நாளைக்கோன்னு இழுத்துகிட்டா இருக்கேன்? உன் வேலையைப் பாரு... !“

“இருந்தாலும்மா... எனக்கு மனசு கேட்கலே. மத்தவங்க என்னை என்ன சொல்வாங்க... பெத்தத் தாயை விட்டுட்டு இவன் சொகுசா இருக்கான்னு புரளி பேசமாட்டாங்களா?“

“பேசினா பேசட்டும், பேசறவங்க நாக்கு அழிஞ்சுப் போகும்! நீ கிளம்பு! நான் இந்த வீட்டையும், ஊரையும் விட்டு எங்கும் வருவதாயில்லை. செத்தாலும் இந்த வீட்டில்தான் சாவேன்!“

*அதற்கு மேல் ராஜேந்திரனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. மனபாரத்துடன் பாம்பே போய்விட்டான். ராஜம்மா இன்னொரு விஷயத்திலும் கூட பிடிவாதம் பிடித்தாள். அது-*

*மணியார்டர். அவன் மணியார்டர் அனுப்ப, இரண்டு மறை வாங்காமல் திருப்பி அனுப்பிவிட்டாள். ஏம்மா இப்படி பண்றே என்று நேரில் வந்தபோது கேட்டான்.*

*"எதுக்கு மணியார்டர்? எனக்கு நீ சம்பாதிச்ச பணம்தான் வேணும்!"*

*"நான் சம்பாதிச்ச பணத்தை தாம்மா உனக்கு அனுப்பறேன்!"*

*"நீ சம்பாதிச்ச பணம்தான். ஆனா தபால்காரனில்லே கொண்டு வந்து கொடுக்கிறான். நான் என்ன அனாதையா இல்லை வக்கில்ல்தவளா...?*

*"நீ சம்பாதிச்சு கொண்டு வந்து என் கைல கொடுக்கணும்."*

*"அது எப்படிம்மா முடியும்? மாசம் மாசம் இதுக்காக நான் ஊருக்குப் வந்துப போக முடியுமா.?"*

*"அப்போ வரும்போது கொடு!"*

*"இடையில் தேவைப்பட்டால் நீ என்ன பண்ணுவாய்? பேசாமல் உன் பெயரில் அக்கவுண்ட் ஒப்பன் பண்ணி நான் பேங்கிற்கே அனுப்பிடறேன். நீ வேண்டும் என்கிற போது போய் எடுத்துக் கொள்கிறாயா....?"*

*அவள் பிடிவாதமாய் மறுத்துவிட்டாள். "இல்லை, எனக்கு நீ வாங்கின சம்பளம், அதே பணம் – அதே நோட்டுக்கள்தான் வேண்டும். உன் சம்பளத்தை வாங்கும் போது எனக்கு அதுல ஒரு திருப்திடா. என்ன சொல்கிறாய் நீ. என் ஆசையை நிறைவேற்றுவாயா...?"*

*அவனால் அவளைப் புரிந்துக் கொள்ள முடியவில்லை. பைத்தியக்காரத்தனம் என்று நினைத்தான். தாயின் மேல் அவனுக்குக் கோபம் வந்தது. பிடிவாதத்திற்கும் ஒரு அளவு வேண்டும். என் சம்பளத்தை அப்படியே கொண்டு வந்து கொடுத்துவிட்டால் அதில் என்ன இழவு திருப்தி வந்துவிடுமோ தெரியவில்லை!*

*"உனக்குத் திருப்தி வேணும்னா, நான் அங்கே வேலையை விட்டுட்டு இங்கே வரவேண்டியதுதான்!"*

*"வந்திரு. சம்பாதிக்காட்டியும் உன்துணை எனக்குக் கிடைக்குமே!"*

*கடைசியில் வேலையையும் விடமுடீயாமல் அவளையும் திருப்திபடுத்தியாக வேண்டிய நிர்பந்த்தில்தான் அவனுக்கு இந்த யோசனை உதித்தது. அம்ம்விற்கு நம் பணம், நம் சம்பள பணம் தானே வேண்டும். பேசாமல் அதே நோட்டுககளை கவருக்குள் வைத்து அனுப்பிவிட்டால் என்ன...?*

*அப்படியே அனுப்ப ஆரம்பித்திருந்தாள். அவற்றை பெறும்போது ராஜாம்மாவிற்கு ஒரு சந்தோஷம். அப்பணத்தை மகன் நேரிலேயே வந்து தன்னிடம் தருவது போல பாவித்துக் கண்களில் ஒற்றிக் கொள்வாள்.*

இரண்டு வாரங்கள் முன்பு ஆஸ்பத்திரி செலவிற்காக ஆயிரம் அனுப்பும்படி மகனிற்கு எழுதியிருந்தாள். அவன் – அனுப்பி விடுவான் எனத் தினம் வாசலில் வந்து காத்துக கொண்டிருக்கிறாள். பணம் இன்று வந்துவிடும், இதோ இன்று என தினம் எதிர்பார்ப்பு. ஆனால் எப்படி வரும்?

அதைத்தான் முருகேசன் அடித்துவிட்டானே! அவளும் சளைக்காமல் தினமும் கேட்டுக் கொண்டிருக்கிறாள்.

இன்றும் முருகேசன் சைக்கிளில் போக, "தபால் தம்பி! எனக்கு கவர் வந்ததா..?"

"இல்லை கிழவி" என்று சொல்லிவிட்டு அவன் அவளுடைய முகத்தைப் பார்க்கப் பிடிக்காமல் – பார்க்கும் தைரியமில்லாமல் பறந்துப் போனான். இப்படிதான் தினம் தினம் ஓடி ஒளிகிறான்.

ஒருவாரத்திற்க பிறகு ஒரு நாள்.

வழக்கம் போல முருகேசன் தபால் பட்டுவாடாவிற்கு அந்தத் தெருவில் நுழைந்தபோது ராஜம்மாவின் வீட்டில் ஒரே கும்பல்! விசாரித்தபோது ஆஸ்துமா முற்றி அவள் இறந்துப்போனாள் என்றால்கள். அவனுக்குத் தூக்கிப் போட்டது.

அவனுக்கு மூச்சடைத்தது. துக்கம் நெஞ்சைப் பிசைந்தது. அவளுக்கு நோய் முற்றிவிட்டதா... அதனால்தான் இறந்து போனாளா...? எல்லாவற்றிற்கும் காரணம் நாம்தான். நம்முடைய திருடடுத்தனம்தான்!

அவளுடைய மகன் ஆஸ்பத்திரிச் செலவிற்காக அனுப்பின பணத்தைத் தான் நாம் களவாடி விட்டோமோ...? அந்தப் பணத்தை மட்டும் நாம் எடுக்காமலிருந்தால் அவளுடைய உயிர் போயிருக்காதோ...? நாம் பாவி! மன்னிப்பே பெற முடியாத பாவி! என்ன காரியம் செய்துவிட்டோம்?

அவன் தனிமையில் போய் அழுதான். மனைவியின் பச்சைக்கல் கடுக்கனைப் பார்க்கும் போதெல்லாம் அவனுக்கு அவன் மேலேயே வெறுப்பு வரும். நாம் செய்த பாவத்திற்குப் பரிகாரம் செய்தாக வேண்டும். எப்படி.. எப்படி? அவன் மன நிம்மதியின்றி அலைந்தார்கள்.

கிழவியின் மரணச் செய்தி ராஜேந்திரனக்குப் போனில் தெரிவிக்கப்பட்டு, விமானம் பிடித்து அரக்கப் பரக்க அவன் வந்தபோது, கூடவே இன்னொரு சோக செய்தியையும் கொண்டு வந்தான். திருவனந்தபுரம் வந்ததும அவனுடைய பெட்டி, அதில் வைக்கப்பட்டிருட்நத பணம், உடைகள் எல்லாமே பறிபோயிற்றாம். யாரோ அடித்துக் கொண்டு போய்விட்டார்களாம்.

திருவனந்தபுரத்திலிருந்து டாக்ஸி பிடித்து வந்த சார்ஜைக் வட கொடுக்க முடியாமல் அவன் சங்கடப்பட்டான். பணத்திற்காக என்ன பண்றது... என யோசித்த வேளையில், அம்மா போன துக்கமும். டாக்ஸிகாரனின் கெடுனிடியும் அவனை தளர வைத்தது. விபரம் அறிந்த முருகேசன் ஓடிப்போய் பீரோவில் இருந்த அந்தப் பச்சைக்கல் கடுக்கனை எடுத்து வந்தான்.

அடகுக் கடையில் விற்றதில் இரண்டாயிரம் தேறிற்று. அதை ராஜேந்திரனிடம் கொடுத்து, “இந்தாப்பா இதை வைத்துக் கொண்டு டாக்ஸியை அனுப்பு. அம்மாவின் காரியங்களையும் நல்லபடியாய நடத்து!“ என்றான்.

அதை வாங்கும்போது ராஜேந்திரனின் கண்கள் நனைந்துப போயின. “உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலே சார். நீங்க செஞ்ச உதவியை நான் ஆயுசுக்கும் மறக்க மாட்டேன். பாம்பே போன உடனே உங்க பணத்தை திருப்பி அனுப்பிடறேன் சார்“ என்று உள்ளம் உருகினான்.

“வேண்டாம்ப்பா. நீ திருப்பி அனுப்ப வேண்டாம். இது என்னோட பணமில்லை. உன்னோடதுதான். நீ அனுப்பினதுதான். இது உனக்கு சொந்தமானதுதான். நீ அனுப்பத் தேவையில்லை. அப்படியே அனுப்பினாலும கூட நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். திருப்பிவிடுவேன்!

முருகேசன் மனதிற்குள் சொல்லிக் கொண்டான்.

அவனுடைய மனபாரமும உறுத்தலும கொஞ்சம் குறைந்த மாடிதரி இருந்தது. இருந்தாலும்... ராஜேந்திரன் அனுப்பின பணத்தை வட்டிபோட்டு அவனிடம் தந்துவிட்டோம். ஆனால் அவனுடைய தாயை...? அவன் உருகிப் போனான்.

## *22. கல்லும் கரையும்*

*சே! இப்படி பண்ணிவிட்டோமே... என்று பாலனுக்கு வருத்தமாயிருந்தது. அவனுடைய கண்களில் குழிவிழுந்து அழுக்காயிருந்தான். முகம் சோர்ந்து போயிருநதது. வயிறு ஒட்டி கபகபத்தது.*

*சட்டையில் வியர்வை நாறிற்று. தலையெல்லாம் எண்ணெயில்லாமல், வாரப்படாமல் அரித்தது.*

*அவனுக்கு பதினைந்து வயது. பத்தாங்க கிளாஸில் சமர்த்தாய்ப் படித்துக் கொண்டு வீட்டில் சொகுசாயிருந்தவனுக்கு இது தேவை தானா என வெறுப்பு வந்தது.*

*பாலன் நன்றாக படிப்பான். வீட்டில் பாசமான தாய்! படுத்த படுக்கைகளைக் கூட அவனை மடித்து வைக்க விடாமல் பொத்தி பொத்தி வளர்த்து வந்தாள். அன்பு செலுத்த அக்காவும் தங்கையும் உண்டு.*

*அப்பாவுக்குக் கௌரவமான உத்யோகம். எல்லாவற்றையும் உதறி எறிந்துவிட்டு நண்பன் ரவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு வீட்டை விட்டு வந்து நான்கு நாட்களாயிற்று.*

*ரவி அத்தனை நல்லவனில்லை. சரியாய் படிக்க மாட்டான். கிளாஸிற்கு வருவதே அபூர்வம். வந்தால் வாத்தியாரிடம் அடிபடுவான். வராவிட்டாலோ வீட்டில் அடி!*

*அவன் அவ்வப்போது பாலனுக்கு துர்போதனைகளை ஏவுவான். "வா சினிமா போகலாம்" என்பான்.*

*"ம்கூம். தப்பு!"*

*"எது தப்பு...? சினிமாவா...? யார் சொன்னது? நிறையப் பார்க்கணும். அப்போதான் மூளை வளரும். விசாலமாகும். இந்தக் கிராமத்தில் இருந்துக் கொண்டு நம்மால் ஊட்டியை அனுபவிக்க முடியுமா? கொடைக்கானல் போக முடியுமா... இல்லை மெட்ராஸ்தான் கைக்கு எட்டுமா...?"*

*"மாஸ்டருக்கு தெரிஞ்சால் திட்டுவார்."*

*"தெரிஞ்சால்தானே? எப்படித் தெரியும்...? நீ சினிமா ஃபீல்டுக்கு போகணுமா வேணாமா...?"*

*"போகணும்."*

*"அப்போ படிப்பை நிறுத்து!"*

*"ஏன்?"*

*"படிப்புக்கும் சினிஃபீல்டுக்கும் சம்பந்தமில்லை. அது வேறு உலகம். அங்கே படிப்பு வேணாம். திறமை போதும். கொஞ்சம் உழைக்கணும். அப்புறம் லக்."*

*"எனக்குப் புரியலை."*

*“புரிய வைக்கிறேன். கமலை பார்! ரஜினி! பாக்யராஜ், பாரதிராஜா! இளையராஜா, பாண்டியராஜனெல்லாம் என்னத்தை படிச்சாங்க? விஜயகாந்த் என்ன பட்டம் வாங்கினார்? என்னுடன் வா. உன்னைப் பெரிய ஆளாக்கிக் காட்டறேன்!“*

*“இல்லை. நான் படித்து கலைக்டராகணும்!“*

*“போடா ஃபூல்! கலைக்டருக்கு போட்டாப் போட்டி! ராத்திரி பகலா கஷ்டப்பட்டு படித்து ஜெயிச்சாலும அவங்களுக்கு என்ன பவர் இருக்கு? ஆட்சிக்கும் மந்திரிக்கும் சலாமடிக்கணும். இல்லேன்னா தூக்கி எறிஞ்சிருவான். நடிகன்னா பணத்துக்குப் பணம். புகழுக்குப் புகழ்! ரசகர்கள், கார், பங்களா! சுலபமா சம்பாதிக்கலாம். நடிகைங்களோட கட்டிப் புடிச்சு டுயட் பாடலாம்!“*

*“எனக்கு குழப்பமாயிருக்கு.“*

*“என்னுடன் வா. சீக்கிரமே தெளிவாயிரும!“*

*“ம்கூம். அப்பா அம்மா எம்மேல கொள்ளைப் ப்ரியம் வச்சிருக்காங்க. வருத்தப்படுவாங்க.“*

*“ஒரு லட்சியத்தை நோக்கிப் போகும்போது இதெல்லாம் சகஜம். சொந்த பந்தங்க்ளையும் பாசத்தையும் விட்டுக்கொடுத்து நான் ஆகணும். அப்போதான் வாழ்க்கையில் முன்னேற முடியும்!“*

*ரவி பேச்சில் கெட்டிக்காரன். வாயாலேயே வானத்தை வளைப்பவன். முதலில் கெடுதலாய் தெரிந்த அவனது பேச்சுக்கள் போகப் போக இனித்தன. அவன் சொல்வதெல்லாம் நிஜம் என தோன்றிற்று.*

*சினிமாவோடு ஒப்பிட்டபோது படிப்பு பாரமாய் தெரிந்தது. வகுப்பு சுமையாயிற்று. வாத்தியார்கள் விரோதியாயினர், பரீட்சை கசந்தது. யதார்த்தம் மறந்தது. கரைப்பார் கரைத்ததில் கல்லும் கரைந்தது. அதன் பிறது-*

*மனது வேண்டாத மாதிரியெல்லாம் சிந்திக்க ஆரம்பித்தது.*

*வீட்டில் சுதந்திரமில்லை. சுயமாட்டய எதையும் செய்யவிடுவதில்லை. என் திறமையை மதிப்பதில்லை. பாசம் கொட்டுகீறேன் என்று கட்டிப் போட்டிருக்கிறார்கள்.*

*நான் என்ன சின்னப் பையனா? எனக்கும் (பூனை) மீசையிருக்கிறது. கடைக்குக் கூட அனுப்புவதில்லை. தாயே போகிறாள். தனியாய் சினிமா விடுவதில்லை. கேட்டால் குடும்பத்துடன் போவோம் வா! எல்லாப் படங்களையும் குடும்பத்துடன் பார்க்க முடீயுமா...?*

*பார்க்க முடியாத படங்கள் வேண்டாம். உன்னைக் கெடுத்து விடும் என உபதேசம். அவற்றை நினைத்தால் எரிச்சலாய் வந்தது. எத்தனை கட்டுப்பாடுகள்!*

*வெளியே சாப்பிடாதே! வெயிலில் சுற்றாதே! உடம்புக்கு வந்திரும். ஆமாம், வெயிலில் சுற்றுகிறவர்களுக்கெல்லாம் உடம்புக்கு வந்துவிடுகிறதா என்ன...? வேண்டா பயமுறுத்தல்கள்!*

*பசங்கள் மதுரை பழனின் ஊர்சுத்தி பார்க்கப் போறாங்கம்மா – நானும் போறேன் என்றால் அதற்கம் அனுமதி கிடையாது.*

*“வேணாம். பசங்களோடு சேர்ந்தால் கெட்டுப் போவாய். ஸ்கூலில் டூர் போனால் போ. இல்லாட்டி நாங்க அழைச்சுப் போகிறோம்!“*

*அடக்குமுறை. பையனின் மேல் அவநம்பிக்கை. நீ அப்பாவி! உனக்கு உலகம்தெரியாது என்று அடக்கி அடக்கியே அவனை ஒன்றும் தெரியதவனாக்கிவிடும் கோழைத்தனம்.*

*அவனுக்கு நல்லது செய்வதாய் நினைத்து நினைத்தே சோம்பேறியாக்கிவிடும் பெற்றோர்களின் லிஸ்டில் பாலனின் பெற்றோரும் இருந்தனர்.*

*அவனவன் காரியங்களை அவனவனே செய்துட்க கொள்ள அனுமதிக்க வேண்டும். அவன் பாவம் – விளையாடட்டும். படிக்கட்டும் என்கிற பச்சாதாபம்.*

*எதுபாவம்! ஹாஸ்டலில் தங்கிப் படிப்பவர்கள் தங்கள் காரியங்களைத் தாங்களே செய்துக் கொள்வதில்லையே...? அவர்கள் மட்டும் நன்றாய் படிக்காமலா இருக்கிறார்கள்...? குதர்க்கமான கேள்விகள் எழுந்தன.*

*நண்பனின் போதனையில் நல்ல விஷயங்கள் கூட மோசமாய் தோன்றிற்று. அதிக பாசமே சலிப்பைத் தந்தது. நான் வளர்ந்து விட்டேன். உங்களின் ஒத்தாசையில்லாமலேயே என்னால் வளரமுடியும். பெரியாளாக முடியும் என்கிற வீம்பு வந்தது.*

*ஒரு ராத்திரியில் கையில் கிடைத்த ஐநூறு ரூபாயுடன், போட்டிருநத உடையுடனேயே ரவியுடன் சேர்ந்துக் கொண்டு வீட்டை விட்டு ஓடிவந்துவிட்டான்.*

*அவர்கள் அதுவரையில் சினிமாவில் மட்டுமே பார்த்திருநத ஊட்டியை, நேரில் பார்த்தனர். பெங்கங்ளூர், மைசூர், ஏர்காடு, கோவை எனச் சுற்றினர்.*

*முதுல் நாள் சந்தோஷமாக் கழிந்தது. கையில் காசு தீர்ந்ததும் மூனறாம் நாள் வீட்டு நினைவு எடுத்தது. நான்காம் நாள் சாப்பாட்டுப் பிரச்சனை. ரவி அவனை ஹோட்டல் ஒன்றில் சேர்த்து விட்டு விட்டு நழுவிக் கொண்டான்.*

*ஹோட்டலில் மானம் போயிற்று, தொட்டதிற்கெல்லாம் அடித்தனர். குற்றம் சுமத்தினர். பாழய்ப் போன வயிற்றுக்காக எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது.*

*சொகுசு ஹோட்டல்தான். அங்கே வருபவர்களெல்லாம் மாமனிதர்கள்தான். ஆனால் அவர்களுக்கு மனிதனை மனிதனாக நடத்தும் பாங்கு துளியும் தெரியவில்லை.*

*அவர்களின் உதாசீனம் மானத்தை கிள்ளிற்று. அடித்து நொறுக்கலாமா என்கிற ஆவேசத்தை கிளப்பிற்று. அவர்களின் மேல் ஆவேசப்பட்டு என்ன பிரயோஜனம்?*

*தவறு நம்மேல், எல்லாவற்றையும் முன்பே யோசித்திருக்க வேண்டும். படிப்பு ஏறாதவர்களும், படிக்க முடீயாதவர்களும், வீட்டை விட்டு ஓடிவருகறார்கள். ஹோட்டலை பிழைப்பிற்று நாடுகிறார்கள்.*

*நமக்கென்ன தலையெழுத்து! எனக்கு எதில் குறை? படிப்பில்லையா...? வசதியில்லையா...? இல்லை வீட்டினர்தான் அன்பு செலுத்தவில்லையா...?*

*ரவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு வந்தது திமிர்! பேதமை!*

*அம்மா! நான் தப்பு செய்துவிட்டேன்! அப்பா... என்னை மன்னிப்பீர்களா...? அவனக்கு அக்காவின் சோகமும் ஞாபகத்திற்கு வந்தது. அண்ணா... அண்ணா என உருகும் தங்கை!*

*பையனின் கை நோகுமே எனத் துணிகள் துவைத்து தவந்து, சலவை பண்ணி, நோட்டு புத்கங்களை அடுக்கி தந்து, ஷு பாலிஷ் போட்டு, அவனுக்குப் பிடிக்கும் பிடிக்கும் என பிடித்தவற்றையாய் சமைத்து ஊட்டாத குறையாய் பரிமாறும் தாய்! அவளின் அருமை நமக்கு புரியவில்லையே!*

*வீட்டில் அன்பில்லை – வசதியில்லையென்றாலாவது பரவாயில்லை. மனதைத் தேற்றிக் கொள்ளலாம். ஆனால் என் வீட்டில் எதில் குறை வைத்தார்கள்? நான் ஏன் இந்த முடீவுக்கு வந்தேன்!*

*இனி எப்படி திரும்பிப் போவேன்? வீட்டினர்கள் முகத்தில் எப்படி விழிப்பேன்? ஸ்கூலிலும் வெளியேவும் அப்பாவுக்கு எத்தனை அவமானம்! அவற்றையெல்லாம் அவர் எப்படி தாங்கிக் கொள்வார்...?*

*அப்பாவும் அம்மாவும் என் மேல் கோபமாய் இருப்பார்களா... நான் திருமபிப் போனால் ஏற்றுக் கொள்வார்களா...? பாலன் நினைத்து நினைத்து வருந்த ஆரம்பித்தான்.*

*அதேசமயம் –*

*ஊரில் அவனைவிட அதிகமாய் பெற்றோர் உருகிக் கொண்டிருந்தனர். தாயும் சகோதரிகளும் சாப்பிடவில்லை. தந்தை நடைபிணமாயிருந்தார்.*

*ஸ்கூலில் விசாரித்து, அவனது போக்கிடம் தெரியாமல் சங்கடப்பட்டார். “அவன் பசிதாங்கமாட்டானே! அவனுக்கு உலகம் தெரியாதே. எங்கேப் போய் கஷ்டப்படுகிறானோ“ என தாய் கவலைப்பட்து. போனதுதான் போனானே... இன்னும் கொஞ்சம் பணம் எடுத்துப போயிருக்கக்கூடாதா... எனப் புலம்பிற்று.*

*தாயின் நச்சரிப்புத் தாங்காமல் தந்தை அவனை எப்படியும் தேடிக் கண்டு பிடித்து விடுவதெனப் புறப்பட்டார். அவனை எங்கே என்று தேடுவது! எந்த நகரத்தில் போய் அலைவது? கடலில் கடுகைத் தேட முடியுமா?*

*பசங்களிடம் விசாரித்தால் அவனது சினிமா ஆசை புரிந்தது. ‘கெட்டும பட்டணம் சேர்‘ என்பார்கள். அவன் பட்டணத்திற்குத்தபன் போயிருப்பான்!*

*சினிமா ஆசையில் ஸ்டுடியோக்களில்தான் ரவுண்டடிப்பான் என மூன்று நாட்கள் சுற்றிப் பார்த்தா. எந்த் தகவலும் இல்லை. பொது இடங்கள், ஹோட்டல்கள், லாட்ஜ், பீச், ஸ்டேஷன், ம்கூம் பலனில்லை.*

*போலீஸில் தெரிவிக்க, ஊரில் F.I.R. போட்டு வாருங்கள் என்றனர். “பாலா. நீ எங்கே இருக்கிறாய்?.., எங்கிருந்தாலும் வந்துவிடு“ எனப் பேப்பரிலும் டி.வி.யிலும் கொடுக்கலாமா... அவனது படத்தை வெளியிடலாமா...?*

*“வேண்டாம். அவனைப் பற்றி பேப்பரில் வந்தால் வெளியே அசிங்கமாகும். அவனது மனநிலை பாதிக்கும். அடுத்தவர்களின் முன்னிலையிலும் அவமானமாகும். திரும்ப வந்து பழைய வாழ்வை தொடருவதிற்கும் அவனுக்குச் சங்கடமாகும்.“ பெரியவர் ஒருவர் தேற்றினார்.*

*“கவலைப்படாதீங்கள். நன்றாகப் படிப்பவன். நல்ல அன்பைப் பெற்றுக் கொண்டிருந்தவனுக்கு ஒரு வாரத்திற்கு மேல் வெளியே தாக்கு பிடிக்க முடியாது. கூடிய சீக்கிரமே தவறை உணர்ந்து திரும்பி விடுவான். அவன் திரும்புவது முக்கியமல்ல. அதன்பிறகு அப்படி நடந்ததுக்காக கடித்ந்துக கொள்ளாமல் இருப்பது தான் முக்கியம். பழை ரணம் எப்போதும் மனதில் வடுவாயிருக்கும். அவற்றைச் சாந்தமாய் ஆற்ற வேண்டும கோபப்படக் கூடாது!“*

*“இல்லை. அவன் மேல் துளியும் கோபமில்லை. அவன் வந்தால் போதும்!“ தாயும் தந்தையும் உருகினர்.*

*ஒருவாரம் ஓடிப்போயிற்று. அதற்கு மேலும் பாலனுக்குத் தாஙக முடியவில்லை. பேப்பரில் தன்னைப் பற்றி செய்திகளை எதிர்பார்த்து, ஏங்கி கடைசியில் – “அன்புள்ள அப்பா – அம்மா என்னை மன்னித்துவிடுங்கள். நான் உங்களுக்கு ஒரு கறை. இப்பவிம் நான்...“ என எழுத ஆரம்பித்தான்.*

## *23. டானி*

*செமஸ்டருக்கென்று ஸ்டடி லீவ் விட்டிருந்தார்கள். ஹாஸ்டல் சாப்பாடு வெறுத்துப் போயிருந்ததால் வீட்டிலிருந்து படிப்போமே என்று ஊருக்கு வந்திருந்தேன்.*

*ராத்திரி வந்தது முதலே செமதூக்கம்! பத்துமணிக்கு அம்மா, "ஆமா... இப்படித் தூங்கினால் படித்த கிழிச்சாப்லதான்!" என்று சுப்ரபாதம் பாடின பின்பே எழுந்தேன்.*

*ஹாஸ்டலில் இப்படியெல்லாம் தூங்க முடியாது. கட்டுபாடு, கட்டுப்பாடு! அஞ்சுமணிக்கு எழுணும். ஆறுமணிக்குள் குளியல். அப்புறம் படிப்பு, சாப்பாடு, ஒன்பது மணிக்கு காலேஜ்!*

*வீட்டில் அந்த பிரச்சனையில்லை. அப்பா செல்லம். அம்மா செல்லம்!"ஒரே பொண்ணு. ஒரே பொண்ணு" என்கிற சுதந்திரம். சலுகை அதிகம். சுகமும அதிகம்.*

*விரும்பிய நேரத்தில் எழுலாம். முடியை விரித்துப போட்டபடி டேப்பில் மியூசிக் போட்டு ஆடலாம். கேட்பாரில்லை. தனி ரூம் இருக்கிறது. ஷவரில் நனையலாம். வளையலாம்.*

*ஜன்னல் வழி கடைவீதியில் கண்களைப் பதித்து ஹாயாய் ஈஸிசேரில் நாவல் புரட்டலாம்.*

*ஆனால்... இப்போது அப்படி முடீயவில்லை. முடியாது. பரீட்சை.. பரீட்சை என்கிற உறுத்தல்! ஜாலி மூடேயில்லை. படிப்பு, படிப்பு!*

*ஹாஸ்டலில் என்றால் படிப்பு தானே வந்துவிடும். தோழிகளைப் பார்த்துப் பார்த்து போட்டி எழும். அவள் படிக்கிறாளே... இவள் படிக்கிறாளே... என்கிற பொறாமை ஆவேசத்தைக் கிளப்பும்.*

*வீட்டில் இது ஒரு குறை.*

*நாமாக படிக்க வேண்டும்.*

*இப்போதும்...*

*குளித்து லூஸ் ஹேரில் அமர்ந்திருந்தேன் கையில் பாடப்புத்தகம்! நெட்டுரு போடுவதற்காக நிமிர்ந்தபோது எதிரே டிரஸிங்க டேபிள் கண்ணாடியில் எனது வனப்பு*

*ஈர்த்து. மார்பின் கன பரிமானத்தை பனியன் பறைசாற்றிற்று. வழவழ கன்னம். ரோஸ் கலர் சாயம். செதுக்கின இடுப்பு.*

*"நிவேதா! உன்னை கட்டிக்கப் போகிறவன் கொடுத்து வெச்சவண்டி!"*

*தோழிகளின் கிண்டல். ஞாபகத்தில் நாணம் மிதந்தது. என்னைக் கட்டிக் கொள்ளப் போகிறவன் யார்? எப்படி இருப்பான்?*

*சீ, இப்போ இதுவா முக்கியம்...?*

*படிப்பு, படிப்பு, படி! கவனம் முழுவதும் அதில்தான் இருக்க வேண்டும். சிந்தையை சிதறவிடாதே! படி!*

*எத்தனை முயன்றும் கூட முடியவில்லை. மனதில் என்னவோ ஒரு குறை, வெற்றிடம். எதையோ பறிகொடுத்த மாதிரி. என்ன அது?*

*ஆங்க! மறந்தே போய்விட்டேனே! டானி! எனது செல்ல நாய் வந்திலிருந்து தென்படவே இல்லையே... எங்கேப் போயிற்று?*

*கதவைத் டிதறந்து, சமையலிலிருந்த அம்மாவிடம், "அம்மா! எங்கே என் டானி?" என்று கத்தினேன்.*

*"துரத்தி விட்டுட்டோம்!" என்றாள் அசட்டையுடன்.*

*"துரத்தியா...?"எனக்கு பகீரென்றிருந்தது. "ஏன்...ஏன்?"*

*"அதுக்கு வெறிபிடிச்சிருச்சு!"*

*"அப்படின்னு யார் சொன்னது...?"*

*"பக்கத்துத் தெரு பையனைக் கடிச்சு – ஆபத்தாகிப் போச்சு! அதெல்லாம் உனக்கு ஏன்? நீ போய் படி!"*

*அம்மாவின் மேல் கோபம் கோபமாய் வந்தது. டானிக்கு வெறியா? நெவர்! இருக்காது. இருக்க முடியாது! பக்கத்துத் தெரு பையனுக்கு ஆபத்தென்றால் அதற்கு டானி என்னப் பண்ணும்? அவன் என்னப் பண்ணினானோ... எதைத் தின்றானோ?*

*அறைக்குத் திரும்பும்போது மனது கனத்தது. படிப்பில் கவனம் போகவில்லை. டானி!*

*எத்தனை புத்திசாலியான நாய்! மனித ஜென்மம் எடுக்க வேண்டியது அது. தவறி நாயாகிவிட்டதென்று பலமுறை நினைத்திருக்கிறேன்.*

*அதற்கு அத்தனை அறிவு. அழகு. ஊருக்கு வந்தால் என் பொழுது அதனுடன் தான் கழியும். ஒரு கோடு கட்டினால் போதும் எளிதில் புரிந்துக் கொள்ளும்.*

*என்னுடன் வாக் வரும். பந்தடிக்கும். கையில் அரிக்கிறதென்று சொறிந்தால் ஓடிவந்து தன் காலால் சொறிந்துவிடும். லைட் போடும. ஃபேனை அட்ஜஸ்ட் செய்யும். செட்ஸகூட விளையாடும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!*

*அப்படிப்பட்ட டானிக்கா வெறி...?*

*சான்ஸே இல்லை. போன மாதம்கூட அதற்கு செக்கப் பண்ணி இன்ஜெக்ஷன் போட்டேனே! அப்புறம் எப்படி...?*

*யாரோ கதை கட்டி விட்டிருக்கிறார்கள்... எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. டானி... டானி... என்று கண் கலங்கிற்று. இங்கு தானே டானி படுக்கும்! இந்த ஜன்னல் மேல் ஏறிக்கொண்டு குரைக்குமே!*

*தலைவலி என்றால் மருந்து தேய்ப்பதென்ன, நான் தூங்கும் வரை தானும் தூங்காதே! ஊருக்குப் போகிறேன் என்றால் பஸ் ஸ்டாண்டு வரை வந்து கண் கலங்குமே!*

*அதற்கெப்படி...?*

*புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, திருமபச் சமையல்கட்டிற்குப் போனேன்.*

*“அம்மா! டானி போய் எத்தனை நாளாச்சு?“*

*“என்ன... நான்கைந்து நாளிருக்கும்!“*

*“நான்கைந்து நாளாய் அது திரும்பியே வரலியா...?“*

*“வந்தது. சுடு தண்ணி ஊற்றினேன் பாரு... வீல்... வீல்னு அலறிக்கிட்டு ஓடியே போச்சு!“ என்று அம்மா வெற்றிவிழா கொண்டாடாத பெருமிதம்! எனக்குக் கோபம் கோபமாய் வந்தது.*

*சே! பிள்ளை மாதிரி வளர்த்துவிட்டு கடைசியில் சுடுதண்ணீர்! இத்தனை நாட்கள் அதன் மேல் காட்டின பிரியமெல்லாம் போலியா? ஹம்பக்கா? நாளைக்கு எனக்கும் இந்த நிலமைதானா? எனக்கும் ஏதாவது சீக்கு என்றால் இப்படித்தான் விரட்டிவிட்டு விடுவார்களா...?*

*டானி. எங்கே – எப்படி கஷ்டப்படுகிறதோ? உடனே அதைப் பார்த்தாக வேண்டம்! எங்கேயென்று போய் தேடுவேன்?*

*பாவிப் பசங்கள்! சும்மா இருப்பார்களா? வெறி என்றுச் சொல்லி கல்லாயேயே அடித்துக் கொன்று விடுவார்களே... ! அதை எப்படியாவது காப்பாற்றியாக வேண்டும்.*

*டிரஸ் பண்ணினேன். முடியை கிளிப் பண்ணினபோது காலனியின் மூளை வீட்டிலிருந்து 'சியர்ஸ் என்று கத்துவது கேட்டது. உடன் கைதட்டல். விசில்.*

*பால்கனி வழி எட்டிப் பார்த்தேன். அங்கே ஆட்டோக்களும் சைக்கிளுமாய் குழுமியிருந்தன. தெருவில் ஷாமினா விரித்து, அதன் கீழ் கொடுவாள் மீசையுடன் கோதண்டம் அமர்ந்திருக்க, சுற்றிலும சிங்கிடிகள்! எல்லோருடைய கையிலும் கிளாஸ்கள்!*

*கோதண்டம் முத்திரை குத்தப்பட்ட ரௌடி. ஆளுங்கட்சிக்கு தோஸ்த். அடிதடி, கொலை, ரேப்... என எந்தக் குற்றத்திற்கும் அஞ்சாதவன், வெறியன். அவனைக் கண்டாலே பெண்கள் விலகிப் போவர். அந்தப் பக்கம் சுவாசிப்பது கூட இல்லை.*

*அவனுடைய வீட்டில் எப்போதும் ஓலமிருக்கும். எம்.எல்.ஏ. யிலிருந்து மந்திரி வரை அங்கு வந்துப் போவர். ராத்திரிரியில் திடீர் திடீரென ஆட்டோ வரும். அதிலிருந்து பெண்கள் மயங்கின நிலையில் இபத்துப் போகப்படுவதை நானே எத்தனையோ முறை பார்த்திருக்கிறன்.*

*ஏழை பெண்களுக்கு அழகு கூடாது. அழகுடன் இருந்தால் அப்படியே கொத்திக் கொண்டு வந்துவிடுவான். எதிர்க்க முடியாது, கூடாது. முரண்டு பண்ணினால் வெட்டு குத்து! ஆட்சியும் போலீஸும் அவனுக்கு உடந்தை!*

*அதனால் அவனை எவரும் பகைத்துக கொள்வதில்லை.*

*நமக்கேன் வம்பு என்று ஒதுங்குபவர்களே அதிகம்.*

*அவன் யாரையாவது ஏதாவது செய்விட்டுப போகட்டும், நம்மிடம் வராமலிருந்தால் போதும் என்கிற மனோபாவம்!*

*"நிவேதா! பக்கத்து கடைக்கப் போய் கொஞ்சம் ஏலக்காயும் முந்திரி பருப்பும் வாங்கி வந்துவிடுகிறாயா.?"*

*நான் பதில் சொல்லவில்லை.*

*"உனக்கு பிடிக்குமேன்னு காரட் பாயாசம்!"*

*ஆமாம்! பாயாசம் தான் இப்போ குறைச்சல்! எனக்கு பிடித்த டானியை விரட்டிவிட்டு விட்டுப் பாயாசமாம்!*

*பர்ஸ் எடுததுக் கொண்டு, செப்பல் மாட்டப் போனபோது கதவு அவரசமாயும் ஆவேசமாயும் தட்டப்பட்டது.*

*திறக்க, வெளியே நான்கைந்து பேர் லுங்கியுடனும் அன்டர்வேருடனும் நின்றிருநதனர். அவர்களுடைய கையில் தடி! அரிவாள்! கொடுவாள்! மூக்கில் சாராயம்!*

*எதுவும் புரியாமல் பார்க்க, ''அது இங்கே வந்ததா...?'' என்று கண்களால் தேடினர்.*

*''எது?''*

*''அதாம்மா, உங்க வீட்டு நாய்!''*

*அதற்குள் அம்மா ஆஜராகி, ''இல்லையே... ஏன்?'' என்றாள்.*

*''ரெண்டு நாளாய் எங்களுக்கு டகா கொடுத்துகிட்டிருக்கு. கொஞ்ச முன்னாடி இந்த பக்கம் வந்ததாமே.... பார்த்தாச் சொல்லுங்க! அதை விடுவதாயில்லை.''*

*''ஏன்.?''*

*''என்னம்மா இப்படி கேட்கறே...? வெறிபிடிச்சதை சும்மாவிடலாமா? கொன்று புதைக்கத்தான்!''*

*''வேணாம். என் டானியை விட்டிருங்க. கொல்லாதீங்க!'' என்று அலறினேன்.*

*''கொல்லாமல் என்னப் பண்ணுவதாம்? விட்டால் ஆபத்து! எல்லோரையும் கடிக்கும்!''*

*''கடிக்காது. நான் சொல்வதைக் கேளுங்க. வேணாம். டானி பாவம்.''*

*அவர்கள் என்னை அலட்சியமாய் பார்த்துவீட்டு ''வாங்கனடா போவோம்!'' என்று கிளம்பினர். ''கடிக்காதாம்! நல்ல கதை!''*

*''அண்ணே... டேகெ பூச்செடிக்கிடையில் பாருங்க!''*

*''என்னடா...?''*

*''டானி!''*

*''ஆமாண்டோய்...வாங்கனடா! துரத்துங்க!''*

*''நீ அந்தப்பக்கம் வா! நான் இந்தப் பக்கம்! ஏய்... பார்த்திருசசு. ஓடுது பார்! விடாதே!''*

*''ஏய்... ஏய... நில்லு! நில்லு!''*

*அவர்கள் தடியை ஓங்கிக் கொண்டு ஓட, எனது நெஞ்சு துடித்தது. ''வேணாம்... வேணாம்! அதை ஒண்ணும் பண்ணிராதீங்க!'' என்று அலறிக் கொண்டு பின்னாலேயே ஓடினேன்.*

*''நிவேதா! இங்கே வா!''*

*“என்னை விடும்மா!“*

*“அது வெறி நாய்... ! கிட்டேப் போகாதே! கடிச்சிரும்!“*

*“கடிச்சால் கடிக்கட்டும்!“*

*“எனக்கென்ன பைத்தியமா...?“*

*“ஆமாம் டானிக்கு வெறி. எனக்குப் பைத்தியம். என்னையும் அதோடு சேர்த்து அடிச்சு கொன்னிருங்க!“*

*தடியர்கள் ஆவேசத்துடன் துரத்த டானி காதை சிலிர்த்துக் கொண்டு தாவிற்று. மரத்தை வட்டமிட்டது. முள்வேலியில் அனாயசமாய் பதுங்கி வெளியேறிற்று. உயிரை பிடித்துக் கொண்டு ஓடிற்ற.*

*அவர்களும் சளைக்கவில்லை. லுங்கி நழுடவினதையும் பொருட்படுத்தர்மல் “விடாதே... ஓடுது!“ என்று துரத்தினர். “உனக்கு அவ்ளோ திமிரா.? எங்கே ஓடுவாய் நீ...?“*

*“வேணாம் வேணாம்....விட்டிருங்க!“*

*என் வேண்டுகோட்ள பற்றி எவகுக்கும் பொருட்டில்லை. கவலைப்பட்டதாயும் தெரியவில்லை. மனது டானி... டானி... என்று அஞ்சிற்று. ஓடிவிடு! ஓடித் தப்பித்துவிடு!*

*டானி...ஏன் இங்கே வந்தாய்?*

*எங்காவது வெளியூருக்குப் போய் விடுவதுதானே!பாவிகளின் கண்ணில் ஏன் பட்டாய்? எனக்குத்தெரியும். நான் வந்திருப்பது தெரிந்து என்னைப் பார்க்கதான் வந்திருப்பாய்!*

*அத்தனை விசுவாசம்! அது உனக்கிருக்கிறது. எனக்கிருக்றிது இவர்களுக்கில்லையே... ! பாவிகள்!*

*ஐயோ! ஓட ஓடத் துரத்துகிறார்களே.... ஐயோ! ஒருத்தன் கொடுவாளை விட்டெறிகிறானே!*

*“டானி!“ என்று நான் காதுகளைப் பொத்திக் கொண்டு கதற, ஒரு இம்மியில் குறி தப்பிற்று. இல்லையென்றால்... இல்லையென்றால் கொடுவாள் போன வேகத்திற்கு இந்நேரம் அது கச்சலாகியிருக்கும்.*

*தாங்க் காட்!*

*டானி அதற்கள் ஓடி மறைந்திருக்க, எனக்குச் சமாதானமாயிற்று. அவர்கள் கையை பிசைந்துக் கொண்டு என்னை முறைத்தனர்.*

*“எல்லாம் உன்னாலதான்! உன்னை யார் இங்கே வரச் சொன்னது?“*

*“தயவு செஞ்சு என் டானியை விட்டிருங்க!“*

*“என்னம்மா நீ புரியாமல் பேசிகிட்டு... அதுக்கு வெறி!“*

*“இல்லை. இருக்காது. இருக்க முடியாது! வெறிபிடிக்கிற அளவிற்கு அதற்று வயசாகிவிடவில்லை. இரண்டு வருட குட்டி. தவிர அதற்கு எந்தவித கெட்ட*

*சகவாசமுமில்லை. வெளியே பச்சைத் தண்ணிக்கூட குடிப்பதில்லை. குடிக்கவிடுவதுமில்லை!"*

*"டேய்! அங்கே என்ன பேச்சு. ! வாடா. !"*

*அவர்கள், வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு போருக்குப் போகும் சிப்பாய்கள் போல ஓட ஆரம்பித்தனர்.*

*டானிக்கு எந்த ஆபத்தும் நேர்ந்து விடக்கூடாதே – ஆது தப்பித்து விட வேண்டுமே என்று பிரார்த்தித்துக் கொண்டு வீட்டில் நுழைய- அம்மா, "ஏலக்காய் வாங்கி வந்தாயா.?" என்று கர்ஜித்தாள்.*

*"இல்லை என்று அறைக்குள் போய் கதவை மூடிக்கொண்டு விசும்ப ஆரம்பித்தேன். அவர்களின் துரத்தலும், டானி நாக்கை தொங்கப் போட்டுக கொண்டு ஓடினதும் பரிதாபம் தந்தன.*

*இதற்காகவ அதை வளர்த்தேன்?*

*இப்படி அடித்துக் கொல்லவா பிரியமாய் பழகினேன்?*

*குத்துக்காலிட்டு சோகத்துடன் அமர்ந்திருக்க. கோதண்டத்தின் வீட்டிலிருந்து, "என்னை விடு... என்னை விடு!" என்று பெண் குரல் ஒன்று அலறுவது கேட்டது.*

*ஜன்னல் திரைச் சீலையை விலக்கிப் பார்த்தேன். அங்கே அவனது வீட்டு வாசலில் – வாசல் என்றுக் கூட பார்க்காமல் கோதண்டம் ஏதோ ஒரு பெண்ணை கட்டிப்பிடித்து...*

*அதையும், நான்கு பேர் வேடிக்கைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தனர். சே! மிருகத்தனம். வெறித்தனம். இந்த வெறியனுக்கு முடிவேயில்லையா...?"*

*பின்பக்கமிருந்து அதற்குள் "ஏய்.. ! விடாதே! அப்படியே வளைத்துப் பிடி! மண்டையை பார்த்துப் போடு!" என்று குரல்கள் ஆர்ப்பரிக்க – சட்டென்று பால்கனிக்கு ஓடினேன்.*

*அங்கே மரத்தடியில் பயமும் பரிதவிப்புமாய் – களைப்பும் – இளைப்புமாய் டானி பதுங்கி நின்றிருநதது. அதன் கண்கள் செருகி இருந்தன. நாக்கில் வறட்சி. கால்களில் நடுக்கம்.*

*டானிக்கு அதற்குமேல் ஓடமுடியாதிருக்க வேண்டும். தடிப்பசங்கள் தடியை ஓங்கிக் கொண்டு அப்படியே அதை நெருங்க... நெருங்க...*

*"டானி! ஓடிவிடு! ஓடிவிடு!" என்கிற எனது அலறல்... அதன் காதுகளில் விழுந்ததா. இல்லை விழுந்ததை அதனால் கிரகிக்க முடியவில்லையா என்று தெரியவில்லை.*

*அந்தத் தடியர்கள் – ஆவேசத்துடன் ஆயுதங்களை ஓங்கி அதன் தலையில் –*

*டானி அலறவில்லை. பொத்தென்று சுருண்டு விழுந்தது. நான்தான் "அம்மா... !" என்று அலறிக் கொண்டு ஓடினேன்.*

*மூளைவீட்டில் இன்னமும் அந்தப் பெண் தன் கற்பை காப்பாற்றிக் கொள்ள போராடிக் கொண்டிருந்தாள். கோதண்டம் சாராய வெறியுடன் அவளைக் கண்ணாபிண்ணா படுத்திக் கொண்டிருந்தான்.*

*இங்கே-*

*நிஜ வெறியன் வெளியே கும்மாள மடிக்கிறான். ஆனால் வாயில்லா என் டானியை அடித்துக் கொன்றுவிட்டார்கள்.*

*இவர்களால் – இந்த தடிகழுதைகளால். கோதண்டத்தை இதே மாதிரி அடிக்க முடியுமா... வெட்ட முடியுமா? நடுத்தெருவில் வைத்து கொல்ல முடியுமா...? என் மனது அழுதது, கனத்தது, துக்கத்தில் கரைய ஆரம்பித்தது.*

## *24. என்றும் நான் மகிழ்வேன்*

*மதிவாணன் உற்சாகமாயிருந்தான். அவனடைய உற்சாகத்திற்கு காரணம் – லலிதா. அவளை சந்திக்கத்தான் இப்போது அவன் கிளம்பிக் கொண்டிருந்தான்.*

*முகத்திற்குப் பவுடர் போட்டான். சிசிலடித்தபடி அட்ரஸை படித்துப பார்த்தான்.*

*“லிதா, 113/5 ஏ காரைக்கா முரி ரோடு, எர்ணாகுளம்.“*

*ஷு மாட்டுமபோது – சொல்லாமல் கொள்ளாமல் அவள் முன்பு போய் நின்றால் அவளுக்கு எப்படி இருக்கும்‘ என்று நினைத்துப் பார்த்தான்.*

*அதிர்வாளா... வெட்கப்படுவாளா... கோபிப்பாளா...? இல்லை வீடு எப்படி கண்டுபிடித்தாய் என்று திகைப்பாளா...?*

*பஸ் ஸ்டாப்பில் – இங்கேதானே அவளை முதன்முதலில் சந்தித்தோம் என்று நினைத்தான்.*

*அவள் – இதோ இந்த மூலையில் ஹாண்ட் பேகுடட்ன நின்றிருந்தாள். கூட்டம் நிறைந்திருந்தது. லேசாய் தூறல்.*

*நான் அவளருகில், தவறுதலாய் அவள் காலை மிதித்துவிட “ஆ...“ என்றாள்.*

*“ஸாரி“ என்றேன்.*

*“அவளும் “ஸாரி.‘‘*

*“நான்தானே மிதித்தேன்... நீங்க எதுக்காக ஸாரி சொல்லணும்...?“*

*“என் ஸாரி“ என்று சிரித்தாள். பெண்களின் சிரிப்பு பொல்லாதது. ஆண்களை ஓரே அமுக்காய் அமுக்குவது. அன்று அந்த ஒரு வாத்தையில் நம்மை என்னடி மயக்கிவிட்டாள்....?*

*மதி அதன்பிறகு பலமுறை லிதாவை பஸ்ஸ்டாப்பில் பார்த்திருக்கிறான். பல தடனை எதிர்பார்த்து ஏமாந்துமிருக்கிறான்.*

*அவள் யார் எங்கிருந்து வருகிறாள் என்பதெல்லாம் தெரியாது. பெய்ா மட்டும லலிதா என்று தெரியும்.*

*அவன் ஒரு ஆங்கில தினசரியில் நிருபன். வேலைக்குப் போகும் பெண்களைப் பற்றி ஒரு ஃபிச்சர் தயாரிக்கும்படி ஆசிரியர் சொல்லி இருந்தார். அதற்காகப் படமும் பேட்டியும் எடுக்க ஆரம்பித்திருந்தான்.*

*யார் யாரையோ பேட்டி எடுக்கிறோமே. ஏன் 'என்' லலிதாவையும் இதில் சேர்க்கக்கூடாது என்று தோன்றியது.*

*இர்ண்டு வாரம் முன்பு அவளிடம் கேட்டபோது "வேண்டவே வேண்டாம். என்னை விட்டு விடுங்கள்!" என்று மறுத்தாள்.*

*"ஏன் லலிதா...?"*

*"எதற்கு வம்பு - வேண்டாம்!"*

*"இதில் வம்பு என்ன இருக்கிறது... உன் படம் –கூட பேப்பரில் வரப்போகிறது!"*

*"அதனால்தான் வேண்டாமென்கிறேன்."*

*"அவரவர்கள் பத்திரிகையில் தங்கள் படம் வராதா என அலைகிறார்கள். என்னடாவென்றால்..."*

*"நான் அலையவில்லை. ஆளைவிடுங்கள்!"*

*"போகட்டும். பேட்டி வேண்டாம். என்னை உன் வீட்டுக்கூடாதா.?"*

*"பஸ் வருதுங்க" எனுற நழுவப் பார்த்தாள்.*

*"ஆது உங்க பஸ் இல்லை. சரி வீட்டிற்கு வேண்டாம். அட்லீஸ்ட் ஆபீஸிற்காவது அழைக்கக் கூடாதா..?"*

*"ம்கூம்." என்று சிரித்தாள். மழுப்பல். கள்ளி!*

*அதன்பிறகு அவளை அவன் பஸ் ஸ்டாப்பில் பார்க்கவில்லை. அவள் என்ன ஆனாள்.. எங்கேப் போனாள்? என்கிற யோசனையிலிருக்கும் போது ஒருநாள் பத்திரிகை ஆபீஸிற்குப் போன் பண்ணினாள்.*

*"மதி. இன்னைக்கு ஜோஸ் ஜங்ஷனில் சந்திப்போமா...?"*

*"எப்போ...?"*

*“சாயந்தரம் ஐந்து மணி.“*

*ஐந்து மணிக்கு அவன் சரியாய் ஆஜராகியிருந்தான். “பார்த்தாஸ்“ நிழலில் ஒதுங்கியிருக்க – அவள் வந்தாள்.*

*அவள் முகத்தில் வாட்டம். அவளக்கு என்னவோ நேர்ந்திருக்கிறது. ஏதோ சிக்கலில் மாட்டிக் கொண்டு இருக்கிறாள் என்று புரிந்தது. நம்மிடம் அவற்றை பகிர்ந்து கொள்ளதான் வரச்சொன்னாளோ...?*

*எதுவாயிருந்தாலும் சரி, அவளாய் சொல்லட்டும என்று பேசாமலிருந்தான். ஆனால், அவள் வாயே திறக்கவில்லை.*

*அப்போது யாரோ ஒரு இளைஞன் – நல்ல சிகப்பில் வாட்டசாட்டமாயிருந்தான் – “ஹாய்!“ என்று கையாட்டிவிட்டு நகர...*

*அவள் முகம் இருண்டு போனது.*

*“யார் அது லலிதா..?“*

*அவள் பதில் சொல்லவில்லை.*

*“உன்னை அநிமுகமிருப்பதால்தானே ஹாய் என்றான்... அவனுக்கு கதிலுக்கு நீ ஒரு புன்னகையாவது பூத்திருக்கலாம். இப்படி முகத்தை கடுகடுவென வைத்துக்கொண்டிருக்க வேட்ம்!“*

*“அந்தாள் மோசம்!“*

*“என்ன செஞ்சான். ஏன் மோசம்?“*

*“அவன் யாருன்னே எனக்குத் தெரியாது. ஆள் மாறிப்போய் ஹாய் சொல்லிட்டான்னு தோணுது. சரி, வாங்க போவோம்!“*

*அவளின் போக்கு அவனுக்கு புதிராய் இருந்தது. அதற்குப் பிறகும் கூட அவள் புதிர்மேல் புதிராய் நடந்துகொண்டாள்.*

*பஸ் ஸ்டாப்பில் அவள் தென்படவே இல்லை. வேலையை விட்டு விட்டு போய்விட்டாளோ என்று கூட நினைத்தான்.*

*அவள் யார். பின்னனி என்ன என்பது தெரியாமலேயே அவனுக்கு அவள் மேல் ஒரு பற்றுதல் வந்திருந்தது.*

*அவள் திடீரென போன் பண்ணுவாள். சந்திக்கும் இடத்தையும் நேரத்தையும் தெரிவிப்பாள். போவான்.*

*அவள் தப்பித் தவறிக்கூட தன் விலாசத்தை சொன்னதில்லை. அவனுடன் சினிமாவிற்கு வந்திருக்கிறாள். போர்ட் கொச்சி பீச்சிற்கு போயிருக்கிறார்கள்.*

*எங்கு போனாலும அவளிடம் ஃப்ரீனெஸ் இருக்காது. கண்களில் எப்போதும் ஒரு மிரட்சி. குனிந்த தலை நிமிரவே மாட்டாள்.*

*அவள் யாருக்போ பயப்படுகிறாள். யாரையோ தவிர்க்கப் பார்க்கிறாள் என்பது புரிந்தது. ஆனால் அது என்ன என்று புரிந்துக் கொள்ள முடீயவில்லை. அவளம் சொல்ல தயாராயில்லை.*

*இரண்டு நாள் முன்பு-*

*ராதா நிலாஸில் சாப்பிட்டு முடித்து அவள் டாய்லெட் போன சமயத்தில் அவளுடைய ஹாண்ட் பேகில் இன்லெண்ட் ஒன்று இருப்பதை கவனித்தான்.*

*அது அவளுக்கு வந்த லலெட்டராய் இருக்க வேண்டும்.*

*இது அவளுக்கு வந்திருககும் பட்சத்தில் அவள் விலாசம் இருக்க வேண்டுமே...!*

*இருந்தது. குறித்துக் கொண்டான்.*

*இப்போது அந்த விலாசத்திற்குதான் போய்க் கொண்டிருக்கிறான்*

*வீட்டை கண்டுபிடிக்க முடீயாது என்று நினைத்தாய் லலிதா? இதோ வருகிறன். வந்து உன்னை திகைக்க வைக்கிறேன் பார்! இந்த மதியை யார் என்று நினைத்தாய்...?*

*“காரைக்காமுரி“ எனப்பட்ட அந்த பாரதியார் சாலையில் நம்பரை தேடி அலுதது, எதிர்ப்பட்ட பெண்மணியிடம், “லலிதா வீடு ஏதான்னு அறியாமோ....?“*

*“ஏது லலிதா..?“ என்று எதிர்கேள்வி கேட்டாள்.*

*ஏது லலிதா என்று சொல்வது என யோசிக்கையில் “ஓ! அ லலிதாவானோ, கொறச்சிக்கூட நடந்தால் மதி!“*

*கொஞ்சம் தூரம் நடந்து வேறொருவரை விசாரிக்க, “தோ அந்த பூவரசமரத்து வீடு!“ என்றார்.*

*அந்த பூவரசமரத்து வீடு அத்தனை பெரியது ஒன்றுமில்லை. சுற்றிலும் பந்தாவாய் காம்பவுண்ட் இருந்தது. காம்பவுண்டின் மேல் கண்ணாடிச் சிதறல்கள்.*

*கேட்டை திறந்ததும் முதலில் வயதான மாது ஒருத்தி தென்பட்டாள். லலிதாவின் அம்மாவாய் இருக்குமோ....? இல்லை. பாட்டி!*

*லலிதாவை பார்க்கணு என்றதும், “லலிதாவோட ஆராணு நீங்கள்..?“*

*“ஞான் ஒரு ரிலேடிவானு.“*

*“இவிட இருக்கி.“*

*அவள் காட்டின ஸ்டுல் சற்று பழுதுபட்டிருந்தது. பயந்து பயந்து அமர்ந்தான்.*

*அவன் அமர்ந்து நகம் கடித்த போது இரண்டு. மூன்று பெண்கள் அவனைக் கடந்து சென்றார்கள். கடக்கும் போது கடைக்கண் பார்வையை வீசினார்கள்.*

*இவர்கள் யார்.? லிதாவின் உடன்பிறப்புகளோ. சேச்சே! இருக்‘க்காது. இது லேடீஸ் ஹாஸ்டலாய் இருக்கும்.*

*ஒரு பெண் குளித்து நீர் சொட்டலுடன் டாக்கியை சுற்றிக் கொண்டு வந்தாள்.*

*அவனுக்கு வெட்கமாயிருந்தது. கண்கள் கூசின. அவளுக்கு எதுவும் கூசின மாதிரி தெரிவயவில்லை. இனி யாராவது நீர் சொட்டுகிறார்களா என்று அவன் எட்டி பார்த்தபோது லலிதா வந்தாள்.*

*சட்டென்று எழுந்து பெருமித்துடன் பார்த்தான்.. அவள் முறைத்தாள்.*

*“இங்கே ஏன் வந்தீங்க?“ என்றாள் படபடப்பாய்.*

*“ஏன் லலிதா. உன்னை பார்க்க நான் வரக்கூடாதா..?“*

*“நாலு மணிக்கு சுபாஷ் பார்க்குக்கு வரேன். அங்கே பேசிக்கலாம் இங்கிருந்து கிளம்புங்க!“*

*சுபாஷ் பார்க்கில் மதிவாணன் மூன்று மணிக்கே காத்திருந்தான்.*

அவனுக்கு குழப்பமாயிருந்தது. லலிதா ஏன் அத்தனை பதற்றப்பட்டாள்? ஏன் விரட்டினாள்...? நாம் எத்தனை பாடுபட்டு வீட்டை கண்டுபிடித்தோம். அவள் என்னடாவென்றால்... வரட்டும் நாக்கை பிடுங்கிக் கொள்கிறமாதிரி கேட்க வேண்டும்.

அவள் ஏதோ ஆபத்தில் இருக்கிறாள் என்பது மட்டும அவனுக்குப் புரிந்தது. அவளை அதிலிருந்து எப்படியும் காப்பாற்ற வேண்டும்.

பார்க்கில் நடமாடும் பலகார வண்டி சூடாய் கட்லெட்டை சப்ளை செய்து கொண்டிருநதது. குழந்தைகள் ஊஞ்சலாடின. கண்ணாடிக் கூண்டுகளில் மீன்கள் கலர் கலராய் துள்ளின. தூரத்தில் கப்பல். பாசஞ்சர் படகுகள் தண்ணீரைக் கிழிததுக கொண்டு பறந்தன.

லலிதா வந்தாள். வந்த உடனேயே. “மதி.... உங்களை யார் அங்கே வரச்சொன்னது....?“

“என் காதலியை பார்க்க எனக்கு உரிமையில்லையா...?“

“காதலியா... என்ன சொல்கிறீர்கள்..?“

“ஏய்! என்ன ரூட்டு மாறுது? அப்போ நீ சினிமாவுல மாதிரி சகோதரனாதான் நினைச்சு பழகினாயா...?“

“மதி! நான் சொல்றதை கேளுங்க. நண்பராய் நினைச்சுதான் நான் உங்களோட பழகறேன். நான் உங்களுக்கு ஏற்றவளில்லை.“

“அப்படின்னா என்ன அர்த்தம்...?“ வெகுண்டான்.

“நீங்க காதலிக்கிறதா சொன்ன இவள் புனிதமானவள் இல்லை. விபச்சாரின்னு!“

மதிக்குச் சம்மட்டியால் அடித்தது போலிருந்தது. “என்ன சொல்கிறாய் லலிதா.?“

“ஆமாம். நான் உத்தமி இல்லை. இந்த சிரிப்பு கபடமில்லாதது இல்லை. எங்கிட்ட வர்றவங்க உடல் சுகத்துக்காகதான் வர்றாங்க. அன்பும் ஆதரவும் காட்ட எவரும் இல்லை. அதுக்காக ஏங்கின போதுதான் உங்கள் சந்திப்பு கிடைச்சுது. சதா படுத்து படுத்து உடம்பு வெறுத்துப் போச்சு. இடிதை மறக்கதான் நான் உங்கைள சந்திக்க வருகிறன்.‘‘

அன்று முழுவதும் மதி சுயநினைவில் இல்லை. லிதா மேல் அவனுக்கு வெறுப்பு வந்தது.

அடுத்த நாள் அவள் மேல் அனுதாபம் பிறந்தது.

மூன்றாம் நாள் ஒரு தீர்மானத்துடன் அவளை பார்க்கச் சென்றான்.

லலிதா அறைக்குள் சிலைபோல அமர்ந்திருந்தாள். அவளிடம் எந்தவித சலனமுமில்லை. நோ சிரிப்பு. கண்கள் சோகத்தை சிந்தின.

அவன் கட்டிலில் அமர – சட் சட்டென்று உடைகளை களைய ஆரம்பித்தாள்.

"லலிதா. என்ன இது...?"

"ம்.?" என்றாள் அர்த்தத்துடன் "இது என் தொழில் கூடம். இங்கே படுக்கை விரிப்பதுதான் என் வேலை."

"நோ! நான் அதுக்காக வரலை கத்தினான். "இந்த அவல வாழ்க்கையிலிருந்து உன்னை விடுவிக்கப் போகிறேன்."

"விடுவிச்சு...?"

"சந்தோஷமா குடும்பம்.."

"சாரி மதி! வீண் சிரமம் வேண்டாம். லீம் மீ!" மறுத்தாள். "நான் உங்களை நம்பறேன். நீங்க என்னை மீட்கலாம். ஆனா அதுக்கப்புறம்...?" உடைகளை சரி பண்ணிக் கொண்டாள்.

"இதுக்கு முன்பு ஒருத்தர் என் மேல் அனுதாபப்பட்டு விடுவிச்சார். அவர் கம்பெனியில் வேலையும் போட்டுக் கொடுத்தார். நானும் முதல்ல ஹாப்பியா ஃபீல் பண்ணேன். ஆனா அது நிலையில்லாம போச்சு. வெளியே பலரும் பலவிதமா பார்த்தாங்க. பேசினாங்க. மூன்றாம் நாளே ரெண்டு பசங்க வரியான்னாங்க. நான் கையை ஓங்கினப்போ – "இதுக்கு முன்னாடி வந்தவதானே – இப்போ உத்தமியாயிட்டாயா...?"

அந்தப் பக்கமா வந்த போலீஸ் அவங்களை பிடிச்சுகிட்டு போச்சு. என்னை ஸ்டேஷன்ல கம்ப்ளெயிண்ட் எழுதித் தரச் சொன்னாங்க. போனப்போ எஸ். ஐ. என்னை மோசமா...

மதி! வேணாம் ப்ளீஸ்! வெளியே என்கு சந்தோஷமே கிடையாது. நிம்மதியே கிடையாது!"

"நான் கல்யாணம் பண்ணிகிட்டா...?"

"கேட்க நல்லாதான் இருக்கு. இது அதைவிட பெரிய சித்ரவதை. உறுத்தலிலேயே செத்துருவேன்!"

*“அப்போ இந்த நரகத்திலேயே...“*

*“இது நரகம் தான். ஒத்துக்கிறேன். இங்கே எனக்கு என்ன குறை? பணம் கிடைக்கிறது. தேவைகள் நடக்கின்றன. எங்கேயோ இருக்கிற என் குடும்பம் சந்தோஷப்படுகிறது. தவிர இங்கே நான் மகாராணி!*

*எப்பேர்பட்டவர்களும் என் காலடியில். இங்கே வருபவர்கள் கொஞ்ச நிமிஷத்திற்காகவது என் அடிமை!*

*இதோ நான் வெளியே வந்தா என்னவெல்லாம் அனுபவிக்க வேண்டியிருக்கு! ப்ளீஸ் மதி! வெளியே வந்து சிறகொடிக்கப் படறதைவிட கூண்டுக்குள் அகப்பட்டே இருந்துடறேறே... !“*

*மதிவாணன் விருட்டென்று வெளியேறினான்.*

*அவன் நெஞ்சு பாரமாயிருந்தது.*